










காந்திய முறைப்படி எமது கம்பெனியில் குடிசைத் தொழிலாகத் தினசரி தயாராகும் ஐந்து லட்சம் தீப்பெட்டிகள் எங்களுடைய டிப்போக்களில் செலவாகி வருகின்றன





40 குச்சி 'கோபுரம்', 'சிம்கோ லைட்' 'சிம்கோ சைகிள்' தீப்பெட்டிகளும் 60 குச்சி 'சிம்கோ சிகாரி' தீப்பெட்டிகளும் ஐம்பது டிகிரி பாரன்ஹீட்டில் குச்சி கழிவின்றிப் பற்றும்.



டிப்போக்கள்: அருப்புக்கோட்டை ○ ஆத்தூர் ○ ஈரோடு ○ உடுமலைப்பேட்டை ○ ஊட்டி ○ கண்ணனூர் ○ கருநாகப்பள்ளி ○ காயங்குளம் ○ கொல்லம் ○ கள்ளிக்குறிச்சி ○ சீர்காழி ○ கும்பகோணம் ○ கள்ளிக்கோட்டை ○ விழுப்புரம் ○ சேலம் ○ தர்மபுரி ○ விருதுநகர் ○ கோயமுத்தூர் ○ தலச்சேரி ○ திண்டுக்கல் ○ திருவாரூர் ○ திருத்துறைப்பூண்டி ○ திருச்சிராப்பள்ளி ○ மாயவரம் ○ தூத்துக்குடி ○ தென்காசி ○ பரமக்குடி ○ பாலக்காடு ○ பொள்ளாச்சி ○ மங்களூர் ○ மதுரை ○ மன்னார்குடி, பழனி

கல்கத்தாவில் கிடைக்குமிடம்:
சிவ் பிரதர்ஸ், 50, தர்மதோலா தெரு





# சிம்கோ சிவகாசி.

போன்.63.
தந்தி: 'SIMCO'

## இந்த அழகான, நாலவர் செல்லும் வண்டியில்

# மேலும் ஒருவருக்கு

## இடமிருக்கிறது



புதிய பியட் "1100" மோட்டார் அமைப்பிலும் உழைப்பிலும் மட்டுமல்ல, வசதியிலும் புதியது. விசாலமான சாளரங்களுடன், உள்ளே நிறைய இடமிருக்கிறது - ஐவர் சௌகரியமாகப் பிரயாணம் செய்யலாம். வேறு பல சிறப்புக்களுடன், ஸ்டியரிங் மேல் அமைப்பு; உல்லாசமான குஷன் யாத்திரைக்கான விசேஷ, அதிர்ச்சியைத் தவிர்க்கும், ஸ்பிரிங்குகள்; பாதையில் நேர்த்தியாக ஓடுவதற்கான பிரத்யேக அமைப்பு; பொங்கிவரும் வேக சக்தி; காலனுக்கு அதிகப்படியான மைல் தூரம். புதிய பியட் "1100" மோட்டார் உங்களுக்குப் பெருகிய திருப்தி, வசதி, இன்பம் அளிக்கிறது.

முன்னேற்றத்தோடு தயாரிப்பவர்கள்

**தி பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிட்.**



# பியட் புதிய 1100

விலை: ரூ. 9750/- (எக்ஸ் - பாக்டரி, வரிகள் வேறு)

விற்பனையாளர்:—

டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிட்.,
"டி. வி. எஸ். பில்டிங்", மேற்கு வெளி தெருவு, மதுரை
சுந்தரம் மோட்டார்ஸ் லிட்., மவுண்ட் ரோட், மதராஸ்



☆ அமரர் கல்கி ☆




# கல்கி

## காங்கிரஸ் மலர்

## பொருளடக்கம்

வாழ்க்கை மணம் பெற
மேட்டூர் கெமிகல்ஸாரின்
உன்னத தயாரிப்புகள்



காமதேனு
வனஸ்பதி




காவேரி
பார் சோப்



மேட்டூர்
சந்தன சோப்




காவேரி
சூபர் சோப்



மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.
மேட்டூர் அணை R.S. — சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்டுகள் சேஷசாமி பிரதர்ஸ் லிட்

மலர் 14




இதழ் 26

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# சத்தியமூர்த்தி நகரிலே!

தமிழ் நாட்டின் தவப் புதல்வராக, அரசியல் தீரராக விளங்கி மக்கள் மனத்தில் அமர வாழ்வு பெற்ற அருமைத் தலைவரின் ஞாபகார்த்தமாக ஆவடியில் நிர்மாணமாகியுள்ள சத்தியமூர்த்தி நகரிலே, கண்ணினுமினிய சுதந்திரத்தை ஈட்டிக் கொடுத்த பாரத தேசிய காங்கிரஸ் மகாசபையின் அறுபதாவது கூட்டம் அமோகமாக நடைபெற்று வருகிறது.

அந்தத் தேசியத் திருவிழாவுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, சென்னை ராஜ்யத்துக்கு விஜயம் செய்துள்ள ஸ்ரீ உச்சரங்கராய் நவல் சங்கர் தேபர் அவர்களுக்குத் தமிழ் மக்களின் சார்பில் நல்வரவு கூறுகிறோம்.

மற்றும் அச்சபைக் கூட்டத்தில் கலந்து கொண்டு சிறப்பிப்பதற்காக, பரந்த நமது தேசத்தின் சகல ராஜ்யங்களிலிருந்தும் பிரசன்னமாகி யிருக்கும் நேருஜி முதல் பல மாபெரும் தலைவர்களுக்கும், உலக நாடுகள் பலவற்றிலிருந்தும் விஜயம் செய்துள்ள பிரமுகர்களுக்கும் மனமுவந்து முகமன் கூறுகிறோம்.

பாரத நாட்டின் எட்டுத் திசைகளிலிருந்தும், தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்துள்ள இலட்சக் கணக்கான மகாஜனங்களையும் வாயார வாழ்த்தி மனமார வரவேற்கிறோம்.

பலவிதத்திலும் பாரத நாட்டுக்குச் சென்னை மாகாணமே வழிகாட்டியாக இருந்து வந்ததாகச் சென்ற வாரம் சென்னைப் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறினார்.

1927-ம் வருஷம் சென்னையில் நடந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில்தான், காங்கிரஸ் சரித்திரத்திலேயே முதன் முதலாகப் பூரண சுதந்திரத் தீர்மானம் நிறைவேறியது.

அன்று சென்னையில் கூடித் தேசத்துக்குச் சுதந்திரப் பாதையைக் காட்டிய தேசிய காங்கிரஸ் மகாசபை, இன்று மீண்டும் அதே சென்னையில் கூடி, சுதந்திர இந்தியாவுக்கு சுபிட்சப் பாதையைக் காட்டும் முயற்சியில் முனைகிறது.

நமது பாரதப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு அ. இ. கா. கமிட்டிக்கு விடுத்த அறிக்கையில், "நம்முடைய இலட்சியம் நாட்டின் நலம் வளர்க்கும் நிர்வாகமும், சமுதாயப் பொருளாதாரமுமே ஆகும். இந்த இரண்டும் ஏற்பட வேண்டும் என்றால் நாட்டின் வருமானம் அதிகரிப்பதோடு, அதிக உற்பத்தியும் அதிக மக்களுக்கு வேலையும் ஏற்பட வேண்டும்" என்று உறுதியோடு கூறி யிருக்கிறார். இந்த இலட்சியத்தை அடைவதற்கு ஆங்கிலத்திலாவது தமிழிலாவது வெறும் வாய்பாடுகளைச் சொல்லிப் பயன் இல்லை என்பதையும், நடக்கக் கூடிய முறையில் காரியங்களைச் செய்ய வேண்டும் என்பதையும் அவர் வற்புறுத்தி யிருக்கிறார்.

இம்மாதம் 12ந் தேதி பம்பாயில் பேசிய ஸ்ரீ தேபரும் சோஷலிஸ இலட்சியத்தை நினைப்பூட்டி விட்டு, காந்தியப் பாதையிலேயே சென்று அதை அடைய வேண்டும் என்பதை அருமையாக விளக்கி யிருக்கிறார். மனிதர்களுக்குள் செல்வத்தினாலோ, சமுதாய நிலையினாலோ, இனத்தினாலோ உள்ள உயர்வு தாழ்வுகள் முற்றிலும் அகன்று, பாரத சமூகம் முழுதும் அபேதக் கொள்கையில் இயங்க வேண்டும் என்ற குறிக்கோளை ஸ்ரீ தேபர் வற்புறுத்தி யிருக்கிறார்.

பாரத நாடு சுதந்திரம் பெற்று ஏழு ஆண்டுகள் கடந்து விட்டன. இதுவரை நாம் அடைந்துள்ள சாதனைகள் மகத்தானவைதான் என்றாலும், நலம் வளர்க்கும் நிர்வாகமும், அபேதக் கொள்கையும் எதிர்காலத்தில் ஓங்கி வளர வேண்டும். நமது தலைவர்கள் குறிப்பிட்டுள்ள இந்த இரண்டு பெரும் இலட்சியங்களும் நிறைவேறுவதற்கான பல ஆக்கத் திட்டங்கள் இப்பொழுது வகுக்கப்பட்டுள்ளன. இந்த முக்கியமான சமயத்தில், சுதந்திர இயக்கத்துக்கு முதன் முதல் வழி வகுத்த இந்தச் சென்னை மாநகரில் காங்கிரஸ் கூடுவதும், சிறந்த தொண்டரும் தன்னலமற்ற பணியாளருமான ஸ்ரீ தேபர் அதற்குத் தலைமை தாங்குவதும் இந்த எதிர்கால இலட்சியங்கள் பூரணமாக நிறைவேறுவதற்கு ஒரு நல்ல அறிகுறி என்று திண்ணமாகக் கூறலாம்!

தேசபக்தக் கனலை மூட்டிய அமரகீதத்தை இயற்றி, ''வந்தே மாதரம்'' என்ற அந்தக் கவியின் மூலம் பாரத மக்களின் உள்ளத்தில் என்றும் இடம் பெற்றவர் வங்கக்கவி ஸ்ரீ பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர். அந்தச் சிரஞ்சீவிக் கவியைச் சித்திரிக்கும் வர்ண ஓவியம் :

வந்தே மாதர கீதத்தின் வங்காள மூலம்

वन्दे मातरम् ॥

सुजलां सुफलां मलयजशीतलां शस्यश्यामलां मातरम् ।
शुभ्रज्योत्स्नापुलकितयामिनीं फुल्लकुसुमितद्रुमदलशोभिनीम् ।
सुहासिनीं सुमधुरभाषिणीं सुखदां वरदां मातरम्—वन्दे ॰






பங்கிம் சந்திரர்

## வந்தே மாதரம்

வந்தேமாதர கீதத்துக்கு பாரதியார் இயற்றிய தமிழ் மொழிபெயர்ப்பு

இனியநீர்ப் பெருக்கினை! இன் கனி வளத்தினை!
தனிநறு மலயத் தண்காற் சிறப்பினை!
பைந்நிறப் பழனம் பரவிய வடிவினை!

—வந்தேமாதரம்!

வெண்ணிலாக் கதிர்மகிழ் விரித்திடு மிரவினை!
மலர் மணிப் பூத்திகழ் மரன் பல செறிந்தனை!
குறுநகை யின்சொலார் குலவிய மாண்பினை!
நல்குவை யின்பம், வரம்பல நல்குவை!

—வந்தேமாதரம்!





# ஒழுக்கமே தேசியப் பெருந்திட்டம்

சென்ற மாதமெல்லாம் திருப்பாவையின் இசையொலி தமிழ் நாடு எங்கும் நிறைந்திருந்தது. 'செய்யாதன செய்யோம்'—'தீக்குறளைச் சென்றோதோம்' என்று நம் அருமைத் தாய் ஆண்டாளின் பாட்டைப் பாடி சத்திய பிரமாணம் செய்தோம். அந்தப் பிரமாணத்தைக் காப்போம். இதுவே நாட்டின் நன்மைக்கு மூல மந்திரம்: 'செய்யாதன செய்யோம்.' 'செய்யாதன' என்றால் செய்யக் கூடாத காரியங்களை, 'செய்யோம்' செய்ய மாட்டோம். பெரியோர்கள் 'செய்யாத' காரியங்கள் என்று இறந்த கால எதிர் மறையில் அமைந்த மொழியின் பொருள் அவர்கள் எப்போதும் செய்ய மாட்டாத காரியங்கள் என்பது. செய்யக் கூடாததைச் செய்ய மாட்டோம், பொய் சொல்லிப் பிறருக்குத் தீங்கு உண்டாக்க மாட்டோம். இந்த இரண்டையும் காத்தோமானால் எல்லாவற்றையும் நாடும் நாமும் அடைந்து விடுவோம்.

எப்போதுமே ஒரு துயரம் தீர்ந்து போனால் அது முக்காற் பங்கு மறந்து போய், நினைவுக்குச் சிறியதாகவே தோன்றும். நடை முறையிலிருக்கும் துன்பம் சிறியதாயினும் பெரிதாகத் தோன்றும். இது காரணமாயிருக்கலாம்—சில சமயம் 'ஐயோ, இதற்காகவா சுயராஜ்யத்துக்குப் பாடுபட்டோம், முந்திய காலமே நன்றாக இருந்தது போலிருக்கிறதே!' என்றெல்லாம் அவசரத்தில் நடைமுறையிலிருக்கும் துன்பங்களைக் கண்டு சொல்லத் தோன்றுகிறது. நான் மட்டுமல்ல, பலரும் இம்மாதிரி சில சமயம் அவசரத்தில் எண்ணி வருந்துவதுண்டு. ஆனால் அவர்கள் வெளியில் சொல்லிக் கொள்ள மாட்டார்கள். நான் சொல்லுகிறேன். குறை கூறுவதற்கல்ல, குறை தீர்க்கத்தான் சொல்லுகிறேன்.

அன்னியருடைய ஆதிக்கம், ஆர்ப்பாட்டம், அகம்பாவம், இவை நம் நாட்டில் இருந்து வந்த போது, அவற்றை இப்போது ஞாபகப் படுத்திக் கொண்டால், —அதிலும் கொஞ்சம் வயதானவர்கள், நேரில் அனுபவித்தவர்கள் ஞாபகப் படுத்திக் கொண்டால் -- விடுதலையின் பெருமையை உணர்ந்து தற்போது எத்தனை விஷயங்கள் எவ்வளவு சீர்கேடான நிலைமையிலிருந்தாலும் பொறுத்துக் கொண்டு சமாளிக்கலாம் என்று தோன்றும். அன்னிய ஆட்சி, அன்னியர் அகம்பாவம் என்கிற நரகக் கடலிலிருந்து தப்பிக் கரை யேறினோமே அது சின்ன விஷயமல்ல. நம்மை நடத்திய பெரியோர்கள் அனைவருக்கும், ஆண்டவனுக்கும் நம்முடைய நன்றியை என்றென்றும் செலுத்துவோம்.

ஆனால் பல காரணங்களினால் அந்தக் காலத்தில் ஜனங்களுக்கிருந்த பாப பயமும் யோக்கியதையும் இந்தக் காலத்தில் குறைந்து போயிற்று என்பதைப் பார்க்கும் போது பெருந் துக்கம் உண்டாகிறது. 'இதற்காகவா பாடுபட்டோம்?' என்று சொல்லத் தோன்றுகிறது.

ஏழைத் தொழில்களில் ஜீவனம் செய்பவர்களின் நிலைமை முந்திய நாட்களைவிட மிக்க மேன்மை அடைந்திருக்கிறது. இன்னும் அநேக நல்ல விஷயங்களையும் பார்த்து சந்தோஷப் படலாம். ஆனால் மொத்தத்தில் சாமர்த்தியசாலிக் கூட்டத்தாரின் யோக்கியதை ரொம்ப



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்






பக் குறைந்து போயிருப்பதைப் பார்த்தால் பயமாக இருக்கிறது. வர வர இப்படியே கெட்டுப் போய்க் கொண்டு போனால் நாடு என்னவாகும் என்று பயப்பட வேண்டியதாகிறது. சுயநலக் கருத்தும் மோசமும் பலவிதத் திருட்டுச் சுபாவமும் குறைந்தாலொழிய, சமூக மானது சுக வாழ்க்கை அடையாது.

செல்வ நிலை உயர்வது மட்டும் போதாது. சமுதாயம் சுகமாக இருக்க வேண்டுமானால் பண்பட்டவர்கள் என்கிற கூட்டம் நல்ல யோக்கியர்களாக இருக்க வேண்டும். படித்தவர்கள், தேர்தல்களில் நிற்க ஆசைப்படுபவர்கள், வியாபாரிகள் முதலியவர்கள் பாபத்துக்கு பயந்தவர்களாக இருக்க வேண்டும். இவர்கள் உள்ளங்களில் அன்பும், அறிவும், சத்தியமும் முழு இடம் பெறுவிட்டால் சமூக முன்னேற்றத்துக்கு வழியில்லை.

நாம் விரும்பும் அன்பையும் சத்தியத்தையும் எப்படி நாட்டில் விருத்தி செய்யப் போகிறோம் என்பது பெரியோர்களின் கவலை—இதை ராஷ்டிரபதி, பிரதம மந்திரி இவர்கள் முதற்கொண்டு அடி வரையில் எல்லா தேச பக்தர்களும் கவலையுடன் சிந்தனை செய்து வருகிறார்கள். அரசாங்கத் தலைவர்கள் மட்டுமல்ல, எல்லாப் பெரியோர்களும் சிந்தனை செய்கிறார்கள், கவலைப்படுகிறார்கள்.

மக்களின் நடவடிக்கை இந்தியாவில் சீர்ப்பட்டு விட்டது என்கிற நிலைமை ஏற்பட்டால் அதன் பின் நம்மைப் பிடிப்பார் உலகத்தில் இல்லை. மேற்கிலும் இல்லை, கிழக்கிலுமில்லை. அது இல்லையானால் வேறு என்ன வெற்றி அடைந்து அதைப் பற்றிப் புகழ்ந்து பேசிக் கொண்டாலும் எல்லாம் பயனற்ற குப்பையாகத்தான் போகும்.

பாப பயம் மக்கள் உள்ளங்களில் உண்டாக வேண்டும். முன்னாளில் இது எப்படி உண்டாயிற்று? யோக்கியதை, சத்தியம், அன்பு இவை முன்னாட்களில் எப்படி உண்டாயின? இதைச் சரியாக ஆராய்ந்து யோசித்தோமானால் இப்போது என்ன செய்ய வேண்டும் என்பதைக் காண்போம். எந்த விதை விதைத்துப் போன வருஷம் பயிர் எடுத்தோமோ அதே விதையைத்தான் மறுபடியும் விதைக்க வேண்டும். அந்தப் பயிர் வேண்டுமானால், ஆண்டவனை நினைவில் வைத்து தெய்வ பக்தியைப் பெருஞ் செல்வமாகக் கருதினோமானால் கவலை தீரும்; நல்ல நிலைமை ஏற்படும். விடுதலை அடைந்ததின் பயனைப் பெறுவோம். இது என் முடிவான முடிவு.



இதற்கு வேறு வழியில்லை.—'பிரசாரம்' செய்தால் மட்டும் போதாது, மதிப்புக்குரிய மக்களின் ஆதரிசமே இதற்கு வழி. முக்கியஸ்தர்களின் நடத்தையில் மக்கள் உதாரணம் காண வேண்டும். உதாரணத்தைக் கண்டுதான் தரும உணர்ச்சியும், தீவினை அச்சமும் உண்டாகும். பேச்சும் பிரசங்கமும் படிப்பும் வெகு தூரம் செல்லாது.

இதுதான் மிகப் பெரியதும் அடிப்படையானதுமான தேசியத் திட்டம். இதற்கு ஐந்து ஆண்டு காலம் வரையும் கணக்குப் போட வேண்டியதில்லை. ஒரு ஆண்டே போதும். ஈசன் அருள்வானாக. குருகூர் மாறனும் மாணிக்க வாசகப் பெருமானும் அருள்வார்களாக. நம் மக்களின் உள்ளங்களை முன்னாளில் கரைத்து ஆட்கொண்ட நல்லார் கூட்டத்து அனைவரும் அருள்வார்களாக.

நம்முடைய நாட்டின் புராதன வழக்கத்தின்படி பல சமயங்களுக்கும் நம்முடைய நாட்டில் இடமுண்டு. எல்லா சமயத்தாருக்கும் சம இடமுண்டு. எல்லா சமயங்களும் ஒழுக்கத்தையும் ஈசுவர பக்தியையும் வளர்க்கும் என்பது நம்முடைய முன்னோர்களின் முடிவு. ஆனபடியால் அநாதி காலமாக நம்முடைய நாட்டில் அரசு புரிந்தவர்கள் எல்லா சமயத்தாருக்கும் இடம் கொடுத்து வந்தார்கள். அந்த அந்த சமயத்தை அந்த அந்த சமயத் தலைவர்கள் பாதுகாத்து வந்தார்கள். அரசன் அதில் பிரவேசிக்க மாட்டான்; தன் சமயத்தை விட்டுவிட மாட்டான். ஆனால் மற்றவர்கள் பேரில் அதை வற்புறுத்தியதில்லை. அரசாட்சியில் பாரபட்சமிருக்கக் கூடாது. இதுவே தற்போதைய ஆட்சியின் கருத்தும்.

## அன்னைக்கு அஞ்சலி!

நம்முடைய சுதந்திர பாரத நாட்டின் சின்னமாக விளங்கும் அசோக ஸ்தூபியும், சக்கரமும் எத்தனை கலையழகு நிரம்பியவை. உலக நாடுகளின் சின்னங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது நம்முடைய தோள்கள் விம்முகின்றன. அன்பும் அஹிம்சையும், சத்தியமும் என்ற அடிப்படையிலே எழுந்த நவ பாரத சமுதாயம், இந்த அரிய கொள்கைக்காகவே, என்றும் நிரந்தரமாக உழைக்கும் என்ற தீர்மானத்தை நம்முடைய நாட்டின் சின்னமே உலகுக்கு எடுத்துக் கூறுகிறது. முப்பத்தாறு கோடி மக்களுக்கும் அன்னையாக, இலட்சியமாக, தெய்வமாக விளங்கும் பாரத அன்னை கையிலே தர்மக் கோல் தாங்குகிறாள். அவளுடைய உள்ளங்கைக் கமலத்தில் மகாத்மா பூத்து மலர்ந்து ஆசி தருகிறார். எந்த மதமும் இங்கே வளரும், எந்த முரண்பாட்டுக்கும் இங்கு இடமில்லை என்று கோபுரங்களும், ஸ்தூபிகளும் அறிவிக்கின்றன. வீரத்துக்கும், கம்பீரத்துக்கும் சான்றுகளாக யானைகள் புடை நிற்கின்றன. நம்முடைய ஓவியர் 'மணியம்' சித்திரித்துள்ள இந்தப் படத்தில், கைத் தொழிலும், தர்மப் பண்பாடும் ஆதாரச் சட்டமாகவே காட்சி தருகின்றன. இத்தனை அணிகளோடு நிற்கும் பாரத அன்னைக்கு அஞ்சலி செய்கிறோம். சென்னை ஆவடியில் கூடியுள்ள அன்னையின் தவப் புதல்வர்கள், நம்முடைய ஒப்பற்ற தலைவர்கள், நாட்டு நலனுக்காகச் செய்யும் முயற்சிகளுக் கெல்லாம் அவள் ஆசி யருள வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

அட்டைப்பட விளக்கம்

240 வியாதிகளுக்குக் கைகண்டது

# ஆர். எஸ். பதி மருந்து

(ரிஜிஸ்டர்டு)

இது வீட்டிலிருந்தால் ஒரு டாக்டர் இருப்பது போலாகும் தலைவலி, ஜலதோஷம், ஜன்னி, வாய்வுக் குத்து, கைகால் வலி, காலரா முதலிய அனேக வியாதிகளைக் குணமாக்கும்

புட்டி 1-க்கு விலை அணா 10

(தபால் செலவு வேறு)

எச்சரிக்கை: போலி மருந்துகளை வாங்கி ஏமாறுதீர்கள். எங்கள் ஆறுமுக முத்திரையையும் டாக்டர் போட்டோவையும் கவனித்துப் பார்த்து வாங்குங்கள்.

P. B. No. 99

## ஆர். எஸ். பதி அண் கோ.

(REGD.)

214 & 215, மேல மாசி வீதி :: மதுரை

விற்பனை டெப்போ: மேலக்கோபுரம் உட்புறம், மதுரை

*இலங்கை ஏஜண்டு: M. C. A. ஹமீதா அண்டு கோ., 20, டாம் தெரு, கொழும்பு*
*பர்மா ஸ்டாக்கிஸ்ட்: தேவர் கதம்ப நிலையம், 316, மொகல் வீதி, ரங்கூன்*
*மலேயா ஸ்டாக்கிஸ்ட்: இந்தியன் ஸ்டோர், 43, கேம்ப் ரோடு, போர்ட் சுவெட்டன்ஹாம்*






# ரோஜா மார்க் நெய்



புதிய வெண்ணெயி லின்றும் தயாரிக்கப்பட்டு சென்னை அரசாங்க உணவு கலப்படத் தடைச் சட்டத்தின் விதிகளுக்கிணங்க, இயற்கை குணங்களையும், இரசாயன பரிசோதனை முடிவுகளையும் கொண்டுள்ளது.

## லிங்கம் & கோ, கோயமுத்தூர்.

# நமது கடமை



## நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம்

நம் நாடு பல நூற்றாண்டுகள் பிற நாட்டினருக்கு அடிமைப்பட்டிருந்த காரணத்தால் நம் பொருளாதாரம் பெரிதும் சீர்குலைந்து விட்டது. மக்களின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, குடியிருப்பு வசதி, கல்வி வசதி, வைத்திய வசதி, இவைகள் எல்லாவற்றிலுமே பற்றாக்குறை ஏற்பட்டு விட்டது. இந்நிலைமையை மாற்றி மக்களின் சுபிட்ச வாழ்க்கைக்கு அடிகோலும் மகத்தான பணியில் இன்று ஈடுபட்டிருக்கிறோம்.

சுதந்திரத்துக்காகப் போராடிக் கொண்டிருந்த காலத்தில் சுதந்திரம் கிடைத்தவுடனேயே நம்முடைய குறைகள் எல்லாம் நீங்கி விடும் என்று நம்மில் பலர் எண்ணிக் கொண்டிருந்தோம். அரசியல் சுதந்திரம் பெற்று நாட்டின் நிர்வாகத்தை நாம் ஏற்றுக் கொண்ட பின்னர் சுதந்திரத்தைப் பெறுவதைவிட, பெற்ற சுதந்திரத்தைப் பயன்படுத்தி மக்களின் நல்வாழ்வுக்கு ஏற்பாடு செய்வது மிகவும் கடினமான காரியம் என்பதை இன்று உணருகிறோம். சுதந்திரம் பெற்று ஏழு ஆண்டுகள் ஆகியும் நம்முடைய குறைகள் தீரவில்லை என்று பலர் குறை கூறுகின்றனர். இம்மனப்பான்மைக்குக் காரணம் நம்முன் இருக்கும் பிரச்னையை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ளாததுதான்.

ஒரு நாட்டின் பொருளாதாரத்தை மாற்றி அமைக்க வேண்டுமானால் அந்த நாட்டின் வசதிகளை எப்படி நல்ல முறையில் பயன்படுத்துவது என்று திட்டம் இடுவது மிகவும் அவசியம். இது பொருளாதாரத் துறையில் பின்னணியில் இருக்கும் நாடுகளுக்கு மட்டும் அல்ல, முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளுக்கும் பொருந்தும். இதை அடிப்படையாகக் கொண்டுதான் நம் நாட்டின் முதல் ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுப்பதற்கும் வேண்டிய காரியங்களைச் செய்து வருகிறோம். திட்டம் வகுப்பதில் உள்ள சில தத்துவங்களை விளக்க விரும்புகிறேன்.

உதாரணத்துக்கு ஒரு தனி நபரின் வாழ்க்கையை எடுத்துக் கொள்ளலாம். அவருக்கு மாதம் நூறு ரூபாய் வருமானம் என்று வைத்துக் கொள்வோம். இந்த வருவாயை வைத்துக்கொண்டு அவர் வாழ்க்கை வசதிகளை யெல்லாம் செய்துகொள்ள வேண்டியதாக இருக்கிறது. இந்த நூறு ரூபாயையும் தன்னுடைய அன்றாடத் தேவைகளுக்கு ஒருவர் உபயோகப்படுத்தி விடலாம். சாப்பாட்டுக்கு ஹோட்டலில் ஏற்பாடு செய்து கொள்ளலாம். குடியிருப்பதற்கு வாடகைக்கு வீடு எடுத்துக் கொள்ளலாம். இப்படிச் செலவு செய்யும் போது முழு வருவாயும் அவர் உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு உபயோகப்படுகிறது. அவ்வாறு இல்லாது ஒரு மூலதனத்தைக் கொண்டு தனக்கென ஒரு வீடு தானே கட்டிக் கொள்ளவும், வீட்டிலேயே சமையல் ஏற்பாடு செய்து கொள்ளவும் முன் வரலாம். அந்த மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதற்காகத் தனக்குள்ள வருவாயில் இருந்து ஒரு பகுதியை ஒதுக்கி வைக்கலாம். அப்படி ஒதுக்கி வைக்கப்பட்ட வருவாய் அந்த மனிதருக்கு உடனடியான தேவைகளைப் பூர்த்தி செய்வதில்லை. பிற்கால வாழ்க்கையில் தொடர்ந்து அதன் பலனை அனுபவிப்பதற்கு ஏதுவாகும்.

புதிய உதயம் !






காங்கிரஸ் தலைவர் தேர்தலில் அபூர்வமான புதுவழி காட்டிய ஆவடி காங்கிரஸ் சரித்திரத்தில் இடம் பெறும்.












கெட்டிக்காரக் காவல்காரர்!




யாருக்குச் சமாதி?



இதே மாதிரிதான் ஒரு தேசத்தின் பொருளாதார அமைப்பும். சில வசதிகள் மக்களின் அன்றாடத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு உபயோகமாகின்றன. மற்றப் பகுதி பிற்காலத்தில் தொடர்ந்து தற்போதைய சந்ததிகளும் வருங்கால சந்ததிகளும் அனுபவிக்கக் கூடிய முறையில் உபயோகப்படுத்தப் படுகின்றது. உணவு உற்பத்தி செய்கிறோம். உடை உற்பத்தி செய்கிறோம். இவைகளினுடைய முழுப் பயனும் உடனடியாக மக்களுக்குக் கிடைக்கிறது. ஆனால் பல கோடி ரூபாய்கள் செலவழித்து ஒரு நீர்த் தேக்கத்தைக் கட்டுகிறோம். நாம் செலவழித்த பணம் பூராவும் மக்களுக்கு உடனடியாகப் பயன்படுவதில்லை. தொடர்ந்து பல நூற்றாண்டுகள் உணவு உற்பத்திக்காக அது பயன்படுகிறது!

ஒரு துணி ஆலையை நிர்மாணிக்கிறோம். அதற்குச் செலவழிக்கின்ற பணம் பூராவும் மக்களுக்கு உடனடியாகப் பயன் தருவதில்லை. அந்த ஆலையில் பல வருஷங்கள் துணி உற்பத்தியாவதன் மூலம் சிறிது சிறிதாக மக்களுக்குப் பயன்படுகிறது! திட்டங்களை வகுப்பதில் இந்த அம்சத்தை முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாயிருக்கிறது! நமக்கு இருக்கும் மொத்த வசதிகளில் எவ்வளவு உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் உபயோகப் படுத்த வேண்டும்; எவ்வளவு பிற்கால வாழ்க்கைக்கான திட்டங்களில் செலவிட வேண்டும் என்பதை நிர்மாணிப்பது நிபுணர்களுடைய முக்கிய வேலை.

இரண்டாவது பகுதியில் செலவழிப்பது தற்போதையத் தேவைகளைத் தியாகம் செய்து நிரந்தரமாகப் பிற்கால வாழ்க்கைக்கு அடிகோலுவதாகும்.

ஒரு நாட்டில் இருக்கும் பொருளாதார நிலைமையில் இந்த இரண்டு பகுதிகளும் எப்படி வகுக்கப்பட வேண்டும் என்பதுதான் முக்கியமான பிரச்னை. மேலே சொன்ன உதாரணங்களை விட்டு வேறொரு உதாரணத்தை எடுத்துக் கொள்ளலாம்.

துணி உற்பத்தி சாலை இங்கு ஏற்படுத்துவதற்குப் பதிலாகத் துணி உற்பத்தி செய்யும் இயந்திரங்களைத் தயார் செய்யும் நிலையங்களை ஏற்படுத்த முன் வரலாம். இது இன்னொரு படிமேல். மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு முதலிலேயே இந்த நிலையங்களிலிருந்து இயந்திரங்கள் செய்து, அவ்வியந்திரங்கள் துணியை உற்பத்தி செய்யும்போது தான் நேரடியாக மக்களுக்கு வந்து இது பயன்படுகிறது.

ஒரு பொருளாதாரத் திட்டத்தை வகுக்கும் போது இயந்திரங்கள் உற்பத்தி செய்யும் நிலையங்களை நமக்குள்ள வசதிகளைக் கொண்டு ஏற்படுத்தலாம் என்பதையும் நிபுணர்கள் நிர்ணயிக்க வேண்டும்.

இந்த வேலையில்தான் நம் திட்டக் கமிஷன் இன்று ஈடுபட்டிருக்கிறது.

பொது மக்களின் சுபிட்சம் நாட்டின் பொருள் உற்பத்தியைப் பொறுத்து மட்டும் இல்லை. அதை வாங்கக்கூடிய சக்தியும் மக்களுக்கு இருந்தால்தான் உற்பத்திப் பெருக்கின் மூலம் அவர்கள் பயன்பெற முடியும். ஆகவே பொருளாதாரத் திட்டம் அமைப்பதில் வெறும் உற்பத்தியை மட்டும் கவனித்துக் கொண்டு போனால் பொது மக்களின் வறுமையைத் தீர்த்துவிட முடியாது. மக்களின் வாங்கும் சக்தியை எப்படி உயர்த்துவது என்கின்ற பிரச்னையையும் நாம் கவனித்தாக வேண்டும். இன்றைக்கு நம் நாட்டில் இருக்கக் கூடிய பெருவாரியான மக்களுக்கு வாங்கும் சக்தி கிடையாது. அதற்குக் காரணம் அவர்களுக்குப் போதிய வருவாய் இல்லை. மக்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டுமானால் மக்கள் எல்லாருக்கும் பயன்படும் படியாகத் தங்கள் உழைப்பைப் பயன்படுத்துவதற்கான வேலையும் உழைப்புக்கு ஏற்ற ஊதியமும் அவர்களுக்குக் கிடைக்க வழி செய்ய வேண்டும்.

இந்த வேலை கொடுக்கும் திட்டம் எந்தப் பொருளாதாரத் திட்டத்திலும் அடிப்படையாக அமைய வேண்டியது அவசியம்.

இயந்திரங்களைக் கொண்டு சில மனிதர்களின் சக்தியை உபயோகப்படுத்தி உற்பத்தியைப் பெருக்கி விடலாம். ஆனால் அதன் மூலம் கோடிக்கணக்கான மக்களின் வறுமையைப் போக்கி விட முடியாது. ஆகவே நம் பொருளாதாரத் திட்டம் இந்த மனித சக்தி முழுவதையும் உபயோகப்படுத்தி அதன் மூலம் உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஏற்பாடு செய்வதாக இருக்க வேண்டும். இந்தப் பிரச்னைதான் இயந்திரங்களை எவ்வளவு தூரம் நாம் உபயோகப் படுத்த வேண்டும், மனித சக்தியை நாம் எவ்வளவு தூரம் உபயோகப்படுத்த வேண்டும் என்கிற பிரச்னை. வேறு விதமாகச் சொன்னால் பெரிய இயந்திரத் தொழில்கள், சிறு இயந்திரத் தொழில்கள், குடிசைத் தொழில்கள், இம் மூன்றும் எப்படிக் கையாளப்பட வேண்டும் என்பதே. இந்தப் பிரச்னையும் இன்றைக்குத் திட்டக் கமிஷனின் பரிசீலனையில் இருக்கிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பிற்காலப் பொருளாதார அபிவிருத்திக்கான வேலைகள் தற்போதைய மக்களின் அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்தல், மக்கள் எல்லாருக்கும் வேலை கொடுத்து அதன் மூலம் அவர்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல் இவைகளை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டியது அவசியம். இப் பிரச்னைகள் எவ்வளவுக்கு எவ்வளவு நல்ல முறையில் திட்டத்தின் மூலம் தீர்க்கப் படுகின்றனவோ அவ்வளவுக்கு அவ்வளவு நாடும் மக்களும் சுபிட்சமடைவார்கள்.

இந்த மகத்தான பணியில் காங்கிரஸ் ஸ்தாபனம் ஈடுபட்டு உழைத்துக் கொண்டிருக்கிறது. நம் ஒத்துழைப்பை அந்த ஸ்தாபனத்துக்குக் கொடுப்பது நமது கடமை.

புதிய 1100

# பியட்

★ வசதியாக உட்கார இடம்

★ நவீன அமைப்பும், நீடித்த உழைப்பும்

★ பிரயாண சாமான்களுக்கு போதிய வசதி

★ குறைந்த சிலவில் சிறந்த பிரயாணம்



**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிமிடெட்.**

மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம்.

**சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்.**

மவுண்ட் ரோடு, சென்னை - 6





## அண்ணல் காந்தி

பாரத நாட்டின் தந்தை. 'விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்ற' தேசத்துக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த மகான். சத்தியம், அஹிம்சை, அன்பு என்ற அறநெறியை அரசியலிலே கடைப்பிடித்து, மானிலத்தை வாழ்விக்க வந்த மகாத்மா!



## அன்னை கஸ்தூரி

மகாத்மாவின் சத்திய சோதனை என்ற கனலில் ஸ்புட
மாகி நின்ற பத்தினித் தெய்வம். பெண் குலத்துக்குப்
பெருமை தேடித் தந்த அன்னை. நாட்டு மக்களின் உள்ளங்
களில் எல்லாம் நின்று சுடர் வீசும் பாரத குல விளக்கு!



## தீரர் படேல்

பார்டோலி சத்தியாக்கிரகத்தை நடத்தி, பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தைப் பணிய வைத்த சர்தார். சுமார் அறுநூறுக்கு மேற்பட்ட சமஸ்தானங்களை ஒன்று சேர்த்த சிம்மம். இரும்பு நெஞ்சு படைத்திருந்த தலைவர்!



## கவிக் குயில் சரோஜினி

காங்கிரஸ் மகாசபையின் அக்ராசன பீடத்தை அலங்கரித்த பெண்ணரசி. மாகாண கவர்னராகப் பதவியேற்ற முதலாவது மாது சிரோமணி. பாரத நாட்டின் பெண்மைப் பண்புகளின் பெருமையை உலகுக்கு அறிவித்த கவியரசி!



# அரசியலும் பொருளாதாரமும்

லெப்டினன்ட் கவர்னர் கு. சந்தானம்

இராட்டினத்தின் மேல் மிதமிஞ்சிய கவனம் செலுத்தி, விஞ்ஞானத்தையும் கலைகளையும் அலட்சியம் செய்யலாகாது என்று வாதித்த மாகவி ரவீந்திரநாத் டாகூருக்குப் பதிலளிக்கையில், "பட்டினியால் மடியும் மனிதனுக்குக் கடவுள்கூட உணவாகத்தான் காட்சியளிக்கக் கூடும்" என்று காந்தியடிகள் கூறினார்.

இது தனி மனிதனுக்கு மட்டுமல்ல, ஒரு சமூகத்துக்கும் பொருந்தும். வறுமை மிகுந்த இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்தையே முக்கிய லட்சியமாகக் கருதுவது சகஜம். நாட்டின் செல்வத்தைப் பெருக்கி, அதை நியாயமாகப் பங்கிட்டு, தொழிலும் கூலியும் கொடுத்து, வறுமை நீக்கி, அறியாமை அகற்றி, நோய் தடுத்து, சுகத்தைப் பெருக்குவது இந்திய மக்களின் முக்கிய வேலை என்பதில் சந்தேகமில்லை. இத் துறையில், நமது மத்திய, பிரதேச அரசாங்கங்கள் பகீரதப் பிரயத்தனங்கள் செய்து வருவதைக் கண்டு மகிழ்ச்சி யடைகிறோம்.

அரசியல் உலகில் அடைந்த சுதந்திரத்தைப் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பயன் படுத்துவது அவசியமே. எனினும், செல்வமே நமது பிரதானலட்சியம், சுதந்திரமும், ஜனநாயகமும் அதன் கருவிகளே என்ற எண்ணம் தவறானது. அது மக்களிடம் பரவுமாயின் மகத்தான அனர்த்தம் ஏற்படும்.

'செல்வ வளர்ச்சியே ஏக லட்சியமாயின், அதனை விரைவில் கொடுக்கக் கூடிய எம்முறையையும் கையாளலாம். பழைய வழக்கங்களையும், சமூக ஏற்பாடுகளையும் ஒழித்து, சோம்பேறிகளிடம் வேலை வாங்கி, புதிய சமூகம் அமைப்பதற்குக் கடுமையான முறைகள் தேவை. அதற்கு எதேச்சாதிகாரம் ஓரளவு இன்றியமையாதது. அதைக் கையாண்டு பொருளாதார லட்சியம் கைகூடிய பின் எவரையும் அடக்க அவசியமிராது. எதேச்சாதிகாரம் தானே மறைந்து விடும்' என்று வாதிப்பது நியாயமாகத் தோன்றும். ஆனால் இது ஓர் கொடிய மயக்குவாதம். இதில் மாட்டிக் கொள்ளும் சமூகம் சீர்கெட்டு, முடிவில் அழிந்து விடும்.

* * *

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் தோற்று விட்டதால், ஹிட்லரையும், முஸோலினியையும் அவமதித்துத் தூற்றுவது சுலபம். ஆனால் அவர்கள் அதிகாரம் ஏற்ற பொழுது அவர்களை எவ்வளவு புகழ்ந்தார்கள் என்பதை மறக்கலாகாது. தங்கள் எதேச்சாதிகாரத்தைக் கொண்டு அவர்கள் வெகு விரைவில் மிகப் பெரிய காரியங்களையும் செய்தனர். அவர்களையும் அவர்கள் ஆண்ட நாடுகளையும் அழித்தது அவர்களின் சக்திக் குறைவில்லை, குணக் குறைவில்லை. கொள்கைகளின் குறைவே. அரக்க மதத்தைப் பற்றினால் அரக்கனாகாமல் இருக்க முடியாது. அதன் மூல தத்துவம் எதேச்சாதிகாரம். சில காலம் அது பிரகாசமாகத் தோன்றினாலும், அபூர்வ காரியங்களைச் சாதித்தாலும், முடிவில் கொடுமையிலும், குழப்பத்திலும் கொண்டு போகாமல் விட்டு விடாது.

எதேச்சாதிகாரம் பல உருவம் எடுக்கலாம். பல வேஷம் போடலாம். ஆனால் அதன் குணமும், பலனும் மாற மாட்டா. சீதையை சூர்ப்பனகை, தானே தூக்கிச் செல்ல முடியவில்லை. பொன் மான் உருவெடுத்த மாரீசனும் சந்நியாசி வேடம் பூண்ட இராவணனும் அபகரித்துச் சென்றனர். நாம் மிகவும் ஜாக்கிரதையாக இல்லாவிடில், நமது சுதந்-



திரத்தின் கதியும் அவ்விதமேயாகும். ஆனால் ஒரு பெரும் வித்தியாசமுண்டு. சீதை ஒரு வருஷமே அசோக வனத்தில் இருக்கவேண்டியிருந்தது. பொது உடைமை என்ற வேடம் பூண்ட அரக்கன் நமது சுதந்திரத்தை அபகரித்துச் சென்றால், அதை மீட்பதற்கு நூறு வருஷங்கள் ஆகலாம்.

தீர்க்கதரிசிகளான நமது தலைவர்கள் சுதந்திரத்தைப் பாதுகாக்க ஒரு பெரும் ஜனநாயக அரசியல் அமைப்பை வகுத்து விரைவில் அமுல் செய்து விட்டனர். இல்லாவிடில் இந்தியாவின் நிலைமையும் பாகிஸ்தான், எகிப்து தேசங்களின் நிலைமையில்தான் இருக்கும். அவ்வப்பொழுது அவ்வமைப்பில் வேண்டிய சிறிய மாறுதல்கள் செய்து கொள்ளலாம். ஆனால் அதனை நம்முயிரைக் கொடுத்துக் காக்க வேண்டும்.

நமது அரசியல் அமைப்பு எல்லா இந்திய மக்களுக்கும் பேச்சுரிமை, ஓட்டுரிமை, சங்க உரிமை, தொழில் உரிமை அளித்திருக்கிறது. சட்டத்தைப் பிரதானமாகச் செய்து, அதனைக் காக்க உயர் நீதிமன்றம் ஏற்படுத்தியிருக்கிறது. சட்டங்கள் செய்வதற்கும், அவற்றை அமுல் செய்வதற்கும் பிரதிநிதிகள் அடங்கிய சட்ட சபைகளும், பொறுப்பான மந்திரி சபைகளும் உண்டாக்கியிருக்கின்றது.

வெள்ளையர் விலகிய மூன்று வருஷங்களுக்குள் இவ்வித அரசியல் திட்டம் வகுத்து, அதனைக் கொண்டு பொருளாதார முன்னேற்றத்துக்காக முதல் ஐந்து வருஷத் திட்டம் செய்து, அதுவும் பூர்த்தியாகி இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் வகுக்கும் தறுவாயில் இருக்கின்றோம்.

இக்காரியங்கள் மகத்தானவைகளாகவும் போற்றத் தக்கவைகளாகவுமிருந்தால், இந்தியாவுக்கு இனி அபாயமில்லை என்று ஏமாந்து விடக் கூடாது. சமூகத்துக்கு நல்ல ஸ்தாபனங்கள் அவசியமாயினும், அதன் மக்களின் மனப்போக்கு அவற்றைவிட முக்கியமானது. நமது ஜனநாயகம் நிலைத்திருந்து, அதன் மூலம் கொடுமையின்றி, குழப்பமின்றி ஒரு பூர்ண பொது நல சமூகம் இந்தியாவில் உருவாக வேண்டுமாகில், இந்திய மகா ஜனங்களின் மனோபாவங்கள் மேலும் தூய்மையடைய வேண்டும். சகிப்புத் தன்மையும், பொறுமையும் பெருக வேண்டும். மெஜாரிட்டிக் கட்சிகள் சட்டம் செய்வதற்கும், அரசு புரிவதற்கும் அதிகாரம் பெற்ற போதிலும், சிறுபான்மையோரை அவமதித்து அலட்சியம் செய்யலாகாது. சிறுபான்மையோரும் ஆத்திரப்பட்டுப் பலாத்காரத்தையும், ஜனநாயகத்துக்கு விரோதமான விதிகளையும் ஏற்கலாகாது.

ஆவடியில் கூடும் தமிழர் அனைவரும் இக்கருத்துக்களைச் சிந்தித்து, தமிழ் நாட்டில் எவ்வித அரசியல் குழப்பமுமில்லாமல் பாதுகாத்து, ஒரு ஒழுங்கான முறையில் தமிழகத்தைப் பாரதத்தின் ஆதர்சப் பிரதேசமாகச் செய்ய முயல்வார்களாக!




...அவள் உணவை எல்லாம் சமைக்க




துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட். கர்நூல்.

துஷார் சுத்திகரித்த எண்ணெயும் கிடைக்கும்

# அரசூர் பஞ்சாயத்து



## கல்கி

அபிராமி, அரசூர் சின்னசாமிப் படையாச்சியின் மூத்த தாரத்து மகள். சின்னசாமிப் படையாச்சி கொஞ்சம் சொத்துக்காரன். ஆகையால் முதல் தாரம் செத்துப் போனதும் இரண்டாவது மனைவி கலியாணம் செய்து கொண்டான். இவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. கொஞ்ச காலத்துக்கெல்லாம் சின்னசாமிப் படையாச்சி இறந்து போனான். அப்போது அபிராமிக்கு வயது பதினாறு.

காமாட்சி—இதுதான் சிறிய தாயார் பெயர்—அபிராமியைப் பிரியமாய் வளர்த்து வந்தாள். அபிராமி பார்வைக்கு லக்ஷணமாயிருப்பாள். பள்ளிக்கூடத்தில் நாலாவது வரையில் படித்திருந்தாள். அவளைத் தன் தம்பி வைத்திலிங்கத்துக்குக் கலியாணம் செய்து வைக்க வேண்டுமென்று காமாட்சிக்கு ஆசை.

அபிராமிக்குச் சொந்தத் தாய் மாமனின் மகன் சந்திரகாசன். அபிராமியும் அவனும் குழந்தைப் பிராயம் முதல் கூடி விளையாடியவர்கள். அபிராமியின் தாயார் உயிர் வாழ்ந்தபோது சந்திரகாச சில சமயம் அரசூருக்கு வருவான். சில சமயம் அபிராமி சேமங்கலத்துக்குப் போவாள். அப்போதிருந்தே அபிராமியைச் சந்திரகாசனுக்குக் கொடுப்பதாகப் பேசி வந்தார்கள். அபிராமியின் தாயார் அடிக்கடி இதைப் பற்றிச் சொல்லுவாள். குழந்தைக்குப் பல் முளைப்பதற்கு முன்னிருந்த,—ஏன்! சில சமயம் கர்ப்பத்திலிருக்கும் போதே—கலியாணப் பேச்சு பேசுவது வழக்கமல்லவா!

வெகுநாளாகப் பழகி நேசங் கொண்ட சந்திரகாசனைத்தான் கலியாணம் செய்து கொள்வேனென்று அபிராமி பிடிவாதம் பிடித்தாள். வைத்திலிங்கம் அவளுக்குத் திருட்டுத் தாலி கட்டிவிட எண்ணினான். ஆனால் காமாட்சி இதற்கு இடங் கொடுக்கவில்லை. அவள் அபிராமிக்கு எவ்வளவோ போதனை செய்து பார்த்தாள். ஒன்றும் பயன்படாமற் போகவே கடைசியில் அவள் சொன்னதாவது:— "நல்லது! உன் இஷ்டப்படியே செய். உன் மாமன் மகனையே கட்டிக்கொள். உனக்கப்பனை உத்தேசித்துக் கலியாணம் மட்டும் செய்து கொடுத்து விடுகிறேன். அதற்குப் பிறகு இந்த வீட்டு வழி நீ அடி எடுத்து வைக்கக் கூடாது. செருப்பாலடித்த சல்லிகூடக் கொடுக்க மாட்டேன். அப்புறம் என்மீது குறைப்படாதே. சந்திரகாச கள்ளுக் குடிக்கிறான் என்று சொல்கிறார்கள். அவனுக்குச் சொத்து கிடையாது. ஓட்டைக்குச்சு வீடுதான் ஆஸ்தி. யோசித்து முடிவு செய்" என்றாள்.

அரசூரில் பாதிப் பேருக்குமேல் குடிப்பவர்கள். ஆகையால் சந்திரகாச கள்ளுக் குடிப்பது அபிராமிக்குப் பெருங் குற்றமாகத் தோன்றவில்லை. இருந்தாலும் அவளுக்குக் கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது. இந்தக் குற்றம் அவன்மீது சிறிய தாயார் சொல்லும்படியாயிற்றே என்றெண்ணினாள். 'குடிக்காமலிருந்தால் நன்றாகத்தான் இருக்கும். எப்படியும் கலியாணம் ஆகிவிட்டால் குடியை விடும்படி செய்து விடலாம்' என்று நினைத்தாள். கலியாணம் ஆயிற்று.

* * *

அபிராமி மிகவும் மானி. சிற்றன்னையின் வார்த்தை அவள் மனத்தில் நன்றாய்ப் பதிந்திருந்தது. கலியாணத்துக்குப் பிறகு அவள் தன் பிறந்தகத்தை எட்டிப் பார்க்கவேயில்லை. தம்பியின் கலியாணத்துக்கு மட்டும் ஓரே ஒரு தடவை போனாள். அப்போது அவளுக்கு ஒரு பட்டுச் சேலை கொடுத்தார்கள். கலியாணத்தன்று மாத்

---

*ராஜாஜி நடத்திய 'விமோசனம்' என்ற பத்திரிகையில், 1929ம் ஆண்டு வெளியானது.*

திரம் அதை உடுத்திக் கொண்டு, உடனே திருப்பிக் கொடுத்து விட்டாள். தம்பியும் சிறிய தாயாரும் எவ்வளவோ கெஞ்சியும் அவன் அதைத் தன்னுடன் எடுத்து வரவில்லை.

அவர்களுடைய வாழ்க்கை கூடியவரை சந்தோஷமாகவே இருந்து வந்தது. சந்திரகாசு ஒரு ஏர் பயிர்ச் செலவு செய்து வந்தான். சாகுபடி இல்லாத காலத்தில் கூலி வேலைக்குப் போவான். ஏதோ அரை வயிற்றுக் கஞ்சிக்கு கிடைத்து வந்தது. ஏழை வீட்டில் பிறந்த அவன் பள்ளிக்கூடம் போனதில்லை. அபிராமியின் சகவாசத்தால் அவனுக்கு இப்போது படிப்பில் ருசி உண்டாயிற்று. கொஞ்ச காலம் இரவுப் பள்ளிக்கூடத்துக்குப் போய் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டான். அபிராமியும் சில சமயம் தெரிந்த வரையில் சொல்லிக் கொடுத்தாள். கள்ளுக் கடை ஒன்றுதான் அவர்கள் சந்தோஷத்துக்குத் தடையாயிருந்தது.

ஆனமட்டும் முயன்றும் சந்திரகாசுவினால் குடியை நிறுத்த முடியவில்லை. சில சமயம் ஒரு வாரம் இரண்டு வாரம் பல்லைக் கடித்துக் கொண்டிருப்பான். அப்புறம் ஒருநாள் புத்தி பேதலித்து விடும். ஆயினும் அவன் பெருங் குடிகாரனாகவில்லை. அபிராமியின் அன்பு அவனை அடியோடு படுகுழியில் விழாமல் காப்பாற்றி வந்தது.

பிறகு அவர்களுக்குக் குழந்தை பிறந்தது. அன்று முதல் சந்திரகாசு குடியை எப்படி விடுவது, பணம் எப்படிச் சேர்ப்பது என்று ஓயாமல் சிந்தித்து வந்தான். ஒருநாள் முருகப்பக் கங்காணி சேமங்கலத்துக்கு வந்ததும் பினாங்குக்குப் போவதுதான் வழியென்று தீர்மானித்து விட்டான்.

* * *

இரவு பன்னிரண்டு மணி. இன்பமான வெண்ணிலவு. சந்திரகாசுவும் அவன் மனைவி அபிராமியும் வீதியில் விரித்திருந்த ஒரு பழம் பாயில் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் மத்தியில் இன்னும் ஒரு வயது நிரம்பாத அவர்கள் குழந்தை பாயில் தூங்கிக் கொண்டிருந்தது. நெற்றியில் தொங்கிய சுருட்டை மயிர் இளங் காற்றில் சிறிது அசைந்தாடிற்று. குடிசைத் திண்ணையில் கிழவி சந்திரகாசுவின் தாயார், படுத்துப் பெருங் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

"எப்படியாவது பல்லைக் கடித்துக் கொண்டு இரண்டு வருஷம் பொறுத்திரு. உன்னையும் குழந்தையையும் விட்டு விட்டு நான் ரொம்ப நாள் இருப்பேனா! கையில் ரூபாய் சேர்ந்ததோ இல்லையோ, ஓடி வந்து விடுகிறேன்" என்றான் சந்திரகாசு.

"ஐயோ! அதெல்லாம் முடியாது. நமக்குப் பணமும் வேண்டாம்; எதுவும் வேண்டாம். ஏதோ நாலு காசு நீ சம்பாதித்து வருவதே போதும். கூழோ கஞ்சியோ குடித்து விட்டுச் சிவனே என்று இருப்போம்" என்றாள் அபிராமி.

"இதுதான் பெண் பிள்ளை புத்தி. கொஞ்ச நாள் கஷ்டப்பட்டால் பின்னால் எப்போதும் சுகமாய் இருக்கலா மென்பது உனக்குத் தெரியவில்லையே!" என்றான் சந்திரகாசு.

"நீ மாத்திரம் புத்தியாய்ப் பேசுகிறாயா! நீ அக்கரைச் சீமைக்குப் போய்ப் பணந்தேடி வருவது என்ன நிச்சயம்! அக்கரைச் சீமை போனவர்கள் எத்தனையோ பேர் திரும்பி வருவதே இல்லை" என்று அபிராமி சொன்னாள்.

சந்திரகாசு சிரித்தான். அன்று மாலை முழுதும் அவன் கங்காணியிடம் பேசிக் கொண்டிருந்துவிட்டுத் திரும்பி வந்த படியால் அபிராமியின் பேச்சைக் கேட்டு அவனுக்குச் சிரிப்பு வந்தது.

"முருகப்பக் கங்காணிக்கு இப்பொழுது ஒரு லட்ச ரூபாய் சொத்திருக்கிறது. அவன் பினாங்குக்குப் போன போது கையில் ஒட்டாஞ்சல்லி கூடக் கிடையாது". என்றான்.

"எனிப்படிப் பணம் பணமென்று அடித்துக் கொள்கிறாய்! இந்தக் குஞ்சானின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் போதாதா!" என்று சொல்லி அபிராமி தூங்கிக் கொண்டிருந்த குழந்தையின் கன்னத்தில் முத்தம் கொடுத்தாள்.

ரோஜா மொட்டொன்று திடீரென வெடித்து மலர்ந்தாற் போல அப்போது குழந்தையின் இதழ்கள் சற்றே விரிந்து புன்னகை பூத்தன. கண் மட்டும் திறக்கவில்லை. பின்னர் மறுபடியும் அதன் இதழ்கள் குவிந்தன. தூக்கத்திலும் கூடத் தாயின் அன்பு அதற்கு மகிழ்வூட்டியதோ! அல்லது ஏதேனும் இன்பக் கனவு கண்டதோ! யார் கண்டார்கள்!

"இவனுக்காகத்தான் நான் போக வேண்டுமென்கிறேன். நீயும் நானும் மட்டுமானால் கவலையில்லை. கிழவி இரண்டொரு வருஷத்துக்கு மேல் இருக்க மாட்டாள். ஆனால் குழந்தையை நினைத்தால்தான் எனக்குப் பணம் சேர்க்கும் ஆசையுண்டாகிறது. ஐந்து வயதில் நான் மாடு மேய்த்தது போல் இவனையும் மாடு மேய்க்க விடப் போகிறோமா! பள்ளிக் கூடத்துக்கு அனுப்ப வேண்டாமா! சொக்காய், குல்லாய் வாங்கிக் கொடுக்க வேண்டாமா! பார், இப்பொழுது கூட இவன் கைக்குத் தங்கக் காப்பு செய்து போட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!" என்றான் சந்திரகாசு.

"நீ கள்ளுக் குடிக்கிற காசை என்னிடம் கொடு. நாலு மாதத்தில் குழந்தைக்குத் தங்கக் காப்பு அடித்துப் போடுகிறேன்" என்றாள் அபிராமி.

சந்திரகாசுவுக்குக் கண்ணில் நீர் ததும்பியது. அவன் சொன்னதாவது:—"இந்த மாதிரி நீ எத்தனையோ தடவை சொல்லியாகி விட்டது. நானும் எவ்வளவோ பார்க்கிறேன். என்னால் முடியவில்லை. கள்ளுக்கடையைக் கண்டதும் வெறி வந்து விடுகிறது. ஊரை விட்டுப் போனால்தான் இந்த வெறி போகும். இரண்டு வருஷம் கண் காணாமல் இருந்தால் மறந்து போய் விடும். அதற்காகவே முக்கியமாய் நான் போக வேண்டும்."

"அங்கே மாத்திரம் கள்ளுக் கடை கிடையாதா!" என்று அபிராமி கேட்டாள்.

"அதெப்படி அங்கே கள்ளுக்கடையிருக்கும்! இருக்காது" என்றான் சந்திரகாசு. பாவம்! போகுமிடத்திலும் பீர் கடையும் பிராந்திக் கடையுமிருக்குமென்னும் எண்ணம் அவனுக்கு இது வரை தோன்றவில்லை. மறு நாள் கங்காணியைக் கேட்டு நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று நினைத்தான். ஆனால் மறு நாள் பிரயாண தடபுடலில் மறந்து போனான்.

"எப்படியானாலும் நீ போகக் கூடாது. உன்னைப் பிரிந்து நான் இருக்க மாட்டேன். அப்படி என்ன பிரமாதமாகக் குடித்து விடுகிறாய்! போனால் போகட்டும். நீ சம்பாதிக்கும் பணம் தானே! ஆறு அணா சம்பாதித்தால் இரண்டு அணாவுக்குக் குடிக்கிறாய். தை மாதம் பத்துப் பதினைந்து கலம் நெல் வருகிறது. இப்போது நாம் பட்டினியா

கிடக்கிறோம்! இனிமேல் நானும் கூலி வேலைக்குப் போகிறேன்'' என்றாள்.

"இப்படி யெல்லாம் பேசாதே, அபிராமி! நீ பிறர் வீட்டில் நெல்லுக் குத்தப் போவதை நான் பார்த்துக் கொண்டிருப்பேனா! எல்லாம் முடிவாகி விட்டது. மாட்டை இன்று விற்று விட்டேன், எண்பது ரூபாய்க்கு. ஐம்பது ரூபாய் வழிச் செலவுக்கு எடுத்துக் கொண்டு, உனக்கு முப்பது ரூபாய் கொடுத்து விட்டுப் போகிறேன். நாலு மாதத்துக்குக் குதிரில் நெல் இருக்கிறது. அதற்குள் கட்டாயம் பணம் அனுப்புகிறேன். இந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்து எனக்குப் போக உத்தரவு கொடு. தடை செய்யாதே'' என்றான் சந்திரகாசு.

"அப்படியானால் நானும் வருகிறேன். குழந்தையையும் எடுத்துக் கொண்டு இரண்டு பேரும் போவோம்'' என்றாள் மனைவி.

"கிழவியை என்ன செய்வது! சோற்றுக்கு ஆலாய்ப் பறக்க விட்டு விடலாமா!'' என்று சந்திரகாசு கேட்டான்.

"ஐயோ! எனக்கு அழுகை வருகிறது'' என்றாள் அபிராமி. அப்படியே அழத் தொடங்கினாள். சந்திரகாசன் வெகு நேரம் அவளைச் சமாதானம் செய்து கொண்டிருந்தான்.

*    *    *

சந்திரகாசு பினாங்குக்குப் புறப்பட்டுச் சென்ற நான்காவது மாதத்தில் அபிராமிக்கு ஒரு கடிதம் வந்தது. தபால்காரன் கையில் வைத்துக் கொண்டு இரண்டணா கேட்டான். அபிராமி வீட்டுக்குள் ஓட்டமாயோடிப் பழைய பெட்டி யொன்றில் துளாவி இரண்டணா எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். கடிதத்தை வாங்கி உடைத்துப் படித்தாள். அதிலே சந்திரகாசன் எழுதியிருந்த அன்பான மொழிகளையும், பிரியமான வசனங்களையும் அவன் எங்கேதான் கற்றுக் கொண்டானோ, தெரியாது. ஒவ்வொரு வரி படிக்கும் போதும் அபிராமிக்கு மயிர்க் கூச்சல் எறிந்தது. நாலு வரி படித்து விட்டு அவள் அழுதாள். இன்னும் நாலு வரி படித்து விட்டுச் சிரித்தாள். இடையிடையே கடிதத்தைக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள். இரண்டு மூன்று தடவை படித்தாள். பிறகு அதைக் கிழவியிடம் கொண்டு போய்ப் படித்துக் காட்டினாள். மறுபடி குழந்தையின் பக்கத்தில் உட்கார்ந்து கடிதம் முழுவதையும் அதற்குப் படித்துக் காட்டினாள். குழந்தையும் ஏனோ சிரித்தது. அதன் முகத்தில் கடிதத்தை வைத்து முத்தமிடச் செய்தாள். கடைசியாகப் பெட்டியில் பத்திரமாக வைத்துப் பூட்டினாள்.

இரண்டு மாதம் கழித்து இன்னொரு கடிதம் வந்தது. அடுத்த மாதம் கட்டாயம் பணம் அனுப்புவதாக அதில் எழுதியிருந்தது. பின்னர் இரண்டு மாதம் கழித்து வந்த கடிதத்திலும் இப்படியே எழுதியிருந்தது. இதற்குள் குதிரில் இருந்த நெல்லெல்லாம் தீர்ந்து போயிற்று. பணத்திலும் பத்து ரூபாய் செலவழிந்து விட்டது. பாக்கி ரூபாய் இருபதும் ஆபத்துக்கு வேண்டுமென்று அபிராமி பத்திரப்படுத்தி விட்டுக் கூலி வேலை செய்ய ஆரம்பித்தாள். நெல்லுக் குத்தவும் களையெடுக்கவும் போனாள். அந்த நேரங்களில் கிழவி குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இப்படியே ஒன்றரை வருஷ காலம் சென்றது. இரண்டு மாதத்துக் கொருமுறை சந்திரகாசனிடமிருந்து தவறாமல் கடிதம் வந்து கொண்டிருந்தது. ஆனால் பணம் மட்டும் ஒரு தம்பிடி கூட வந்தபாடில்லை. அபிராமிக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது. பகலெல்லாம் வெளியிலும் இரவில் வீட்டிலும் உழைத்து உழைத்து அவள் அலுத்துப் போயிருந்தாள். வெகு நாளாய் 'அனுப்புகிறேன், அனுப்புகிறேன்' என்று தன் புருஷன் ஆசை காட்டி வரும் பணம், உண்மையில் எப்போது






தான் வந்து சேருமோ வென்று ஏக்கப்படலானாள். தபால்காரனைக் கண்ட போதெல்லாம் விசாரித்தாள். ஆனால் அவள் சந்திரகாசனுக்கு எழுதிய கடிதங்களில், இந்த ஆவலை அதிகம் வெளிக் காட்டவில்லை. கடைசியாக எழுதிய ஒரு கடிதத்தில் பணம் வந்து சேரவில்லையென்றும், மணியார்டர் தப்பிப் போயிருக்குமோ வென்று சந்தேகப் படுவதாகவும், ஒரு வேளை இதுவரை அனுப்பியிராவிட்டால் தெரிவிக்க வேண்டுமென்றும், கொஞ்சம் பணம் வந்தால் குழந்தைக்கும் கிழவிக்கும் சௌகரியமாய்த்தான் இருக்குமென்றும் அவள் எழுதினாள்.

இதற்குச் சந்திரகாசனிடமிருந்து வந்த பதிலைப் படித்ததும் அபிராமி இடி விழுந்தது போல் திடுக்கிட்டுப் போனாள். அவன் எழுதியிருந்தான்:— ''உன்னிடம் இத்தனை காலமாய் ஒரு விஷயம் மறைத்து வைத்திருந்தேன். இனிமேல் சொல்லாமலிருக்கக் கூடாது. நான் கிளம்பியவன்றைக்கு முதல் நாளிரவு நாம் நிலவில் உட்கார்ந்து பேசியது நினைவிலிருக்கிறதா! முக்கியமாக, கள்ளுக் கடையை மறப்பதற்குத்தான் நான் அக்கரைச் சீமைக்குப் போவதாகச் சொன்னேன். இங்கே கடை இராதென்று நினைத்தேன். ஐயோ! ஏமாந்து போனேன். அந்தப் பாழும் கடைகள் இங்கேயும் இருக்கின்றன. சம்பளம் அதிகம்தான் கொடுக்கிறார்கள். ஆனால் சாப்பாடு போக மிச்சமெல்லாம் குடிக்குத்தான் போகிறது. ஊரிலாவது எனக்குப் புத்தி சொல்லித் தடுக்க நீ இருந்தாய். இங்கே நீயும் இல்லை. அப்படியும் எவ்வளவோ கஷ்டப்பட்டு முப்பது வெள்ளி சேர்த்து உனக்கு அனுப்பலாமென்று வைத்திருந்தேன். பத்து நாட்களுக்கு முன்பு நான் குடித்து விட்டுப் புத்தி தப்பியிருக்கையில் யாரோ பாவிகள் அதைக் கொண்டு போய் விட்டார்கள். ஐயோ! நீங்கள் அங்கே படும் கஷ்டத்தை நினைத்தால் வயிறு பகீரென்கிறது. ஒவ்வொரு நாளும் உங்கள் நினைவாகவே யிருக்கிறேன். கூடிய சீக்கிரத்தில் எப்படியும் பணம் அனுப்புகிறேன்.''

அபிராமி அன்று இரவெல்லாம் தூங்கவேயில்லை. ஓயாமல் அழுதுகொண்டேயிருந்தாள். புருஷன் பத்திரமாய் ஊர் வந்து சேரவேண்டுமென்று தெய்வங்களையெல்லாம் வேண்டினாள். மறுநாள் ஒரு கடிதம் எழுதினாள்.

பணம் சம்பாதித்தது போதுமென்றும், உடனே புறப்பட்டு வந்து விடும்படியும் மன்றாடிக் கேட்டுக் கொண்டாள். ''உங்கம்மா மேல் ஆணை; என் தலைமேல் ஆணை; குழந்தை மேல் ஆணை; மாரியம்மன் ஆணை; நீ இனிமேல் கள்ளுக்கடை வழி போகக் கூடாது'' என்று சபதம் வைத்தாள்.

சந்திரகாசன் இதற்கெழுதிய பதிலில் தான் குடிப்பதை விட்டு விட்டதாகவும், இனிமேல் பணம் சேர்த்து விடுமென்றும் இரண்டு மாதத்தில் நூறு ரூபாய் அனுப்புவதாகவும், அப்புறம் ரூபாய் இருநூறு சம்பாதித்துக் கொண்டு திரும்பி விடுவதாகவும் எழுதி யிருந்தான்.

இப்படியே ஐந்து வருஷம் சென்றது. சந்திரகாசனாவது, பணமாவது வந்து சேர்ந்தபாடில்லை. இதற்கிடையில் கிழவி செத்துப் போனாள். அபிராமி ஆபத்துக் கென்று வைத்திருந்த இருபது ரூபாயைக் கிழவியின் அந்திய காலத்தில் அவளுக்கு வேண்டியது செய்வதற்கும், கருமாந்தரத்துக்கும் செலவழித்து விட்டாள். அடுத்த வருஷம் அவளே காயலாவாய்ப் படுத்துக் கொண்டாள். ஒரு மாதம் ரொம்பவும் கஷ்டப்பட்டாள்.

அந்த சமயத்தில் கல்லும் உருகும்படியான ஒரு கடிதம் அவள் சந்திரசாகவுக்கு எழுதினாள்.

*　　　　*　　　　*

கடிதம் ஒன்று வந்தது. "ரூபாய் நூறு மணியார்டர் செய்திருக்கிறேன்" என்ற வார்த்தைகளைப் படித்தபோது அபிராமியால் நம்பவே முடிய 'வில்லை. உண்மையாகவே அப்படி எழுதியிருக்கிறதா வென்று திருப்பித் திருப்பிப் படித்தாள். பிறகு ஓடிப் போய்த் தபால்காரனை வழி மறித்துக் கேட்டாள். "கடிதம் முதலில் வந்து விடும். பணம் மெதுவாய்த்தான் வரும். பதினைந்து நாள் ஆகும்" என்று தபால்காரன் சொன்னான்.

ஒரு வாரத்திற்கெல்லாம் குழந்தைக்கு வைசூரி வார்த்தது. அபிராமி பெரிதும் கவலைப்பட்டாள். பணம் வந்ததும் ஊர்க் கோயில்களுக் கெல்லாம் அபிஷேகம் செய்து வைப்பதாய் வேண்டிக் கொண்டாள். ஒவ்வொரு நாள் காலையும் தூக்கம் விழித்ததும் 'இன்று பணம் வராதா!' என்றெண்ணிக் கொண்டே எழுந்திருந்தாள்.

வெள்ளிக் கிழமை வந்தது. "ஐயோ! இன்று பணம் வந்தால் மாரியம்மனுக்கு மாவிளக்கு ஏற்றலாமே!" என்று நினைந்தாள். தபால்காரன் வருகிறானா வென்று எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியாக, உச்சி வேளையில் தபால்காரன் வந்தான். மணியார்டரும் கொண்டு வந்தான். அபிராமி தன் கலி தீர்ந்து விட்டது, தான், தெய்வங்களை வேண்டியதெல்லாம் வீண் போகவில்லை யென்றெண்ணினாள்.

தபால்காரன் சாட்சி போடுவதற்கு ஒருவனைக் கூட அழைத்து வந்திருந்தான். அவன் அந்த ஊர்க் கள்ளுக் கடை குத்தகைதாரன். தபால்காரன் அபிராமியிடம் கையெழுத்து வாங்கிக் கொண்டு குத்தகைதாரனிடம் சாட்சியும் வாங்கிக் கொண்டான். பிறகு 98 ரூபாய் எண்ணி அவனிடம் கொடுத்து, "அம்மாவிடம் கொடுங்கள்" என்றான். அபிராமியைப் பார்த்து, "நூறு ரூபாய் வந்தால் ஐந்து ரூபாய் வாங்குவது வழக்கம். நீங்கள் ஏழையானதால் இரண்டு ரூபாய்தான் எடுத்துக் கொண்டேன்" என்றான்.

அபிராமி பணம் பெற்றுக் கொள்வதற்காகக் கையை நீட்டினாள்.

குத்தகைதாரன் சொன்னான் :—"அம்மா! இது எனக்குச் சேரவேண்டிய பணம். உன் புருஷன் எனக்கு நாற்பது ரூபாய்க்குப் பத்திரம் எழுதிக் கொடுத்தான். வட்டியும் முதலும் சேர்ந்து இப்பொழுது 110 ரூபாயாகிறது. 98 ரூபாய் போனால் பாக்கி 12 ரூபாய்" என்றான்.

இடி விழுந்தது போல் அபிராமி திகைத்துப் போனாள். அவள் தலை கிறு கிறு வென்று சுழன்றது. எங்கேயோ உயரத் தூக்கிக் கொண்டு போவது போல் இருந்தது. குத்தகைதாரன் மேலும் கூறினான் :—"இருந்தாலும் உன்னை அடியோடு வயிற்றிலடிக்க எனக்கு மனமில்லை. இதை வாங்கிக் கொள்ளு" என்று சொல்லி நாலு ரூபாய் எடுத்துக் கொடுக்க வந்தான். அபிராமிக்கு அப்போதுதான் நிலைமை யென்ன வென்பது கொஞ்சம் விளங்கிற்று. "ஐயோ! இதென்ன அநியாயம்! இந்த ஊரிலே கேட்பாரில்லையா?" என்று அவள் கூச்சலிட்டாள்.

கூக்குரல் போட்டதும் கூட்டம் சேர்ந்து விட்டது. ஊர் நாட்டாண்மைக் காரர்களில் ஒருவன் வந்தான். "இதைப் பஞ்சாயத்துப் பண்ணித்தான் தீர்க்க வேண்டும். அதுவரையில் பணம் என்னிடம் இருக்கட்டும்" என்று சொல்லி

வாங்கிக் கொண்டான். அன்று சாயங்காலம் ஊர்ச் சாவடியில் பஞ்சாயத்துக் கூடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

அந்த ஊரில் வழக்க மென்ன வென்றால், எந்த வழக்குக்காகப் பஞ்சாயத்துக் கூடினாலும் வாதி பிரதிவாதி இரண்டு பேரும் சேர்ந்து பஞ்சாயத்துக் காரர்களுக்காகக் கள்ளு வாங்கி வைத்துவிட வேண்டும். வெள்ளையப்பன் உள்ளே போனால் தான் நியாயம் நன்றாய் விளங்கு மென்பது அந்த ஊர்ப் பிரமுகர்கள் அபிப்பிராயம். ஆனால் இந்த வழக்கிலே வாதி ஏழைப் பெண் பிள்ளையானதினாலும், பிரதிவாதி கள்ளுக் கடைக்காரனாதலாலும் பிரதிவாதியே எல்லாருக்கும் கள்ளு 'சப்ளை' செய்ய வேண்டியதென்று தீர்மானித்தார்கள்.

ஊர்ச் சாவடியில் , பஞ்சாயத்துக் கூடிற்று. மொந்தைகள் ஏராளமாய் உருண்டன. பஞ்சாயத்துக்காரர்களுக்கு மட்டுமின்றி வேடிக்கை பார்க்க வந்தவர்களுக்குக்கூட அன்று வெகு 'மஜா.' நெடு நேரம் நியாயம் பேசியான பிறகு, பத்திரம் காலாவதியாகி இருந்தாலும் வாங்கிய கடனைக் கொடுக்கத்தான் வேண்டுமென்றும், ஆகையால் பணம் கள்ளுக் குத்தகைதாரனுக்கே சேர வேண்டியதென்றும், இருந்தாலும் அபிராமியின் ஏழைமையை உத்தேசித்து அவளுக்குப் பத்து ரூபாய் கொடுத்துவிட்டு எண்பத்தெட்டு ரூபாய் அவன் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் பஞ்சாயத்து சபையார் தீர்ப்பளித்தார்கள்.

அம்மை வார்த்த பையன் நாலு நாளைக்கெல்லாம் இறந்து போனான். பஞ்சாயத்து செய்தவர்கள் உள்பட ஊரார் மிகவும் இரக்கப்பட்டுப் பொதுச் செலவில் பிரேதத்தை எடுத்து அடக்கம் செய்தார்கள். அன்றைய தினமே அபிராமிக்கு ஒரு கடிதம் வந்தது. சந்திரகாசன் மிகவும் நீளமாய் எழுதியிருந்தான். ஆனால் கரைகாணாத துக்கத்தில் மூழ்கியிருந்த அபிராமிக்குப் பின்வரும் விஷயங்கள்தான் அதில் புலப்பட்டன :—"பணம் அனுப்பியதும், ஊருக்கு வந்து உன்னையும் குழந்தையையும் பார்க்க வேண்டுமென்று ஆசை உண்டாயிற்று. வெறி பிடித்தாற் போலிருந்தது. கையில் பணமில்லை. 50 ரூபாய் திருடிக்கொண்டு கிளம்பினேன். பிடித்து ஜெயிலில் போட்டு விட்டார்கள். இரண்டு வருஷம் கடுங்காவல். இதுவும் நல்லதுதான். ஜெயிலில் கள்ளு சாராயம் கிடையாது. இரண்டு வருஷத்தில் மறந்து விடுவேன். விடுதலையானதும் ஊருக்கு ஓரே ஓட்டமாய் வருவேன்."

* * *

மறுநாள் முதல் அபிராமி காணாமற் போனாள். அரசூருக்கு எட்டு மைல் கிழக்கே ஒரு ஸ்திரீயின் பிரேதம் ஆற்றில் மிதந்து வந்து ஒதுங்கிற்று. அவ்வூர் கிராமாதிகாரி அதை யெடுப்பித்துப் போலீசுக்குத் தெரியப்படுத்தினர்.

* * *

இரண்டு வருஷங் கழித்துச் சந்திரகாசன் வெகு ஆவலாக ஊருக்குத் திரும்பி வந்து சேர்ந்தபோது தன் குடிசை இருந்த இடத்தில் குப்பை மேடு போடப்பட்டிருப்பதைக் கண்டான்?



## நூற்றாண்டு விழா

காங்கிரஸ் ஸ்தாபனத்தின் உன்னத வளர்ச்சியில் பெருமைப் படும்படி மிகச் சிறந்த முறையில் தொண்டாற்றி யிருக்கிறார்கள் தென்னாட்டுத் தலைவர்கள். அன்னிய ஆட்சி வன்மையான செல்வாக்குடன் இருந்த அந்தக் காலத்தில் சென்னை ராஜ்யத்தில், ஏன், இந்தியாவிலேயே தேசியத்தை வளர்க்கப் பாடுபட்டு உழைத்த தலைவர்களில் முக்கியமானவர் ஸ்ரீ ஜி. சுப்பிரமணிய ஐயர் அவர்கள். எழுபது ஆண்டுகளுக்கு முன் கூடிய சரித்திரப் பிரசித்தி பெற்ற காங்கிரஸ் மகாசபையின் முதலாவது கூட்டத்தில் முதல் தீர்மானத்தைப் பிரேரேபித்த பெருமை தமிழகத்துக்கே உரியது. அந்தப் பெருமைக்கு உரிய தீர்மானத்தைப் பிரேரேபித்த பெருந்தகைதான் ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் அவர்கள். "ஹிந்து" "சுதேசமித்திரன்" ஆகிய பத்திரிகைகளின் ஸ்தாபகர். ஜனவரி 19-ந் தேதி, அந்த உத்தமத் தலைவரின் நூறாவது ஜயந்தி. தமிழ்ப் பெருமக்கள் தங்கள் தலைவர்களை எந்த நாளும் மறக்க மாட்டார்கள். தமிழ் நாட்டுக்குப் பெருமை தேடித் தந்த அருமைத் தலைவர் ஸ்ரீ ஜி. சுப்பிரமணிய ஐயர் அவர்களின் நினைவுக்கு அஞ்சலி கூறுகிறோம். ★★



# நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன்

# செய்தீர்களா?



**ஆம்! நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன்.**

வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம். ஆகையால் தான் நான் பிரதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன். மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள ஊத்தையை நீக்கி பற்களுக்கு இயற்கையாக இருக்கும் வெண்மையையும், ஒளியையும் தருகிறது. அதிக வெண்மையான பற்கள் கெட்டியான ஈறு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்.

"...மக்ளீன்ஸ் பற்பசை இப்பொழுது கடைகளில் விற்கப்படும் எல்லா ரகங்களினிடை மிக உயர்ந்தது."




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்

MTY-39-TAM.

# வாட்டர்புரூப், தானாக சாவி கொடுப்பது, டயலில் தேதி காட்டுவது



ஒரு கடியாரத்தில் நல்ல தோற்றம், செம்மையான ஓட்டம் இவைகளைத் தவிர மேலும் ஏதாவது சிறப்புகள் விரும்பினால், டியூடர் பிரின்ஸ் ஆய்ஸ்டர்டேட் அல்லது அதன் இணை பிரின்ஸஸ் ஆய்ஸ்டர்டேட்டை பாருங்கள். இவற்றின் யந்திரங்கள் ஈரம், தூசி, அழுக்கு, என்பவை புகாமல் நிரந்தரப்பாதுகாப்புடையவை. ரோலெக்ஸ் பேடண்ட், 'ரோட்டார்' யந்திர விசையின்மூலம் தானாக சாவி கொடுத்துக் கொண்டு, செம்மையாக ஓடும். இருகடியாரங்களும் டயலில் அன்றாடம் தேதி தெளிவாகக் காட்டுகின்றன. இயல்பாகவே பிரதிதினமும் நள்ளிரவில் தேதி மாறிவிடும்.



R-736

## அவை ரோலெக்ஸ் தயாரிப்புகள்

அதிநுட்பமான நேரங்காட்டும் கடியாரத் தயாரிப்பில் ரோலெக்ஸ் அடைந்துள்ள அரை நூற்றாண்டு அநுபவத்தைப் பிரதிபலிப்பவை இந்த டியூடர் கடியாரங்கள். எமது டியூடர் கடியாரங்களின் எல்லா இனங்களையும் வந்து பாருங்கள். நேரில் வர இயலாதவர்களுக்கு படப் புத்தகம் அனுப்புவோம்.



**டியூடர்**

கடியாரங்கள்
ஜெனிவா (ஸ்விட்ஸர்லாந்து) தயாரிப்பு

தென்னிந்தியாவில் ஏக விக்ரேதாக்கள் :

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்



# கான விருந்தில் சீனக் கலைஞர்கள்

சீனக் கலைஞர்கள் ஜனவரி 3-ல ஸ்ரீ சதாசிவம் அவர்களின் இல்லத்துக்கு விஜயம் செய்து ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் மதுர கானத்தைக் கேட்டு அனுபவித்தனர். கலைஞர்களை வரவேற்று ஸ்ரீ சதாசிவம் பேசியபோது, "எனது மதிப்புக்குரிய நண்பர் 'கல்கி' அவர்களின் மறைவினால் ஏற்பட்ட துயரத்திலிருந்து இன்னும் மீளவில்லை. நண்பருக்கு மரியாதை செலுத்தும் வகையில் அவர் இயற்றிய 'வண்டாடும் சோலை' என்ற பாட்டுடன், என் மனைவி இந்தக் கச்சேரியை ஆரம்பிப்பார்..." என்றார். பின் ஒரு மணி நேரத்துக்கு மேல் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி சங்கீத-திரிமூர்த்திகளான தியாகராஜர், முத்துசாமி தீக்ஷிதர், ஸ்யாம சாஸ்திரி ஆகியவர்களின் பாடல்களையும் முத்துத் தாண்டவர், காந்திஜிக்குப் பிடித்தமான மீரா பஜன் — ஆகிய பாடல்களையும் பாடி கான விருந்தளித்தார்.

# பெண் குலத்துக்குப் பெருமை

**வசுமதி ராமசுவாமி**

அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன் அரசுரிமைக்கே பிறந்தவன் தன் குண விசேஷங்களுடன் மறைந்து வாழ்ந்தான். அவனுக்கு எவ்வளவோ சிறப்பான குணங்கள் இருந்தன. அவற்றைக் காட்டிக் கொள்ள அவன் விரும்பவில்லை. ஒருசமயம் பட்டத்து யானை அவ்வரசனைக் கண்டு பிடித்து மாலையைச் சூட்டித் தன் முதுகில் ஏற்றிக் கொண்டு வந்து சிங்காதனத்தில் அமரச் செய்தது. அந்த அரசனுடைய சிறப்பு யானைக்குத் தெரிந்து விட்டது—என்றெல்லாம் பாட்டிமார்கள் கதை சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அந்தக் கதை இப்பொழுது ஞாபகம் வந்தது. ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள் அவர்களைக் காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டி தலைவராக ஏகமனதுடன் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இது பெண்களுக்கே பெருமை அளிக்கும் செயல்.

ராஜாஜி அவர்கள் கண்ணன் காட்டிய வழியில் "ஆயிரம் ஆண்டுகள் அரசுரிமை வகித்துக் கடமை செலுத்தவும் தயாராக இருக்க வேண்டும். அதே சமயம் அவைகளை விட்டுவிடவும் மனம் பக்குவமாக உறுதிப்பட வேணும்" என்று அழகாகச் சொல்லியிருக்கிறார். அது அம்புஜம்மாள் குணத்துக்கு மிகவும் பொருத்தமானது. தேசிய விடுதலைப் போராட்டத்தில் எவ்வளவோ ஆவலுடன் உழைத்தார். இடையில் சில வருஷங்கள் ஒன்றிலும் பற்றுக் கொள்ளாமல் வாழ்ந்தார்.

நான் சிறுமியாக இருக்கும்பொழுது அடிக்கடி அம்புஜம்மாள் என்ற பெயரைக் கேட்டிருக்கிறேன். அந்தப் பெயரில் என்னை அறியாமலே எனக்கு ஒரு கவர்ச்சி உண்டு. இன்று அவருடன் இவ்வளவு நெருங்கிப் பழகும் பாக்கியம் கிடைக்குமென நினைக்கவில்லை. ஒரு காலத்தில் தேச விடுதலைப் போராட்டத்தில் எவ்வளவோ பாடுபட்டார்; சிறைக்குச் சென்றார். தம்முடைய சொந்த நலனைப் பாராட்டாமல் தொண்டு புரிந்தார்.

ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாஸ அய்யங்கார் பெரிய சிங்கம், வீரர், தீரர், தீர்க்கதரிசி, பிடிவாதக்காரர். அவருடைய பிடிவாத குணத்தைப் பற்றி வேடிக்கையாக ஸ்ரீ வி. வி. கோபாலரத்னம் அவர்கள் அடிக்கடி சொல்லுவார். "வாழைக்காயில் ஏன் வாழைக்காய் வாஸனை வருகிறது!" என்பாராம். அதற்குப் பதில் சொல்லாமலே அவர் தர்ம பத்தினி ஸ்ரீமதி ரங்கநாயகி அம்மாள் தலைகுனிந்து போவாராம். அப்படிப்பட்டவருடைய செல்வப் புதல்வி ஸ்ரீமதி அம்புஜம்மாள். காந்திஜியின் அபிமான புத்திரியாக விளங்கினார். காந்திஜி இந்தி பிரசார சபையில் கடைசியாக விஜயம் செய்த பொழுது ஸ்ரீமதி அம்புஜம்மாளை 'அம்புஜம்' என அன்புடன் காந்திஜி அழைப்பதைக் கேட்டிருக்கிறேன்.



ஸ்ரீமதி அம்புஜம்மாள்

ஸ்ரீமதி அம்புஜம்மாள் இந்தி பாஷையைத் தாம் கற்றதுமல்லாமல் வலுவில் மற்ற மாணவிகளுக்கும் போதித்துத் தென்னாட்டில் ஹிந்தியை ஓரளவு பரப்பியிருக்கிறார். "சேவாசதனம்" என்ற ஹிந்தி நாவலை வெகு அழகாகத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். துளஸீ ராமாயணத்தில் முதல் இரண்டு காண்டங்களை எளிய தமிழில் எழுதியிருக்கிறார். ஹிந்தியில் நன்றாகப் பேசுவார். தம்முடைய விலை மதிப்புள்ள ஆபரணங்களைச் சேவா கிராமத்துக்கு நன்கொடையாக அளித்திருக்கிறார். தென்னிந்தியப் பெண்களுக்கு வர்தாவில் உபகாரச் சம்பளம் ஏற்படுத்தி வைத்திருக்கிறார். அரசியல் விஷயத்தில் அவருக்குத் தந்தையுடன்கூட அபிப்பிராயபேதம் உண்டு. தம்முடைய அபிப்பிராயத்தைப் பிறருக்காக மாற்றிக் கொள்ள மாட்டார். சிறந்த விவேகி. கஷ்ட சுகத்தை ஒன்றாகப் பாவிக்கும் தன்மையுள்ளவர். ஏழை, எளியவர்களிடம் காட்டும் அன்பு, தயை இவைகள் போற்ற வேண்டிய குணம். வம்புப் பேச்சு, பிறரைப் பற்றிய தூஷணை இவைகள் அவருக்குத் தெரியாத விஷயம்.

அவரிடம் நிறைந்துள்ள இந்தச் சிறந்த தன்மை பெண்கள் அனைவரும் பின்பற்றவேண்டிய அம்சம்.

பொது நிதிகளுக்குக் கணக்கு வைத்துக்கொள்வதில் அவருக்கு இணை அவரே. சில வருஷங்களுக்கு முன் நடந்த மாதர் மகாநாட்டின் வரவேற்பு கமிட்டித் தலைவியாக இருந்து அருந்தொண்டாற்றினார். அப்பொழுது நன்கொடை வந்த சுமார் மும்பதினாயிரம் ரூபாய்க்குக் கச்சிதமாகக் கணக்கு எழுதிப் பேருதவி புரிந்தார்.

தந்தை சீனிவாஸ அய்யங்கார், மகாத்மாஜி ஆகியவர்களின் ஞாபகார்த்தமாக, "சீனிவாஸ காந்தி நிலயம்" என்ற ஸ்தாபனத்தை நிறுவி நடத்தி வருகிறார். அந்த ஸ்தாபனத்தின் தலைவியாகவும் பொக்கிஷதாரராகவும் இருந்து மகாத்மாவின் நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றுகிறார். அங்கு நடைபெறும் எல்லாத் தொண்டுகளையும் தாமே முன்னின்று செய்கிறார். பாதித் தூக்கத்தில் நிலயத்தின் கணக்கு வழக்கில் ஒரு அணு விட்டிருந்த நினைவு வந்தால் கூட அதை எழுதி விட்டுத்தான் தூங்குவார். அன்பே உருவான அம்புஜம்மாள் எங்கள் அனைவராலும் "அக்கம்மா" என்று போற்றப்படும் தலைவி. நாங்கள் தலைவியாக நினைப்போம். அவர் குழந்தை மாதிரி எளிமையாக நடந்து கொள்வார்.

இந்தத் தடவை காங்கிரஸ் மகாசபை தகுதியான வரவேற்புக் கமிட்டியின் தலைவியைத் தேர்ந்தெடுத்துப் பெண் குலத்துக்குப் பெருமை தந்திருக்கிறது.

# The *murphy* parade of Beauty...



Model TB221 4-valve *dry battery radio set.*

Model TA222 5-valve *AC radio set.*

Model TU222 5-valve *AC/DC radio set.*

Model TA226 7-valve *AC radio set — fully bandspread, 8-bands, and magic eye.*





Model TA224 5-valve *AC radio set, fully bandspread, 8-bands*

Model TB227 7-valve *dry battery radio set fully bandspread, 8-bands.*

Model TU196 *6-valve AC/DC radio set, fully bandspread, 8-bands.*



## murphy radio

*Better value for your money*




**Member of the Radio Manufacturers' Association of India.**

MR. 54.32

DISTRIBUTORS:

Messrs. ADDISON & CO. LTD., 158, Mount Road, MADRAS-2

essrs. MURPHY RADIO OF INDIA LTD., BOMBAY - 12

# சித்திர மடல்

## பத்தினித் தெய்வம்

"குமரியோடு வட இமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதன்" என்று பாடப்பட்ட மன்னனுக்கு இரு புதல்வர்கள்—செங்குட்டுவன், இளங்கோ! இருவருமே கண்ணகிக்கு ஆலயம் கட்டினர். செங்குட்டுவன் இமயம் வரை சென்று வந்து, கல்லினால் ஆலயம் கட்ட, இளங்கோ நெஞ்சை அள்ளும் சொல்லினால் ஆலயம் கட்டினார்! கண்ணகி கோயிலின் விழாவுக்கு வடநாட்டு மன்னரும், குடக கொங்கரும், மாளுவ அரசனும், 'கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும்' வந்திருந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

கண்ணகி கோவிலையும், சேரன் செங்குட்டுவனையும், இளங்கோ அடிகளையும் சித்திரத்தில் காணலாம். பத்தினித் தெய்வத்துக்கு எதிரே நிற்கும் இலங்கைக் கயவாகு மன்னன் "அம்மையே, நீ இலங்கையிலும் எழுந்தருளி, எங்கள் தெய்வமாக விளங்க வேண்டும்!" என்று வரம் பெறுகிறான்!

## சோழர் குல திலகம்

கி. பி. 1012-ம் ஆண்டில் இராஜராஜ சோழன் தன் புதல்வன் மதுராந்தகனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி, 'இராஜேந்திரன்' என்ற அபிஷேகப் பெயரையும் வழங்குகிறான். அப்பொழுது சோழராஜ்யம் சென்னை மாகாணமும், மைசூர் நாட்டின் ஒரு பகுதியும், ஈழ நாடும் தன்னகத்தே கொண்டிருந்தது. இளவரசுப் பட்டம் சூடிய இராஜேந்திரன் இரண்டு ஆண்டுகளில், சக்கரவர்த்தியாக முடிசூடி, அந்த ராஜ்யத்தை ஒப்பற்ற நிலையில் விரிவு படுத்தினான். முப்பத்து மூன்று ஆண்டுகள் அரசு புரிந்து சென்னை மாகாணம், மைசூர் ராஜ்யம், ஒரிசா மாகாணத்தின் தென்பகுதி, ஹைதராபாத், இன்னும் இலங்கை, மலேயா, சுமத்திரா என்று, தன் ஆட்சியை விஸ்தரித்துச் சோழ அரசின் மகோன்னதமான புகழை நிலை நாட்டினான். "பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட கோப்பரகேசரி வர்மன்" என்று கீர்த்தி பெறப் போகும் "புலியின் புதல்வன்", தன்னுடைய எதிர்கால வெற்றிக்கு எல்லாம் ஆரம்ப அறிகுறியாகத் தந்தை இராஜராஜனிடமிருந்து வீரவாள் பெறுகிறான்! சோழர் குல திலகத்தை ஆசீர்வதிக்கிறான் தந்தை இராஜராஜன்.

## ஆலயப் பிரவேசம்

"ஞானயோகி" என்றும் "பாட்டினால் பரமபதம் உற்ற பாணர்" என்றும் பிரபந்தங்கள் அஞ்சலி செய்கிற திருப்பாணாழ்வாரின் ஆலயப் பிரவேசக் காட்சியைச் சித்திரிக்கிறது மூன்றாவது வர்ணப் படம்.

"தீண்டத் தகாதவன்" என்று எந்த லோக சாரங்கரால் ஒதுக்கப் பட்டாரோ அதே லோக சாரங்கர் திருமாலின் கட்டளைப்படி இப்பொழுது அதே பாணரைச் சீரங்கம் கோவிலுக்குள்ளே அழைத்தார். "அடியேன் பாதம் அங்கு படலாகாது! அபசாரம்!" என்று கூறிய பாணரை நோக்கி, "அப்படியானால் தேவரீர் மிதிக்க வேண்டாம். அடியேன் சுமக்கிறேன்!" என்று சொல்லிப் பதிலுக்குக் காத்திராமல் தோளிலே சுமந்து ஆலயத்துக்குச் செல்கிறார் லோகசாரங்கர்!

"கோலமா மணி ஆரமும்
முத்துத் தாமமும்
முடிவில்லதோர் எழில்
நீல மேனி, ஐயோ,
நிறை கொண்டதுஎன்
நெஞ்சினையே!"

என்று பாடியவாறு சீரங்கநாதனுடைய சந்நிதிக்கே செல்கிறார் திருப்பாணாழ்வார்!

## வீரத் தமிழகம்

டாக்டர் கால்ட்வெல் குறிப்பிட்டுள்ள ஒரு வீர நிகழ்ச்சியைச் சித்திரிக்கிறது எதிரேயுள்ள நான்காவது சரித்திரக் காட்சி.

பாஞ்சாலங்குறிச்சிப் போரைப் பற்றி அறியாத தமிழர் யார்? அந்தப் போர்க்களத்திலே குற்றுயிராகக் கிடக்கிறான் ஒரு வீர மறவன். பொழுது சாய்ந்த நேரத்தில், அவனுடைய தாய் தேடித் தேடி வந்து கண்டு பிடித்து விடுகிறாள் மகனை! மடியிலே எடுத்துப் போட்டு வீட்டுக்குக் கொண்டு செல்ல முனைகிறாள். "அம்மா! என்னை விட்டு விடு. நான் மடிகிறேன். அதோ சற்றுத் தள்ளி, சாமி (ஊமைத்துரையை அவருடைய வீரர்கள் அழைத்த மரியாதைப் பெயர் அது) குற்றுயிராய்க் கிடக்கிறார். அவரை எடுத்துப் போய்க் கவனித்தால், மீண்டும் வீரத்தோடு படை திரட்டி வந்து விடுதலைக்குப் போரிடுவார். என்னை எடுத்துப் போய் என்ன பயன்?" என்று சொல்கிறான் அந்தத் தியாக வீர சிகாமணி!

பாஞ்சாலங்குறிச்சிப் போரின் சரித்திரத்திலேயே பொன் எழுத்துக்களால் பொறிக்கப் பட வேண்டிய சம்பவம் இது. தியாக வீரனுடைய தியாகத் தாயினால் எடுத்துச் செல்லப்பட்ட ஊமைத்துரை, மீண்டும் வந்து போரிட்டதைச் சரித்திரம் கூறி வியக்கிறது! தமிழகத்தின் வீரத்துக்கும், தியாக சீலத்துக்கும் அரிய உதாரணமாக விளங்கும் இந்தக் காட்சியை வண்ணச் சித்திரமாக வரைந்திருக்கிறார், நமது ஓவியர் மணியம்.

# இரவில் மலர்ந்தது

## எஸ்.வி.எஸ்



சென்ற ஆண்டில் ஹைதராபாத் அருகில் பெரிய ரயில்விபத்து நேர்ந்தது. இதைப்பற்றி ஊர் எல்லாம் ஒரே பேச்சாக இருந்தது. பத்திரிகைகளிலெல்லாம் அதைப்பற்றி பத்திபத்தியாக வர்ணனைகள் வெளி வந்தன. ஆனால் இந்தச் செய்திகளைப் படித்து அனுதாபத்துடன் யாராகிலும் என்னிடம் பேச வந்தால், நான் மேலுக்கு அனுதாபம் தெரிவிப்பது போல் காண்பித்துக் கொண்டேன். ஆம், என்னிடம் உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசும் வழக்கம் கிடையாதாகையால், அவர்கள் என் மன நிலையைக் கண்டு ஒரேயடியாய் ஆச்சரியக் கடலில் ஆழ்ந்து விட்டார்கள். உப்பு சப்பில்லாத விஷயத்துக்கெல்லாம் அனுதாபப் படும் நான் இப்படிக் கொஞ்சங் கூட இந்த ஹைதராபாத் சம்பவத்தைக் கேட்டு நெஞ்சம் நெகிழவில்லை என்றால் அவர்களுக்கு வியப்பாகத் தானே இருக்கும்!

ஆயினும் அந்த மாபெரும் சோகத்தினிடையே மனத்துக்குச் சற்று குதூகலம் அளிக்கக் கூடிய விஷயமிருக்கலாம் அல்லவா! அதை நினைத்துத் தான் நான் அப்படி நடந்து கொண்டேன். ஏனெனில் அந்த உண்மைக்கு என் வாழ்க்கையே, நானே அத்தாட்சியாக விளங்கினேன். ஆமாம், என் இல்லற வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் நிகழ்ந்த இத்தகைய நிகழ்ச்சி என் வாழ்க்கைப் படகை எவ்வளவு சுகமான திசையில் மாற்றியமைத்து விட்டது! இதுதான் எனக்கு அவர்கள் ஹைதராபாத் நிகழ்ச்சியைப் பற்றிக் கூறும்போதெல்லாம் நினைவுக்கு வந்து கொண்டிருந்தது. அந்த இன்ப நினைவே மேலோங்கி எழுந்து நின்று கொண்டிருந்தது! அதனால்தான் அவர்கள் எதிர்பார்த்த அளவு அனுதாப உணர்ச்சியை வெளிக்காட்டிக் கொள்ள இயலவில்லை.

* * *

அந்த நாட்களில் பெண்கள் பள்ளிக்கூடம் போவது என்பது நினைத்துக்கூடப் பார்க்க முடியாத விஷயமாக இருந்தது. அப்படிப்பட்ட நாட்களில் நான் கல்லூரியில் சேர்ந்து படித்தேன். ஆம், என் பெற்றோர்களுக்கு நான் ஒரே பெண். எனக்குச் சகோதர சகோதரிகள் யாரும் கிடையாது. அதனால் எனக்கு அசாத்திய செல்லம் கொடுத்து, எல்லா வசதிகளும் செய்து கொடுத்து என்னைப் படிக்க வைத்தார்கள்.

கல்லூரியில் நான் படித்துக் கொண்டிருந்த நாட்களில்தான் தேசத்தில் காந்தியடிகளின் தலைமையில் உப்பு சத்தியாக்கிரகப் போராட்டம் வெகு தீவிரமாக நடந்தது. எங்கும் தடியடிப் பிரயோகம் வெகு தீவிரமாக நடந்தது. மக்களின் உள்ளத்திலே சுதந்திரக் கனல் கொழுந்து விட்டு எரிந்தது. சர்க்கார் உத்தியோகம் பார்த்தவர்கள், கால் கடுதாசியில் ராஜிநாமா எழுதிக் கொடுத்து விட்டு, சிறை சென்றார்கள். வக்கீல்கள் கோர்ட்டுகளைப் பகிஷ்கரித்தார்கள். கல்லூரி மாணவர்கள் வந்தேமாதரம் கோஷம் போட்டு அந்நியத் துணிகளைப் பகிஷ்கரித்தார்கள். இப்படித் தேசமெங்கும் ஒரே கொந்தளிப்பு.

இந்தக் கொந்தளிப்பின் வேகம் என் இதயத்திலும் பாய்ந்தது. ஆனால் என்னால் என்ன செய்ய முடியும்! எனக்கும் சிறை செல்ல வேண்டும், ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொள்ள வேண்டும் என்ற தீவிர முனைப்பு இருக்கத்தான் செய்தது. ஆனால், நானும் கல்லூரியைப் பகிஷ்கரித்துச் சிறை சென்றால் என் பெற்றோர்கள் உயிரை இழந்து விடுவார்கள்.

இதையெல்லாம் யோசனை செய்து என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துக் கொண்டிருந்தேன். என் சஞ்சல புத்தியைக் கண்ட என் பெற்றோர்கள் எனக்கு மணம் முடித்து வைத்து விடுவது என்று தீர்மானித்தார்கள்.

கல்யாணம் செய்து விட்டால் இந்த உணர்ச்சிகள் எல்லாம் அடங்கிவிடும் என்று எதிர்பார்த்தார்கள். எனக்கோ கல்யாணம் என்றால் வேப்பங்காயாகக் கசந்தது. ஆம், எனக்கு அப்பொழுது மண வாழ்க்கையில் ஈடுபடக் கொஞ்சங்கூட விருப்பம் இல்லை. ஆனால் என் பெற்றோர்களோ எனக்கு எப்படியாகிலும் கல்யாணம் செய்து வைத்து விடுவதே சிறந்தது என்று வற்புறுத்தலானார்கள். பணக்கார இடத்தில் வரன் தேடினார்கள், மெத்தப் படித்தவர்களையெல்லாம் பார்த்தார்கள். நான் யாரையும் கல்யாணம் செய்து கொள்ள முடியாது என்று கூறி விட்டேன். கடைசியில் எனக்குப் பிடித்த வரன் யாராகிலும் இருந்தால் சொல்லும்படி வற்புறுத்தினார்கள். எனக்கோ மனத்தில் அப்படிப்பட்ட வரன் ஒருவரும் இல்லை

என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவர்கள் கேட்கவில்லை. கடைசியில் எங்கள் கல்லூரியில் என் வகுப்பில் பாஸ்கரன் என்ற ஒரு மாணவர் படித்து வந்தார். அவரது தீவிர தேசபக்தியும், காந்தியடிகளிடம் அவர் கொண்டிருந்த பக்தியும் விசுவாசமும் என்னை ஆட்கொண்டு விட்டன. எனவே, "நான் யாரையாகிலும் கல்யாணம் செய்து கொள்வதாக இருந்தால், பாஸ்கரனைத்தான் மணந்து கொள்வதாக இருக்கிறேன்" என்று சொல்லி வைத்தேன்.

உடனே என் பெற்றோர்கள் எனக்கும் பாஸ்கரனுக்கும் மணம் முடிக்கப் பெரு முயற்சி எடுத்துக் கொண்டார்கள்.

ஆம், பாஸ்கரன் வாழ்க்கையின் லட்சியம் தேசம், சுதந்திரம் என்றிருந்தபோது, இப்படித் திமர் என்று கல்யாணம் கார்த்திகை என்றால்



அவர் மனம் எப்படி ஏற்கும்! ஆயினும் அவருக்கு என்னிடம் ஒரு பற்றுதல். நான் படித்த பெண்ணாக இருந்தமையால் அவர் என்னை மணந்தால், இன்னும் பல்லாயிரம் பெண்களுக்குச் சுதந்திர விழிப்பூட்டலாம், தாய்க் குலத்துக்குப் பெருந் தொண்டாற்றலாம் என்று எண்ணினார். அதன் காரணமாகவே என்னை மணக்கவும் சம்மதித்தார்!

கல்யாணமானவுடனேயே அவர் சிறை சென்று விட்டார். ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை அவருக்கு விதிக்கப்பட்டது. சிறைவாசத்தை அனுபவித்து விட்டு அவர் வெளியில் வந்தபோது அவர் இன்னும் கடுமையான தேசபக்தராகவும், காங்கிரஸ் தொண்டராகவும் வெளிப்பட்டார்.

ஆனால் நானோ முற்றும் நேர்மாறான மன நிலையிலிருந்தேன் என்று சொல்ல வேண்டும். உப்பு சத்தியாக்கிரகத்தின் போது, கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கையில் உள்ளத்தில் பொங்கிய கனல் எல்லாம் ஆறிப் போயிருந்தது!

என் கணவரிடம் தேசபக்தி என்ற செல்வத்தைத்தவிர வேறு எந்தவிதமான செல்வமும் கிடையாது. உணர்ச்சி என்ற உடைமையைத் தவிர வேறு எந்த உடைமையும் கிடையாது. எனவே அவர் எங்கள் வீட்டிலேயே இருந்து வந்தார்.

ஆனால் என் கணவர் காங்கிரஸ் கூட்டங்களில் கலந்து கொள்வதும், தேச விடுதலை இயக்கத்தில் பங்கு கொள்வதும் அதிகமாகி வந்தது. இதன் பயனாக ரகசியப் போலீஸார் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து போவதும் அதிகரித்தது. இவை யெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை. எனவே, என்னை மணந்து கொண்டதில் என் கணவருக்கு ஏமாற்றமும், அவரை மணந்து கொண்டதில் எனக்கு ஏமாற்றமுமாக வாழ்க்கை நடந்துவந்தது. தங்கள் ஒரே மகளின் வாழ்க்கை நிலை, எல்வித சுக போகங்களுக்கும் இடமின்றி அவலமாகி விட்டதே என்று என் பெற்றோர் ஆறாத் துயர முற்றார்கள். அத் துயரம் அவர்கள் உயிர் நிலையையே உலுக்கி விட்டது எனலாம்.

என் தகப்பனார் உயிருடனிருந்தபோதே தம்







கிராமத்தை விட்டு, நிலபுலன்களை விட்டுப் பட்டணத்தில் குடியேறி விட்டிருந்தார். ஆம், அவருக்குத் தம் கிராமத்தைப் பற்றிய நினைவே அகன்றிருந்தது. ஆனால் கிராமத்திலிருந்துதான் பணம் வர எங்கள் நகர ஆடம்பர வாழ்க்கை நடந்து வந்தது. இதை என் கணவர் பாஸ்கர் பெரிதும் கண்டித்து வந்தார். "கிராமத்தில் நிலத்தை உழுது பாடுபடுபவன் எவனோ ஒருவன் இருக்க அந்த உழைப்பின் பயனை நாம் அனுபவித்து வருகிறோம், இது தவறு, மகாபாவம். அவரவர் உழைத்துத்தான் சாப்பிட வேண்டும்" என்று அடிக்கடி சொல்லி வந்தார். இத்தகைய கொள்கையைக் கேட்டு அறியாத என் தந்தை மனம் மறுகி மறுகி முடிவில் உயிரையே துறந்து விட்டார். பின்னர் என் கணவர் கிராமத்துக்குப் போய்விட வேண்டும் என்று வற்புறுத்தினார். அப்படியே நானும் முதலில் உற்சாகமாக இந்த அபிப்பிராயத்தை வரவேற்றேன். எல்லோரும் கிராமத்துக்கு வெகு சீக்கிரத்தில் குடியேறி விட்டோம்.

எங்கள் கிராமம் பட்டிக்காடு என்றால் வெறும் பட்டிக்காடுதான். எங்கள் கிராமத்தில் அதுவும் எங்கள் வீட்டுக்குப் பக்கத்தில்தான் ரயில் இருப்புப்பாதை ஓடுகிறது. ஆனால் எட்டு மைல் காடு முரடான ரஸ்தாவில் போனால்தான் ரயில்வே ஸ்டேஷனை அடைய முடியும் என்றால் எங்கள் கிராமம் எவ்வளவு லட்சணமாக இருக்கும் என்று யாரும் ஊகித்துக் கொள்ளலாம். எங்கள் கிராமத்துக்கு வந்தவுடன் முதல் சில நாட்கள் எனக்கு இன்பமாகத்தான் இருந்தது. பின்னர் எனக்கு அலுப்புத் தட்டத் தொடங்கியது.

இதற்கு நேர்மாறான நிலை என் கணவருடையது. பல நாள் நாடு கடத்தப்பட்ட ஒருவர், தம் ஜன்ம பூமிக்கு வந்து விட்டால் எவ்வளவு சந்தோஷப் படுவாரோ அவ்வளவு சந்தோஷப் பட்டார். அவருக்குக் கிராமச் சூழ்நிலை மனசுக்கு ரொம்பவும் பிடித்து விட்டது. சூரியோதயம் ஆவதற்கு முன் வீட்டை விட்டுப் புறப்பட்டு விடுவார். பண்ணையாட்களுடன் குதூகலமாக ஏர் பிடித்து உழுவார்; களை எடுப்பார்; நாற்று நடுவார். முதலில் பண்ணையாட்கள், "எசமான் நீங்கள் எல்லாம் ஏர் பிடித்து உழலாமா? கூடாது, கூடாது!" என்று தடுத்தார்கள். இன்னும் சிலர், "இப்படி நீங்கள் எல்லாம் ஏர் பிடித்து உழைக்க ஆரம்பித்து விட்டால் எங்கள் பிழைப்பில் மண் விழுந்து விடும்! எங்கள் பிழைப்பைக் கெடுக்கத்தான் வந்திருக்கிறீர்கள்!" என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

இவர்களை யெல்லாம் சமாதானப்படுத்தித் தம் வழிக்குத் திருப்பி, அவர்கள் பிழைப்பைக் கெடுக்கத் தாம் வரவில்லை என்றும் அவர்கள் வாழ்வுக்கு உயர்வும் வசதிகளும் செய்து தரவே தாம் வந்திருப்பதாகவும் கூறி நம்பிக்கை ஏற்படுத்துவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது!

ஒருசமயம், சில பண்ணையாட்கள் மறைவிலிருந்து பாஸ்கரைத் தலையில் அடித்துப் படுகாயப் படுத்தி விட்டார்கள். என் கணவர் நினைவிழந்த நிலையில் வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்க்கப் பட்டார். எங்கள் கிராமத்திலிருந்து நான்கு மைலுக்கப்பாலுள்ள டாக்டரை வரவழைத்துப் பதினைந்து நாள் வைத்தியம் செய்த பிறகு என் கணவர் பழைய நிலையை அடைந்தார். இப்படி அவரை அடித்துப் போட்டவர்களை யாரென்று கூறுமாறு கேட்டேன். அவர் இன்னார் என்று சொல்லவே மறுத்துவிட்டார். 'அவர்கள் தாங்கள் என்ன செய்கிறோம் என்று தெரியாமல் செய்து விட்டார்கள். அதனால் அவர்களைத் தண்டிக்கக்

கூடாது, மன்னிக்கத்தான் வேண்டும்' என்று என் கணவர் கூறத் தொடங்கினர். காந்தி மகானின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வந்த அவருக்கு இப்படி யெல்லாம் நடந்து கொள்வது சாத்திய மாக இருந்தது. எனக்கோ ரொம்ப ரொம்பக் கஷ்டமாக இருந்தது!

இப்படி ஒரு சம்பவமா, இரண்டு சம்பவமா! எத்தனை எத்தனையோ!

அவர் நாளடைவில் கிராம மக்களின் பரிபூரண நம்பிக்கைக்குப் பாத்திரமாகி விட்டார்.

ஹரிஜனங்களுக் கென்று ஒரு கிணறு வெட்டித் தந்தார். கிராமக் குழந்தைகளுக்கு ஒரு பள்ளிக் கூடம் ஏற்படுத்தினர். கிராமக் குடியானவர்கள் உலக வியவகாரங்கள் அறியவும், தேச பக்தி பெற வும், இரவு நேரங்களில் 'முதியோர் கல்வி' வகுப்புகள் நடத்தலானர். இப்படிப் பலப் பல தொண்டுகள் செய்யலானர். ஆகவே இரவும் பக லும் அவர்கள் மத்தியிலேயே வசிக்கலானர். எனக்கும் அவருக்கும் இடையில் கிடந்த அகழி இன்னும் அகலமாக விரிந்தது!

ஆம், எனக்கும் அவருக்கும் அடிக்கடி மனஸ்தாபங்கள், சில்லறைச் சச்சரவுகள் ஏற்பட்டு வந்தன. இருபத்தி நாலு மணி நேரமும் ஊர்க் கவலையே பட்டுக் கொண்டிருந்து விட்டு, ஒரு நிமிஷம் கூட என்னைப் பற்றி, கட்டிய மனைவியைப் பற்றிக் கவலை இல்லை என்றால் எனக்கு எப்படி யிருக்கும்! ஆனல் தவறெல்லாம் அவர் மேலேயே என்று சொல்லவும் கூடாது! என் மேலும் இருக்கத்தான் செய்தது!

அவர் என்னை இந்தக் கிராம சேவைகளில் ஈடுபடும்படி கூறினர். ஆனல் நான்தான் மறுத்து வந்தேன். எனக்குத்தான் முடியவில்லை. என்னுடைய அர்த்தமற்ற குல கௌரவம், அந்தஸ்து முதலியன குறுக்கே வந்து என்னை மக்களுடன் கலக்க முடியாதபடி செய்து வந்தன.

'ஆகா! எவ்வளவு சௌக்கியமாகப் பட்டணத்தில் சினிமாக்கள், நாடகங்கள், லேடீஸ் கிளப்புகள் முதலியவற்றுக்குப் போய்க் கொண்டு அருமையாக வாழ்க்கை நடத்தலாம்! அதற்கு வேண்டிய வசதி யிருந்தும் இப்படி இங்கே கிடந்து அவதி யுறுகிறோமே. என் கூடப் படித்த தோழிகள் எல்லாம் எப்படிப்பட்ட படித்த மேதாவிகளை மணந்து இன்ப மயமான இல்லற வாழ்க்கை நடத்துகிறார்களோ! எவ்வளவு ஆனந்தமாக வாழ்கிறார்களோ! அவர்கள் கொடுத்து வைத்தவர்கள். அவர்கள் பாக்கியசாலிகள். நாம்தான் பைத்தியக்காரத் தனமாக இவரைக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கூறி இப்படிபட்ட கஷ்ட நிலைக்கு வந்து விட்டோம்! ஈசனே! என் தலை விதியை ஏன் இப்படி நிர்ணயித்து வைத்தாய்!...' என்று என் மனத்துக்குள் மறுகி மறுகிவந்தேன்!

ஒருநாள் எனக்கும் என் கணவருக்கும் பலத்த வாக்குவாதம் நிகழ்ந்தது. அவர் எக் காரணம் கொண்டும் தம் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ளமுடியாது என்று கூறிவிட்டார். "அப்படி யானல் உங்களை விட்டுவிட்டு நான் பட்டணத்தில் என் அத்தை வீட்டில் தான் தங்கி யிருக்கப் போகிறேன். எனக்கு இந்தப் பட்டிக்காடு கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை" என்றேன்.

"எங்கே வேண்டுமானலும் போய் இருந்து கொள். உன்னை மணந்து கொண்ட போது, நீ எனக்கு உதவியாய், என் காரியங்களில் யாவிலும் கை கொடுப்பாய் என்று கருதினேன்; அதைப் போன்ற பேதைமை வேறு கிடையாது என்று எனக்குத் தெரிந்து விட்டது!" என்று கூறி வெளியேறி விட்டார்.

அப்பொழுது அந்த நல்ல நடுநிசி வேளையில் வானம் இடி இடி என்று இடித்தது. ஜன்னல் வழியாக மின்னல் ஒளி பாய்ந்து கண்ணைப் பறித்தது. எனக்கு என்ன செய்வது என்று தோன்றாமல் திக்பிரமை பிடித்து நின்றேன். சில நிமிஷ நேரத்தில் சோவென்று பலத்தமழை பெய்யத் தொடங்கி விட்டது. ஜன்னல் வழியாகச் சாரல் அடிக்க ஆரம்பித்தது. எல்லா ஜன்னல் கதவுகளையும் சாத்தி விட்டு, கதவையும் சாத்தி விட்டுப் படுத்துக் கொண்டேன்!

மழையின் 'சோ' வென்ற சத்தம் இலேசாக உள்ளே வந்துகொண்டிருந்தது. தனியே, மனத்தில் குழப்பத்துடனும் பயத்துடனும் படுத்துக்கொண்டிருந்த எனக்கு அந்தச் சத்தம் சிறிது ஆறுதலைத் தந்தது. சற்று நேரத்துக்கு முன் நடந்த சண்டையின் எதிரொலிகள் மனத்தில் எழும்பின. கண்களுக்கு வெகு நேரம் வரை தூக்கம் பிடிக்கவில்லை.

எப்பொழுது தூங்கினேனோ தெரியவில்லை. 'வீல்' என்ற பயங்கரச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தேன்! எங்கள் கிராமத்துக்குப் பக்கத்திலேயே ரயில் பாதை இருப்பதால், அதில் ஓடும் ரயில்கள் வீல் என்று ஒவ்வொரு சமயம் சத்தமிடும். அந்தமாதிரிதான் இன்றும் சத்தமிட்டிருக்கிறது என்று எண்ணி விளக்கைப் போட்டுப் பார்த்தேன். மணி இரவு பன்னிரண்டரை ஆகியிருந்தது. இன்னும் விடிவதற்கு நீண்ட நேரம் இருக்கிறது என்று மீண்டும் படுத்துக் கொண்டேன்.

அரைமணி நேரம் ஆகியிராது. "அம்மா! அம்மா!" என்ற பழகிய குரலும், கதவைத் தட்டும் சத்தமும் கேட்டன.

"யார்!" என்று கேட்டேன்.

"நான்தான், முருகன், அம்மா! கொஞ்சம் கதவைத் திறவுங்க அம்மா!" என்றான்.

கதவைத் திறந்தேன்.

பலத்த காயமடைந்த ஒருவரை மூர்ச்சையுற்ற நிலையில் இரண்டு பேராகப் பிடித்துத் தூக்கிக் கொண்டு வந்திருந்தார்கள்.

இதைக் கண்டு நான் பயந்து திடுக்கிட்டேன்.

"ஐயா கூட இல்லை. இது என்ன கோலம்! கொலை, கிலை ஏதாவது......" என்று தட்டுத் தடுமாறினேன்.

"ஐயாதான் அம்மா, அனுப்பிச்சாரு, கொலை கிலை இல்லை. நம்ம ஊரிலிருந்து, ஒரு மைல் தூரத்தில் ராத்திரி வர மெயில் வண்டி தண்டவாளம் புரண்டு கீழே விழுந்திடுச்சி. மூணு பெட்டி என்ஜின் எல்லாம் அப்படியே சட்டினியாகப் போயிட்டதுங்க! அந்த ரயில் பிரயாணிதானுங்க இவரு... அடிபட்டுக் கிடக்காரு. மூச்சு இருக்குதுங்க, என்ஜின் அடியிலே கிடக்கிறவங்க, பெட்டியடியிலே கிடக்கிறவங்க, குற்றுயிர் குறையுயிராகக் கிடக்கிறவங்க எல்லாரையும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறோம்......" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே இன்னும் இரண்டு ஆட்கள் இன்னும் இரண்டு பேரைத் தூக்கிக் கொண்டு வந்தார்கள்.

இனி யோசிப்பதற்கு நேரமில்லை. கதவை நன்றாகத் திறந்து விட்டு, அடிபட்டும் மூர்ச்சையுற்றும் கிடக்கும் பிரயாணிகளையெல்லாம் உள்ளே கொண்டு வந்து ஜமக்காளத்தையும் பாயையும் விரித்துக் கிடக்கச் செய்தேன்.

அவர்களைக் கிடத்தி விட்டுத் தூக்கி வந்த ஊர் ஜனங்கள் விழுந்தடித்துக் கொண்டு, உற்பாதம் நிகழ்ந்த இடத்துக்கு ஓடினார்கள். உள்ளே கிடத்தப்பட்ட பிரயாணிகளில் காயமுற்றவர்களின் காயங்களைத் துடைத்து, வீட்டிலிருந்த மருந்தை வைத்துக் கட்டி, அவர்கள் உடம்பு முழுதிலும் இருந்த சேறு சரம் முதலியவற்றைத் துடைத்து, அந்த இரவு வேளையில் சூடாகக் காப்பி போட்டுக் கொடுத்துக் கொஞ்சம் சிச்ருஷைகள் செய்யத் தொடங்கினேன். ஆனால் ஐந்து நிமிஷம் ஒருவர் வீதம் ஊர் ஜனங்கள் அடிபட்ட பிரயாணிகளை எடுத்து வந்தவாறாக இருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் மேற்கண்டவாறெல்லாம் வேண்டியன செய்தேன். செய்து கொண்டேயிருந்தேன். வீடு முழுதும் அந்தப் பிரயாணிகள்தான். வீடே ஒரு ஆஸ்பத்திரியாகவும் அதில் நான் ஒரு நர்ஸாகவும் ஆகி விட்டேன்!

ரயில் கவிழ்ந்த இடத்திலிருந்து எந்தப் பக்கமும் நான்கைந்து மைல் போனால்தான் ஸ்டேஷன் என்பது உண்டு. டாக்டர் வேண்டுமென்றாலும் நான்கு மைல் போனால்தான் உண்டு. ஆனால் ரயில் அதிகாரிகளுக்குச் சொல்லியனுப்பி, நான்கைந்து மைல்களுக் கப்பாலிருக்கும் டாக்டருக்குச் சொல்லியனுப்பித் தக்க வைத்திய உதவி வருவதற்குள் நன்றாக விடிந்து விட்டது. அதற்குள் காப்பாற்றப் படக் கூடிய பல பிரயாணிகளையும் அந்த இருட்டிலும், மழையிலும் என் கணவரும் ஊர் ஜனங்களும் சேர்ந்து காப்பாற்றி விட்டார்கள்.

என் கணவர் பெட்டிகளுக்கு இடையில் உடைந்து விழுந்துள்ள கனமான பலகைகள், இரும்புக் கம்பிகள், சக்கரங்கள் இவற்றையெல்லாம் தூக்கி, அப்புறப்படுத்திப் பிரயாணிகளைக் காப்பாற்ற வேண்டியதாகப் போய் விட்டது. இப்படி ஆறுமணி நேரம் ஒரு வினாடி ஓய்வில்லாமல் வேலை செய்தார். இதன் பயனாக அவர் களைத்துப் பிரக்ஞையிழந்த நிலையில் வீட்டுக்குக் கொண்டு வரப்பட்டார். இவரைப் பார்த்தவுடன், எனக்குத் 'திக்'கென்று ஆகிவிட்டது. கைகால்கள் ஓடவில்லை. எல்லாப் பிரயாணிகளுக்கும் செய்தாற்போல் கடைசியில் என் கணவருக்கே யல்லவா செய்ய வேண்டியதாகி விட்டது!

* * *

இரண்டு நாள் ஆயிற்று. பல பிரயாணிகள் உடல் நிலை பரிபூரணமாகக் குணமாகி வீடு திரும்பினர். அவர்கள் எல்லோரும் என் கணவருக்கும் எனக்கும் நன்றி செலுத்தி விட்டுப் போனார்கள்.

என் கணவரும் சற்று அசதி நீங்கி, குணமடைந்திருந்தார். அன்று ரயில்வே மானேஜரும், ரயில்வே டாக்டரும், பக்கத்து ஊரிலுள்ள டாக்டரும் என் கணவரைப் பாராட்ட வந்திருந்தார்கள்.

இது நடந்து இரண்டு நாட்களுக்குப் பிறகு பாஸ்கர், என்னைப் பெயர் சொல்லி யழைத்து, "நான் உனக்குச் சேவை உணர்ச்சியே இல்லை என்று நினைத்தேன், என்னை மன்னித்து விடு! சமயம் வாய்க்கும்போது எத்தகைய தொண்டு செய்து, எனக்கும் உனக்கும் கீர்த்தியும் புகழும் தேடித் தந்தாய். உண்மையாகவே கேட்டுக் கொள்ளுகிறேன் — என்னை மன்னித்து விடு!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்.

'இதெல்லாம் என்ன பேச்சு!' என்று சொல்லி விட்டு, சென்னைக்குப் போவதாகச் சொல்லியிருந்த திட்டத்தை ரத்து செய்து விட்டு அவருடன் சேர்ந்து எல்லா சமுதாய நல வேலைகளிலும் ஈடுபட்டேன். அமிர்தத்தை உண்டபின் வேறு ஒன்றில் மனம் எப்படிச் செல்லும்!

இடைக் காலத்தில் பிளவுபட்டிருந்த என் மனத்தை அந்த நள்ளிரவு ரயில் விபத்து என் கணவர் மனத்துடன் இணைத்து விட்டது.

# அமரதாரா




## அத்தியாயம் 35

## விபரீத நிகழ்ச்சி

மலையில் வெகு தூரத்தில் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சியைக் கண்டு பல சமயம் நான் அதிசயித்திருக்கிறேன். நல்ல இருளில் அந்த மாதிரி சிவந்த ஜோதிப் பிழம்பைப் பார்க்கும் போது ஒரு சந்தோஷம் உண்டாகும். பார்ப்பதற்கு ரொம்ப அழகாக இருக்கும்.

ஆனால் அன்று நான் ரங்கதுரையைச் சந்திக்கப் பாதிரித் தோட்டத்துக்கு ஓடிக் கொண்டிருந்த போது இந்த எரியும் காட்சி என் வயிற்றைக் கலக்கியது. அதே சமயத்தில் ஒரு ஆந்தை 'கூ' வென்று அலறவே என் பாதி உயிர் போய் விட்டது. ஏன் அப்படிப் பயமாக இருந்தது என்று எனக்குப் புரியவே இல்லை.

பாதிரித் தோட்டத்தை நெருங்கி விட்டேன். பயத்தினால் ஏற்பட்ட படபடப்பு, ஓடி வந்ததால் ஏற்பட்ட படபடப்பு இரண்டுமாகச் சேர்ந்து எனக்கு மூச்சுத் திணறியது. வேலியருகில் வந்து சற்று நின்றேன். அப்போது கூடத் திரும்பி ஓடி விடலாமா என்று ஒரு கணம் தோன்றியது. ஆனால் விதி வேறு விதமாக இருக்கும் போது அப்படித் திரும்பி விட முடியுமா? எப்போதும் போல் புதர் அருகிலிருந்து பார்த்த போது ஒன்றுமே தெரியவில்லை. ஒரே இருளாக இருந்தது. மிக லேசாக தொண்டையைக் கனைப்பது போன்ற குரல் கேட்டது. என் பயமெல்லாம் போய் அளவற்ற களிப்போடு தோட்டத்துக்குள் புகுந்து சென்றேன்.

ஆயிரமாயிரம் வண்ணப் பட்டுப் பூச்சிகள் என்னைச் சுற்றிலும் பறந்து செல்வது போல் தோன்றியது. இன்னொரு தடவை அவரை 'மாலைப் பொழுதி லொரு மேடை மிசையே' பாட்டை முழுதும் பாடச் சொல்லிக் கேட்டு விட வேண்டும். இன்னும் இரண்டு வருஷம் கேட்க முடியாதல்லவா?

பாதிரித் தோட்டத்தின் பாதைகள் எப்போதும், கல்லும் முள்ளும் நிறைந்திருக்கும். அன்று எனக்கு ஒரு கல் கூடக் குத்தவில்லை. அதற்குக் காரணம் முக்கியமாக என் மன நிலைதான். ஆனால் தோட்டமும் இப்போது மிகச் சுத்தமாக இருந்தது. தோட்டம் முழுவதையுமே பெருக்கி அங்கங்கே குவியல் குவியலாகத் தழைகள் குவிக்கப்பட்டிருந்தன. இதெல்லாம் மிக மங்கலாகத் தெரிந்தது.

நானும் மெதுவாக அந்தப் பாட்டை முனகிக் கொண்டே நடந்தேன். மிக அருகில் நெருங்கிய பிறகுதான் ரங்கதுரை அந்த மரத்தில் சாய்ந்து நின்று கொண்டிருப்பது தெரிந்தது.

என்னைக் கண்டவுடனேயே ஓடி வரும் அவர் அன்று நகராமல் இருந்தது அதிசயமாக இருந்தது. "இவர் இன்று 'அஜந்தா சித்திரம்' மாதிரி நின்று பார்க்கிறாராக்கும்!" என்று எண்ணினேன்.

ஆகா! விதி, விதி என்று சொல்லுகிறார்களே, அது எப்படி இருக்கும் என்று எனக்குத் தெரியாது. ஆனால் அந்த விதிதான் என்னை அன்று அந்தப்



பாதிரித் தோட்டத்துக்கு இழுத்துச் சென்றிருக்க வேண்டும். இல்லா விட்டால் யாரோ ஒரு சிறுவன் கொண்டு வந்து கொடுத்த கடிதத்தை நம்பி, ஒருவருக்கும் தெரியாமல், இருட்டிய பிறகு ஓடி வரத் தோன்றி யிருக்குமா? அந்த மாதிரி ஒரு காரியத்தை அதற்கு முன்னால் நான் ஒரு போதும் செய்தது இல்லை. பிற் காலத்தில் எத்தனையோ விதமான மனிதர்களுடன் பழக நேர்ந்திருக்கிறது. நான் நட்சத்திரமாக ஜொலித்த காலத்தில் எனக்கு இந்த மாதிரிக் கடிதங்கள் எத்தனையோ வந்திருக்கின்றன. அவைகளைப் பார்க்கும் போது 'அப்படியே பூமி பிளந்து என்னை விழுங்கி விடாதா!' என்று ஏங்கி யிருக்கிறேன். இப்படி அவமானங்களைச் சகித்துக் கொண்டு உயிர் வாழா விட்டால் என்ன என்று கூடச் சில சமயம் எண்ணி யிருக்கிறேன். ஆனால் எண்ணிய படியே செய்ய மனம் துணிந்து விடுகிறதா என்ன?

அப்போதும் மனத்தில் ஒரு அசட்டு ஆசை தோன்றும். ஒரு வேளை நானும் அவரும் மறுபடியும் ஒன்று சேரும் காலம் வரலாம். அதைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது என்று தோன்றும். ஆனால் இப்போது 'அதையெல்லாம் விடச் சகிக்க முடியாத அவமானத்தை அனுபவிக்க வேண்டுமென்றுதான் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருந்தோமோ? அப்பொழுதே எப்படியாவது உயிரை மாய்த்துக் கொண்டிருக்கக் கூடாதா?' என்று தோன்றுகிறது.

சே! என்ன சொல்கிறேன். இப்படிப் பட்ட அவமானத்துக்கு இடையிலும் அவருடைய அன்பு எவ்வளவு உயர்வானது என்று தெரிந்து கொண்டிருக்கிறேனே, அது போதாதா? என்னை அவர் மறக்கவில்லை. எனக்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறார் என்பதை விட என்ன சந்தோஷத்தை நான் அடைந்திருக்க முடியும்? இத்தனை கீழான நிலையில் நான் இருந்தும் என்னை அவர் நேசிக்கிறாரே. அந்த உத்தமரது அன்பை உணர்ந்து அனுபவிப்பதற்காகவே நான் இன்னும் உயிரோடு இருக்கிறேன். எனக்கு இத்தகைய பாக்கியத்தைக் கொடுத்த இறைவனை வணங்குகிறேன்.



காதலுக்காக ராஜ்யத்தைத் துறந்த மன்னரைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன். என் அன்னை அந்தக் காலத்தில் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் மன்னர் தாம் காதலித்த பெண்ணை மணந்து கொள்வதற்காக ராஜ்யத்தைத் துறந்த அதிசயத்தைப் பற்றி அடிக்கடி கூறுவாள். காதலுக்காக உயிரைக் கொடுத்தவர்களின் கதைகளைக் கூடக் கேட்டிருக்கிறேன்.

ஆனால் என்னைப் போன்ற கொலைக் குற்றம் சாட்டப்பட்ட கைதியைக் காதலித்த மனிதர் யாரைப் பற்றியும் நான் கேள்விப்பட்டதில்லை. வேறு எந்த அன்பும், தியாகமும் இதற்கு ஈடாகுமா? எத்தனை அவமானத்தைச் சகித்துக் கொள்ள அவர் தயாராக இருக்கிறார்? இதை எத்தனாவது அதிசயத்தோடு சேர்த்துக் கூறுவது?

ஏன், இப்படி யெல்லாம் வளர்த்துகிறேன் தெரியுமா? அடுத்தாற்போல் நிகழ்ந்ததைச் சொல்ல மிகத் தயக்கமாகவும், கூச்சமாகவும் இருக்கிறது. இந்தச் சின்ன அறையில் ஏற்கெனவேயே ஒரே புழுக்கமாக இருக்கிறது. அந்த விபரீத சம்பவத்தை வேறு நினைத்துக் கொண்டு விட்டால் அப்படியே உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டி விடுகிறது.

ஆனால் என் துர்ப்பாக்கியங்களுக்கெல்லாம் காரணமான அந்த நிகழ்ச்சியை எழுதாமலிருக்க முடியாது.

புன்னை மரத்துக்குப் பத்தடி தூரத்தில் நான் வந்தபோதே எனக்கு மறுபடியும் தயக்கம் உண்டாயிற்று நின்றுவிட நினைத்தேன். ஆனால் என்னால் நிற்க முடியவில்லை. என்னுடைய உணர்வில்லாமலேயே என்னுடைய கால்கள் முன்னேறியிருக்க வேண்டும்.

'ஐயோ! இதென்ன! ரங்கதுரை இல்லை போலிருக்கிறதே. ஐயையோ! அந்தப் பாவி சொக்கையா அல்லவா? அவன் கண்கள் ஏன் இப்படி நெருப்புத் துண்டுகள் மாதிரி இருக்கின்றன? கடவுளே! நெருங்கி வருகிறானே! என்ன செய்வேன்?'

என் கால்கள் துவண்டன. என் உடம்பிலிருந்த சக்தி யெல்லாம் எங்கேயோ போய் விட்டது. நகரும் சக்தியை இழந்து கால்கள் அப்படியே பூமியில் புதைந்து விட்டதாகத் தோன்றியது.

"ஐயோ!" என்று என் குரல் எழும்பியது, ஆந்தையின் அலறலைப் போலவே என் காதில் விழுந்தது.

அதே சமயத்தில் ஒரு இரும்புக் கரம் என் வாயை அழுத்தியது. "கத்தினால் கொன்று விடுவேன்" என்று அந்தப் படுபாவி சொன்னது காதில் விழுந்தது. என் வாழ்நாளில் என்றுமே நான் அத்தகைய பயங்கரத்தை அனுபவித்ததில்லை. அடுத்து நிகழ்ந்த பயங்கரமான நிகழ்ச்சிகூட என்னை இதைப் போல் பாதிக்கவில்லை என்றே கூற வேண்டும். அந்தக் கணத்தில் உடலில் அப்படியே ரத்தம் உறைந்து போய் விட்ட மாதிரி இருந்தது எனக்கு.

இதில் என்ன அதிசயம் என்றால் இத்தனை பயங்கரத்திலும் என் கண் திறந்திருந்ததுதான். புன்னை மரத்துக்குப் பின்னால் ஒரு பெரிய தழைக் குவியல் இருந்தது. அந்தக் குவியலிலிருந்து ஒரு உருவம் எழுந்தது. எனக்குச் சற்று உயிர் வந்த மாதிரி இருந்தது. எப்படியாவது தப்பித்து விடலாம் என்று எண்ணினேன். நான் எண்ணி முடிப்பதற்குள் அந்த உருவம் நெருங்கி வந்தது. சொக்கையா அதைக் கவனித்திருக்க முடியாது. சொக்கையாவுக்குப் பின்னாலிருந்து அந்த உருவம் வந்தது. காலோடு தலைவரை முஸ்லிம் ஸ்திரீகள் பர்தா அணிவது போல அணிந்திருந்தது அந்த உருவம். திடீரென்று அதிலிருந்து ஒரு கை மாத்திரம் வெளியில் வந்தது. அதில் ஏதோ பளபளவென்று மின்னிற்று. ஒரே கணம்தான். நான் என்ன ஆயிற்று என்று புரிந்து கொள்வதற்குள் சொக்கையாவின் தொண்டையிலிருந்து பயங்கரமான ஒரு சத்தம் வந்தது. என்னைப் பிடித்திருந்த கரம் தளர்ந்தது. சொக்கையாவின் உடல் மலை போல் கீழே சாய்ந்தது.

அந்த உருவம் ஒரு கணம் நின்றது. நான் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்து நின்றேன். ஐயோ! இவனிடமிருந்து தப்பி இன்னொரு அசுரனிடம் சிக்கிக் கொண்டு விட்டேனா என்று கதிகலங்கிப் போனேன். அதற்குள் அந்த உருவம் சிவப்புப் பங்களாவை நோக்கி ஓடத் தொடங்கியது. அப்போதுதான் எனக்கும் என்ன செய்ய வேண்டுமென்று தெரிந்தது. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வீட்டை நோக்கி ஓடினேன். பாதிரித் தோட்டத்தை விட்டு எப்படித்தான் வெளியில் வந்தேனோ, எனக்கே இப்போது ஞாபகமில்லை. எந்த வழியாக வீட்டுக்கு வந்தேன்? வீட்டிற்குள் எப்படி நுழைந்தேன் என்று ஒன்றுமே எனக்கு ஞாபகம் வரவில்லை. அந்த

உருவம் ஓடத் தொடங்கிய பிறகு, வீட்டில் வந்து என் தந்தையைப் பார்க்கும் வரை என் அறிவு ஸ்தம்பித்துப் போயிருந்தது போலும்!

நல்ல வேளையாக அந்தச் சமயத்தில் அய்யாக்குட்டி வீட்டில் இல்லை. அப்பா வந்தவுடன் அவர் சினிமாக் கொட்டகையில் பணம் வசூல் செய்யப் போய் விட்டாராம். அவர் என்னைப் பார்த்திருந்தாரானால் நிச்சயமாய் மறுநாள் சமாசாரம் தெரிந்தவுடன் என்னைப் பற்றிச் சந்தேகித்திருப்பார்.

என் தந்தை என்னைப் பார்த்ததும், "என்ன இந்து? என்ன செய்கிறது, அம்மா?" என்று பரபரப்போடு கேட்டுக் கொண்டே ஓடி வந்தார். என்னைப் பிடித்து ஊஞ்சலில் உட்கார வைத்தார். என் உடல் பதறிக் கொண்டிருந்தது. நா உலர்ந்து பேசவே முடியவில்லை. தொண்டையில் ஏதோ ஒரு பந்தை வைத்து அடைத்த மாதிரி வலித்தது. நான் படும் பாட்டைப் பார்த்து விட்டு என் அருமைத் தந்தை அப்படியே கலங்கிப் போய் விட்டார்.

ஒரு தலையணையை எடுத்துக் கொண்டு வந்து வைத்து என்னைப் படுத்துக் கொள்ளச் செய்தார். பிறகு தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தார். "இந்துக் கண்ணு! என்னம்மா பண்ணுகிறது? குளிராக இருக்கிறதா?" என்று கேட்டுக் கொண்டே கம்பளியை எடுத்துப் போர்த்தினார். பிறகு அருகில் உட்கார்ந்து என் முதுகைத் தடவிக் கொடுத்தவாறே மறுபடியும், "என்ன செய்கிறது என்று சொல்லேன். பயமாக இருக்கிறதே" என்று சொன்னார்.

அப்போதுதான் எனக்குச் சற்றுப் பேச முடிந்தது. இதையெல்லாம் அவரிடம் எப்படிச் சொல்வது என்று மிகவும் தயக்கமாக இருந்தது. சொல்லித்தான் என்ன பிரயோஜனம்? அவரும் ரொம்பப் பயப்படுவார். அனாவசியமாக அவருடைய உள்ளத்தைக் குழப்பிக் கஷ்டப்படுத்துவானேன் என்று நினைத்தேன். ஆகையால் "ஒன்றும் இல்லை, அப்பா. களத்து மேட்டுக்குப் போய் விட்டு வந்தேன். அங்கு வம்பு பேசிக் கொண்டிருந்ததில் நாழியாகி விட்டது. வழியில் ஐயனார் கோவிலுக்குப் பக்கத்தில் ஏதோ பிரும்மாண்டமாய்க் கன்னங் கரேலென்று நின்றமாதிரி இருந்தது. ரொம்பப் பயந்து போய் விட்டேன். சாயங்காலமே கொஞ்சம் குளிர் காய்ச்சல் வருவது போலத் தோன்றியது. அலட்சியமாக இருந்து விட்டேன். இரண்டுமாகச் சேர்ந்து அதிகமாகத் தோன்றி விட்டது. அவ்வளவுதான்" என்றேன். ஐயனார் கோவிலுக்குப் பின்னால் இருந்த புளிய மரத்தில் பிசாசு இருப்பதாக ஒரு வதந்தி உண்டு. அதனால்தான் அப்படிச் சொன்னேன்.

"ஏனம்மா! இருட்டிய பிறகு தனியாகவா வந்தாய்? அத்தனை நேரம் அரட்டை அடித்துக் கொண்டிருந்த குடியானவப் பெண்களில் யாரையாவது துணைக்கு அழைத்து வந்திருக்கக் கூடாதா? அவர்கள்தான் உன்னைத் தனியாக இருட்டின பிறகு அனுப்பலாமோ? அந்த வள்ளிக்கு மூளை எங்கே போயிற்று?" என்றார்.

பிறகு, பாவம் உள்ளே சென்று கொஞ்சம் மோரைக் காய்ச்சி எடுத்துக் கொண்டு வந்து குடிக்கச் சொன்னார். கொழுமோர் குடித்தால் பயந்த தோஷமெல்லாம் போய் விடுமாம். விபூதி இட்டு நோய், நொடி, தோஷம் சகலமும் நீங்கி விட வேண்டுமென்று ஆசீர்வதித்தார்.

அவர் இதையெல்லாம் செய்வதைப் பார்க்கவே எனக்குப் பாவமாக இருந்தது. ஆனால் நெஞ்சின் படபடப்பு மாத்திரம் அடங்கவே இல்லை. "அப்பா! என் கிட்டேயே உட்கார்ந்திருங்கள்" என்று கேட்டுக் கொண்டேன்.

அவரும் முக மலர்ச்சியோடு அருகில் வந்து உட்கார்ந்து கொண்டார். நான் புளிய மரத்துப் பிசாசை நினைத்துப் பயப்படுவதாக எண்ணிக் கொண்டு எனக்குத் தைரியம் சொன்னார்.

"இதைப் பாரம்மா! இந்துக் கண்ணு! நீ ரொம்பத் தைரியசாலி என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இவ்வளவு கோழை என்று எனக்குத் தெரியவே தெரியாது. பேய், பிசாசு, முனி இதெல்லாம் ஒன்றும் கிடையாது என்று எத்தனையோ தடவை நான் உனக்குச் சொல்லியிருக்கிறேனே. எல்லாம் வீண் பிரமை. என் வார்த்தையை விட ஊரிலுள்ள விஷயமறியாத ஜனங்களின் வார்த்தையில் உனக்கு நம்பிக்கையா? அப்படியெல்லாம் அசட்டுப் பிசட்டென்று பயப்படுவதில் அர்த்தமே இல்லை. இதைப் பற்றி ரங்கதுரை தெரிந்து கொண்டால் சிரிக்க மாட்டாரா?" என்றார்.

"இல்லை, அப்பா! எனக்குப் பயமே இல்லை. கொஞ்சம் குளிராகத்தான் இருக்கிறது. வேறொன்றும் இல்லை."

"எப்படியிருந்தாலும் நீ இனிமேல் இருட்டிய பிறகு வெளியே போகாதே.





ஏன் வீண் சஞ்சலங்களுக்கு மனத்தில் இடங் கொடுக்க வேண்டும்? இனிமேல் என்ன முக்கியமான காரியமாக இருந்தாலும் மாலை ஐந்து மணிக்கு மேல் வீட்டை விட்டு நீ தனியாகப் போகக் கூடாது. அப்படி உனக்குப் போக வேண்டி யிருந்தால் நானும் துணைக்கு வருகிறேன்" என்று சற்றுக் கண்டிப்பான குரலில் கூறினார்.

அப்படி என்னை அன்பாக வளர்த்தவர் பிறகு என்னைத் தன்னந்தனியாக இந்த உலகில் எத்தனையோ மனிதப் பிசாசுகளுடன் போராட விட்டு விட்டுப் போய் விட்டார். அவர் புண்ணியவான். அதனால் தான் சீக்கிரம் அவருக்கு நல்ல கதி கிடைத்து விட்டது.

பிறகு "இந்துக்கண்ணு! நான் ஏதாவது பாட்டுப் பாடுகிறேன். கேட்டுக் கொண்டே தூங்கிவிடு" என்றார்.

"நான் என்ன சின்னப் பாப்பாவா? தாலாட்டுப் பாடித் தூங்கப் பண்ணுவதற்கு?" என்றேன்.

"அதற்குச் சொல்லவில்லை, அம்மா. பகவான் பேரில் பாடினால் மனதுக்கு நிம்மதி ஏற்படும். தைரியம் உண்டாகும். அதற்காகப் பாடுவதாகச் சொன்னேன்."

என்னுடைய சம்மதத்துக்குக் காத்திராமலேயே, பாட ஆரம்பித்து விட்டார்.

"அஞ்சலென்ற கரதலமும்
கணைபணைகங் கணமும்
அரைக்கிசைந்த புலிஉடையும்
அம்புலிச்செஞ் சடையும்

பஞ்சடிச்சிற் றிடைஉமையாள்
ஒப்பனைபா கமு மாய்ப்
பால்வண் ணன்உளத்திருக்க
பயமுண்டோ எமக் கே?"

என்று அவர், தம்முடைய தனிப் பாணியில் பாடினார். என் மனதுக்கு உண்மையிலேயே அமைதி உண்டாயிற்று.

சற்று நேரத்துக்கெல்லாம் நான் கண்ணயர்ந்திருக்க வேண்டும். ஒரு காட்டில் தனியே நான் போய்க் கொண்டிருக்கிறேன். காட்டு விலங்குகளின் அலறல் கேட்கிறது. என் உடல் நடுங்குகிறது. நான் ஓடுகிறேன். எதிரில் ஒரு உருவம் வருகிறது. என்னைத் தடுத்து நிறுத்தி, "பயப்படாதே" என்று சொல்கிறது. அந்த உருவத்தை எங்கேயோ பார்த்திருக்கிறேனே? எங்கே பார்த்தேன்? திடீரென்று கண் விழித்தேன். எதிரில் நிற்பது அய்யாக்குட்டி அல்லவா? இப்போது தெரிந்து விட்டது. அந்தக் காலோடு தலைமூடிக் கொண்டிருந்த உரு

வம் அய்யாக் குட்டியினுடையதுதான். ஐயோ! அப்படியானால் பாதிரித் தோட்டத்தில் என்னைக் காப்பாற்றிய உருவமும் அதுதான். ஆகா! அப்படியும் இருக்குமா? அய்யாக்குட்டி அவ்வளவு தூரம் துணிந்து காரியம் செய்யக் கூடியவரா? என்ன அதிசயம்! எனக்காக எப்பேர்ப்பட்ட பயங்கரமான காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கிறார்? தம் உயிருக்கே ஆபத்து வரக் கூடியதான காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கிறாரே. இவருக்கு எப்படி நான் நன்றி செலுத்த முடியும்?

இதைத் தெரிந்துகொண்ட உடனேயே என் மனத்தில் அய்யாக் குட்டியைப் பற்றி ஏற்பட்டிருந்த கொஞ்ச நஞ்ச அருவருப்பும் போய், மிகவும் மதிப்பு உண்டாயிற்று. அவருடைய தைரியத்தை மிகவும் போற்றினேன்.

"உடம்பு எப்படி இருக்கிறது?" என்று அய்யாக்குட்டி விசாரித்தார். அவர் அப்படிக் கேட்டது, அந்த சம்பவத்தை நினைத்துக் கொண்டே கேட்ட மாதிரி தோன்றியது.

"மலேரியா காய்ச்சல் வரும் போல இருக்கிறது. இந்த ஊரில்தான் அது சகஜமாயிற்றே!" என்றேன்.

"மலேரியாவாக இருந்தால் ஒன்றும் கவலையே இல்லை. நான் போய் கொய்னா மருந்து வாங்கிக் கொண்டு வருகிறேன்."

என் தந்தை, "வேண்டாமப்பா! நானே வைத்திருக்கிறேன். அவசியமானால் நாளைக்குக் கொடுக்கலாம்" என்றார்.

அய்யாக்குட்டி 'கவலையே இல்லை' என்று சொன்னது என்னைக் கவலைப்பட வேண்டாம் என்று சொல்வதாகவே நான் எண்ணினேன்.

மணி பதினொன்று அடித்தது. நான் "அடாடா! இவ்வளவு நேரமா ஆகிவிட்டது? நீங்கள் இரண்டு பேரும் சாப்பிடவில்லையே?" என்றேன்.

அய்யாக்குட்டி "உன் அப்பா எனக்கும் சாதம் போட்டுத் தாமும் சாப்பிட்டார். உனக்கு எல்லாம் வைத்திருக்கிறார். சாப்பிடுகிறாயா?" என்றார்.

எனக்கு வேண்டியிருக்கவில்லை. உடல் மிகவும் சோர்ந்திருந்தது. எல்லாவற்றுக்கும் மேலாக அன்று ரங்கதுரையைச் சந்திக்க முடியாமல் போனதன் ஏமாற்றம் அப்போதுதான் என் உள்ளத்தைத் தாக்கியது. மணி பதினொன்று. இத்தனை நேரம் அவர் ரயிலில் போய்க் கொண்டிருப்பார். கடைசியில் அவரைச் சந்திக்க முடியவில்லை. ஆனால் இன்று எப்படிப்

பட்ட ஆபத்திலிருந்து தப்பினேம். இது தெரிந்தால் ரங்கதுரை என்ன நினைப்பார்? பச்சாத்தாபப் படுவாரா? அல்லது என்னைத் தனியே சென்றதற்காகக் கோபித்துக் கொள்வாரா? என்னைத் தேற்றுவாரா?—இப்படிப்பட்ட பலவித எண்ணங்களோடு நான் தூங்குவதற்கு முயற்சித்தேன்.

அப்பா விளக்கைத் தணித்து விட்டு என்னிடம் வந்தார். "இந்து! நான் அருகிலேயே தான் படுத்துக் கொள்கிறேன். பயப்படாமல் தூங்கு, அம்மா! ஏதாவது வேண்டுமானல் என்னைக் கூப்பிடு" என்று சொல்லிவிட்டுப் படுத்துக் கொண்டார். சில நிமிடங்களில் அவரும் தூங்கி விட்டார்.

மறுபடியும் மறுபடியும் ரங்கதுரையைப் பார்க்க முடியாமல் போன ஏமாற்றம் என் நெஞ்சை வட்ட மிட்டது. அந்தப் பாதிரித் தோட்ட சம்பவத்தை எவ்வளவு முயன்றும் மறக்க முடியவில்லை. அழுகைதான் வந்தது. நான் அடக்கிக் கொள்ள வில்லை. என்னல் முடிந்த வரை அழுது தீர்த்தேன்.

* * *

இரண்டு நாட்களுக்கு முன் டைரக்டர் ராஜாராம் என்னைப் பார்க்க இந்தச் சிறைக்கு வந்தார். என்னிடம் மிகுந்த அனுதாபத்துடன் பேசினர். நான் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் உதவி செய்தவர் ராஜாராம் என்பதை நான் ஒருபோதும் மறக்க முடியாது. ஆனல் அவருடைய உதவியால் எனக்கு ஏற்பட்டது நன்மையா தீமையா என்பது இன்னும் எனக்கு விளங்கவில்லை. என்னைப் பெரிய ஆபத்திலிருந்து காத்தார். நான் அதற்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனல் பிற்காலத்தில் என்னைச் சினிமா உலகில் புகுத்தியவர் அவர்தான். அதுதான் நன்மையா தீமையா என்று புரியவில்லை.

ஆனல் என் வாழ்க்கையை உருவாக்கியதில் முக்கியமான பங்கு அவருக்கு உண்டு என்பதை மாத்திரம் மறுப்பதற்கில்லை. எனக்கு அவர் சுயநல நோக்கத்தோடுதான் உதவி புரிந்தார் என்பதை நான் சரியாக உணர்ந்திருக்கவில்லை. எனக்காகவே தம்முடைய நலத்தைக் கூடத் தியாகம் செய்கிருர் என்று எண்ணினேன். அதனல்தான் என் வாழ்க்கையில் பல சிக்கல்கள் ஏற்பட்டன என்பது இப்போதல்லவா தெரிகிறது?

ராஜாராமிடம் நான் கோபம் கொள்வதற்கும் போதிய காரணங்கள் இருக்கின்றன. ஆனல் எனக்கு அவர் முதன் முதலில் செய்த உதவிக்கு நான் என்றென்றும் கடமைப் பட்டவள் என்பதினுலேயே நான் பேசாமலிருக்கிறேன். சொக்கையாவிட மிருந்து அவர் என்னைக் காப்பாற்றியதற்கு நான் என்ன செய்தாலும் ஈடாகாது என்றே கருதுகிறேன்.

என்ன இருந்தாலும் ராஜாராமுக்கு, "நாம் செய்த தவறுக்காக இந்துமதி தண்டனை அடைந்திருக்கிருளே. நாம் செய்ததாக ஒப்புக் கொண்டு அவளைக் காப்பாற்றி விடுவோம்" என்று தோன்ற வேண்டாமா? நான் நன்றியினல் பேசாமலிருக்கிறேனே, அவருக்கு அது மனத்தை உறுத்த வேண்டாமா? ஆனல் நான் இதை அய்யாக் குட்டியிடம் எதிர்பார்க்கக் கூடாதுதான். அப்போது என்னைக் காப்பாற்றுவதில் அவருக்குப் பயன் இருந்ததாகக் கருதினர். தாம் மணந்து கொண்டு விடலாம் என்ற எண்ணம் இருந்தது. ஆனல் இப்போது என்னைக் காப்பாற்றி அவருக்குப் பயன் என்ன? தம் உயிரையும் இழக்க வேண்டியிருக்கும். அத்தகைய காரியத்தைச் செய்ய யாருக்குத்தான் மனம் வரும்?

இதை நான் ரங்க துரையிடம் இதுவரை தெரிவிக்க வில்லை. தெரிவித்தால் அவர் டைரக்டர் ராஜாராம் குற்றவாளி என்று போலீஸில் கூறலாம். ராஜாராம் குற்றவாளி என்று நிரூபிக்க முடியாது போகும். என் பேரிலுள்ள குற்றத்தை அது ஊர்ஜிதம் செய்வதாக ஆகும். என்னை விடுவிப்பதற்காக இன்னெருவர் மீது வீண் பழி சுமத்தியதாக அவரை எல்லோரும் ஏசுவார்கள். இதையெல்லாம் எண்ணித்தான் நான் இந்த விஷயத்தை அவரிடம் சொல்லவில்லை. ஆனல் உள்ளது உள்ளபடியே எழுதித் தருவதாக வாக்களித்திருக்கிறேன். அதனல் தான் எல்லாவற்றையும் எழுதிவிட முன் வந்திருக்கிறேன். ரங்கதுரைக்கு நான் நிரப்ராதி என்பது தெரிந்தால் போதும்.

நான் அந்தக் கனவு கண்டதனல் மட்டும் அய்யாக்குட்டி அந்தக் காரியத்தைச் செய்து விட்டதாக நம்பி விடவில்லை. பிறகு அவர் செய்த பல காரியங்கள் அதை ஊர்ஜிதம் செய்தன. ஆனல் நான் அவரைச் சந்தேகிப்பதாகக் காட்டிக் கொள்ளவே யில்லை. தான் நன்றி செலுத்துவதற்குச் சரியான முறை என்று கருதினேன். அதனல் என் வாழ்வு எவ்வளவு தூரம் பாதிக்கப் பட்டிருக்கிறது என்பதை எண்ணிப் பார்க்கும்போது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. (தொடரும்)

தரத்தில்
முன்னணியில் நிற்பவை

# K.T.R.



சேரன் * சோழன் * பாண்டியன்
ஜவ்வாஜி பத்திகள்..
..கோபுர மார்க் பன்னீர்..
..சந்தனாதி தைலம்..
அரைக்கீரை விதைத் தைலம்
* * *

**K.T.R. வாசனாதி திரவியசாலை.** விஜயபுரம்,
தஞ்சை ஜில்லா

---




தாமின் புறுவது
உலகின் புறக்கண்டு
காமுறுவர்
கற்றறிந் தார் -குறள்



சுவை யறிந்தவர்கள்
எல்லாம் தாம் மகிழ்வ
தோடு மட்டுமல்லாது
பிறரையும் அதை
அநுபவிக்கச் செய்வர்

உரிமையாளர்கள்:—
மீ.ந.அ.செய்யது இப்ராம்ஸா & சன்ஸ்,
புதுக்கோட்டை.



சிறிய கார்களுள் உலகிலேயே மிகப் பெரியது!

# இப்பொழுது ஒரு டீ-லக்ஸ் மாடல்!

- கவர்ச்சியும் விஸ்தாரமும் உள்ளது.
- நான்கு அகலமான கதவுகள் - சௌகரியமாக நுழையவும் வெளிவரவும் ஏற்றவை.
- சுழற்சியினால் ஏறியிறங்கும் கண்ணாடிகள்.
- முன்ஸீட்டுகளை வேண்டியபடி மாற்றியமைத்துக் கொள்ளலாம்.
- பொத்தானை அழுத்திப் பூட்டக் கூடிய கதவுப் பூட்டுகள்.
- சாமான்கள் வைக்கத் தாராளமான இடம்.
- பிரதி காலனுக்கும் 40 - 45 மைல்கள்.

## ஸ்டாண்டர்ட் 8 டீ-லக்ஸ்

தென் இந்தியாவில் டீலர்கள்:

தி. கொ. ராஜ்யத்தில் கொச்சி நீங்கலாக, மற்றும் மலபார் தென் கன்னடம் ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸௌத் இந்தியா) லிமிடெட், திருவனந்தபுரம், கோட்டயம், கொல்லம். ● கோயமுத்தூர் ஜில்லா மற்றும் கொச்சி பிரதேசத்திற்கு: மெஸர்ஸ் அஸோஸியேடெட் ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட், கோயமுத்தூர், எர்ணாகுளம். ● மதுரை, திருநெல்வேலி, ராமநாதபுரம் ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் டி. என். சக்ரபாணி செட்டி அண்டு ஸன்ஸ் லிமிடெட், மதுரை, திருநெல்வேலி. ● தஞ்சாவூர் மற்றும் தென் ஆற்காடு ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் காசி அண்டு சேது, தஞ்சாவூர், கும்பகோணம். ● கிழக்கு கோதாவரி, விசாகப்பட்டினம் ஸ்ரீகாகுளம் ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் ஸ்ரீ பட்டாபிராம் கமர்ஷியல் ஸிண்டிகேட், காக்கிநாடா. ● குண்டூர், கிருஷ்ணா மற்றும் மேற்கு கோதாவரி ஜில்லாக்களுக்கு: மெஸர்ஸ் ஸ்ரீ பிரகாஷ் ஆட்டோமொபைல்ஸ், விஜயவாடா.

சென்னை நகரம், பெங்களூர் மற்றும் உதகமண்டலத்திற்கு:

மெஸர்ஸ் யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) லிமிடெட், சென்னை

# பிருத்வியில் இணையில்லாப் பிருத்வி!

இன்று இன்ஷ்யூரன்ஸ்-க்ஷேமநிதி—என்பது நமது வாழ்க்கையில், நாட்டின் நலத்தில் மிக முக்கியமான ஒரு அம்சம் ஆகிவிட்டது. ஆம், அத்தனை பேர் இன்ஷ்யூர் செய்து க்ஷேமநிதியில் பங்குகொண்டு அதை அப்படியொரு மாபெரும் சாதனையாகச் செய்துவிட்டார்கள். ஆனால் இன்ஷ்யூர் செய்தவர்களில் பெரும்பாலோரை அணுகி, "இன்ஷ்யூரன்ஸ் என்றால் என்ன, அந்த ஸ்தாபனம் எப்படி வேலை செய்கிறது என்பதையெல்லாம் உணர்ந்துதான் நீங்கள் இன்ஷ்யூர் செய்து கொண்டீர்களா?" என்று கேட்டுப் பாருங்கள்!

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டாக இருக்கும் என் நண்பன் ஒருவனின் நச்சரிப்பு தாங்காமல் ஒரு பாலிஸி எடுத்துக் கொண்டேன்" என்றோ, அல்லது "என் தூர பந்துவான இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டு ஒருவனின் உபத்திரவம் தாங்காமல் இன்ஷ்யூர் செய்துகொண்டேன்" என்றோதான் கூறுவார்கள். தங்கள் சொற்ப வருவாயில் கொஞ்சம் மிச்சம் பிடிக்க வேண்டும் என்று இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்பவர்களும் சிலர் உண்டு.

எப்படியானால் என்ன? இன்று பெருவாரியான நடுத்தர வகுப்பைச் சேர்ந்த மக்கள் தங்கள் எதிர்காலத்தை உத்தேசித்து ஏதாவதும் சேர்த்து வைக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் இந்த இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் தான்; ஒரு 'பாலிஸி' எடுத்துக் கொண்டு விட்டால் போதும். இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்காரர்கள், தவணை தவணையாகக் கட்ட வேண்டிய பணத்துக்காக ஓயாமல் நினைவு படுத்தி வந்து.—கால் வருட பிரீமியம் நோட்டீஸ், அரை வருட பிரீமியம் நோட்டீஸ், ஆண்டு பிரீமிய நோட்டீஸ் என்று பல நோட்டீஸ்கள் அனுப்பி — மக்கள் தங்கள் எதிர் காலத்தை உத்தேசித்துச் சேமித்து வைக்கும்படி செய்கிறார்கள். அதாவது அவர்கள் சேமிப்பு, அவர்கள் பாலிஸி எடுத்துள்ள இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் கட்டாயத்தின் பேரில் செலுத்தி வந்த பிரீமியம் தொகைகள்தான்.

ஆம், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்காரர்கள் "மூன்று மாதத்துக்கு ஒரு முறை பதினைந்து ரூபாய் வீதம் இருபது ஆண்டுகள் கட்டினால் இருபது ஆண்டு முடியும் தறுவாயில் நாங்கள் ஆயிரம் ரூபாய் மொத்தமாகத் தருகிறோம். அதுமட்டுமன்றி, விதி வசத்தினால் முதல் தவணையாகிய ரூ. 15 கட்டியதுமே அகால மரணமடைந்து விட நேரிட்டால் நாங்கள் இருபது வருஷம் முடியும் தறுவாயில் கொடுப்பதாகச் சொல்லும் ஆயிரம் ரூபாயை உங்கள் சொத்துக்குரிய வாரிசுதாரரிடமோ, அல்லது யாரிடம் கொடுக்கவேண்டும் என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறீர்களோ அவர்களிடமோ கொடுத்து விடுகிறோம்" என்று கூறுகிறார்கள்.

ஒரு சிறு தொகையைப் பிரீமியமாகக் கட்டி, அதற்குப் பதிலாகப் பெரிய தொகையை, தான் மறுநாளே காலகதி யடைந்துவிட்டால் கூட பெற முடியும் என்பது முதலில் பார்வைக்கு விசித்திரமாகத்தான் தோன்றும்.

ஆனால் இவ்வதிசயம் பாலிஸி எடுத்துள்ள அங்கத்தினர்கள் எல்லாரும் ஒழுங்காகப் பணம் செலுத்தி வருவதனால்தான் நடைபெறுகிறது. இத்தொகைகளி லிருந்து, கம்பெனி, தன் நிர்வாகத்திற்கான, உத்யோகஸ்தர்களின் சம்பளம், தபால் செலவு, தஸ்தாவேஜுகள் முதலியவை அச்சடிப்பதற்கான செலவு இவைகளை எடுத்துக்கொண்டு, மற்றும் பாலிஸிதாரர்களின் அகால மரணத்தால் கொடுக்கப்பட வேண்டிய தொகைகளையும் விநியோகிக்கிறது. இவை யாவும் கொடுத்துத் தீர்ந்த பின்பும், சேர்ந்துள்ள தொகைகளை இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி கட்டட வகையான ஆஸ்தி, சர்க்கார் பத்திரங்கள், சிறந்த தொழிலுற்பத்தி ஸ்தாபனங்கள் இவைகளில்



என். கோபாலஸ்வாமி ஐயங்கார்

நல்ல வட்டி விகிதத்தில் முதலீடு செய்வார்கள். இந்தத் தொகைகளிலிருந்துதான், தங்கள் இன்ஷ்யூரன்ஸ் ஒப்பந்த காலம் முழுவதும் ஜீவித்து, பிரீமியம் தொகைகளை செலுத்தி வந்துள்ளவர்களுக்கு சேரவேண்டிய தொகைகள் அளிக்கப்படும்.



எஸ். பார்த்தசாரதி

இதிலிருந்து ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியானது, பாலிஸி எடுத்துக் கொண்டவர்களின் பணத்தினால், அவர்களின் நன்மையை உத்தேசித்தே நடத்தப்படும் ஸ்தாபனம் என்பது தெரிகிறது அல்லவா? பாலிஸிதாரர் தமது ஜீவியத்தில் கம்பெனிக்குச் செலுத்தும் தொகை, ஒப்பந்த கால முடிவில் தாம் திரும்பப் பெறப் போகும் தொகையை விட கொஞ்சம் அதிகமாகத்தான் இருக்கும். பிற்காலத்தில், ஒப்பந்தங்களின்படி உள்ள உரிமைத் தொகைகளைக் கொடுத்துத் தீர்ப்பதில் கம்பெனியின் சக்தியைப் பற்றி எள்ளளவும் சந்தேகத்திற்கு இடமேற்படக் கூடாது என்பதற்காகத்தான் இம்மாதிரி வைக்கப்பட்டுள்ளது. ஆனால் பாலிஸிதாரர்கள் செலுத்தும் இந்த அதிகப்படியான தொகையும், பாலிஸிதாரர்களுக்கு அவ்வப்பொழுது கம்பெனி பெறும் லாபத்திலிருந்து திரும்பக் கிடைத்துவிடும். அதாவது கம்பெனி பெறும் லாபத்தை, அது தன்னிடம் பாலிஸி எடுத்தவர்களுக்கே பிரித்து வழங்கி விடுகிறது. அதனால் பாலிஸிதாரர்கள் அதிகமாகக்கட்டும் தொகையும் எப்படியும் திரும்பி விடுகிறது.

பொதுவாக இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் லாப நோக்கத்துடனேயே ஆரம்பிக்கப்படுகின்றன. ஆரம்ப நாட்களில் முதலீடு செய்யும் தொகையைக் கம்பெனியை நிலைநிறுத்தவும் பாலிஸி எடுத்தவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவும் செலவழிக்கிறார்கள். பிறகு சில ஆண்டுகளில் பாலிஸி எடுத்தவர்களின் தொகை கம்பெனியில் ஏராளமாகச் சேர்ந்து விடுகிறது. அதன் பயனாக மூலதனம் போட்டவர்களின் தொகை அவசியமில்லாமல் போய் விடுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் ஐம்பதினாயிரம் ரூபாய் அல்லது ஒரு லட்ச ரூபாயுடன் ஆரம்பிக்கப் பட்ட கம்பெனிகள் இப்பொழுது கோடிக் கணக்கான ரூபாய் மூலதனத்தைக் கொண்ட கம்பெனிகளாக விளங்குகின்றன அல்லவா? இந்த நிலைமை பாலிஸி எடுத்தவர்கள் செலுத்தும் மாதத் தவணைத் தொகை கோடிக் கணக்கில் சேர்ந்ததினாலேயே ஏற்பட்டிருக்கிறது.

ஆனால் பல கம்பெனிகளில் பாலிஸிதாரர்களின் தொகையை நிர்வகிக்கும் உரிமை முதலில் மூலதனம் போட்டு ஆரம்பித்த ஒரு சில பங்குதாரர்களிடம் தான் இருக்கிறது. கம்பெனி நிர்வாகம் கெட்டு விட்டால்கூட அதன் காரணஸ்தர்களைப் பாலிஸிதாரர்கள் நீக்க முடியாது. ஆனால் நிர்வாகிகள், கம்பெனியின் நிர்வாகத்தை ஒருவரிடமிருந்து இன்னொருவரிடம், தங்கள் பங்குகளை விற்பதின் மூலம் மாற்றலாம். மேலும், பாலிஸிதாரர்கள் கட்டும் அதிகப்படி தொகைகளிலிருந்து ஏற்படும் லாபத்திலும் பங்கு பெறுகிறார்கள். ஆகவே ஆரம்ப நாட்களில் போட்ட மூலதனத்தோடு இப்பொழுது பாலிஸிதாரர்களின் பணத்திலிருந்து கிடைக்கும் லாபத்தை மட்டும் ஒப்பிட்டால், முதலில் போட்ட மூலதனத்தை விட இது அனேக மடங்கு பெரிய தொகையாகி விடும்.

இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளிலேயே இன்னொரு வகைக் கம்பெனிகளுமிருக்கின்றன. அந்தக் கம்பெனிகளில் பங்குதாரர்கள் என்ற இனமே கிடையாது. ஒவ்வொரு பாலிஸிதாரருமே பங்குதாரராகக் கருதப்படுகிறார். இந்த வகைக் கம்பெனிக்கு 'மியூச்சுவல்'-பரஸ்பர - க்ஷேமநிதி கம்பெனி' என்று பெயர்.

இவை பாலிஸிதாரர்களின் நலனைக் கருதியே நடத்தப்படுகின்றன. ஆனால் முதலாளித்வ இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளில், பங்குதாரர்களின் நன்மையைக் கருதி, பாலிஸிதாரர்களின் நன்மைக்கல்லாத விதத்தில் நிர்வகிக்கப்படவேண்டி நேரிடுகிறது. ஆனால் பரஸ்பர க்ஷேமநிதி கம்பெனிகளில் இத்தகைய நிலை ஏற்படுவதில்லை. இந்தக் கம்பெனி

களில் மட்டும் பாலிஸிதாரர்களின் நலத்துக்கு எப்பொழுதுமே குந்தகம் நேராது.

பாரத தேசம் சுதந்திரம் அடைந்த பின் நமது சர்க்கார் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளின் இந்த நிலையை உணர்ந்தார்கள். எனவே, 1950-ல் மக்கள் சபையில் பழைய இன்ஷ்யூரன்ஸ் சட்டத்துக்கு ஒரு இருத்தம் கொண்டு வந்து நிறைவேற்றியபோது முதலாளித்வ இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் எல்லாம் நாளடைவில் 'மியூச்சுவல், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியாக மாறிவிட வேண்டும் என்று கருதி அதை நடை முறையில் கொண்டு வருவதற்கும் ஒரு வழி வகுத்துக் கொடுத் துள்ளனர். என்றாலும் 1950-ல் நிறைவேற்றப்பட்ட இச்சட்டத்தின்படி இது வரை ஒரே ஒரு கம்பெனிதான் மாறி யிருக்கிறது. அதுதான் மதராஸிலுள்ள பிருத்வி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

*1943*-ம் ஆண்டில்தான் 'பிருத்வி' ஆரம்பிக்கப்பட்டது. அதன் முதல் சேர்மேனான காலஞ் சென்ற ஸர் என். கோபாலசுவாமி அய்யங்காரும், மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதியும் மிக உயர்ந்த லட்சியங்களுடன் ஆரம்பித்தனர். அந்த லட்சியம் இதுவரை விடாமல் கடைப் பிடித்து வரப்பட் டுள்ளது. ஆரம்பத்தில் அதற்கு ரூ. 15,00,000 மூலதனம். இன்ஷ்யூரன்ஸில் எத்தனை துறை இன்ஷ்யூரன்ஸ்கள் உண்டோ அத்தனை துறைகளிலும் அது சென்றுதொண்டாற்றி யிருக்கிறது. அதிலும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸில் 1953-ல் அதன் வியாபகம் மிகவும் விரிவடைந்தது. ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுத்துக் கொண்டவர்களின் நிதி மட்டும் ரூ. 75 லட்சமாகும். இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வளவு விரிவாகப் பிருத்வியின் புகழும் தொண்டும் வேலையும் பரவியதற்குக் காரணம், இந்தக் கம்பெனியின் பங்குதாரர்கள், தங்கள் லாபத்தில் பெரும் பகுதியை, தென்னிந்தியாவில் பிருத்வி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி நன்கு நிலைபெறவேண்டும் என்ற உயர்ந்த இலட்சியத்துக்கே செலவழித்ததுதான். ஆம், பல ஆண்டுகள் பங்குதாரர்கள் லாபத்தில் எத்தகைய பங்கும் பெறவில்லை—எவ்வளவோ லாபம் கிடைத்திருந்தும் கூட!

*1953*-ம் ஆண்டின் தொடக்கத்திலே பிருத்வி கம்பெனியின் மானேஜிங் டைரக்ட

ராக இருந்த ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி, 'ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் இலாகா தானே இயங்கக் கூடிய சக்தி பெற்று விட்டது; இனி இதை பாலிஸிதாரர்களிடம் ஒப்படைக்க வேண்டியதுதான்' என்று எண்ணினர்.* உண்மையிலேயே பாலிஸிதாரர்கள்தானே பிருத்வியின் இவ்வளவு வளர்ச்சிக்குமே காரணம்.

அவர் விருப்பப்படியே, மத்திய சர்க்கார் அனுமதியுடன், இப்பொழுது பிருத்வி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி அதில் பாலிஸி எடுத்துள்ளவர்களின் சொந்தக் கம்பெனியாகி விட்டது! தனி உடைமையாக இருந்தது பொது உடைமை யாகிவிட்டது. ஆரம்பத்தில் மூல தனம் போட்டிருந்த பழைய பங்குதாரர்கள் இப்பொழுது தங்கள் பங்குத் தொகையைத் திரும்ப வாங்கிக்கொண்டு, கம்பெனியைப் பொது வுடைமையாகச் செய்ய இசைந்து விட்டார்கள். பொது இலாகா தன் பொறுப்புகளைக் கொடுத்துத் தீர்த்த பின் உள்ள தொகையை மட்டுமே பங்குதாரர்கள் பெற்றுக்கொள்ளுகிறார்கள். மேலும் அவர்களுக்கு ஆயுள் இலாகாவின் எதிர்கால லாபத்திலிருந்து எவ்வித பங்கும் கிடையாது. அன்றியும், எவ்வித நஷ்ட ஈட்டுத் தொகையும் கிடையாது. பார்க்கப் போனால் வியாபாரத் துறையில் இத்தகைய அதிசயம் நடைபெற்றதே இல்லை; இதுதான் முதல் அதிசயம் என்று சொல்ல வேண்டும். ஆம், யாருக்குத்தான் மனம் வரும்? நல்ல லாபத்தைத் தரும் ஒரு கம்பெனியைப் பொது உடைமையாக்க? அதிலும், எத்தகைய நஷ்ட ஈடும் கோராமல் ஒப்படைக்க? ஆகவே, இத் துறையில் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி வழிகாட்டியாக விளங்குகிறார். பலரும் இச்சிறந்த உதாரணத்தைப் பின்பற்றுவார்கள் எனவும் நம்புகிறோம்.

இன்று பிருத்வி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி தென் இந்தியாவில் மிக உன்னத நிலையிலிருக்கும் கம்பெனியாகும். அதன் புகழிலும், நிலையான சேவையிலும், டைரக்டர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டு நிர்வாகம் நடப்பதிலும் பிருத்விக்கு இணை இந்தப் பிருத்வியிலேயே இல்லை. இதன் பிரீமிய விகிதாசாரங்கள், மற்றக் கம்பெனிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகக் குறைவு. எதிர் காலத்திலும் பொது மக்களுக்குச் சலியாத் தொண்டு புரிய வேண்டும் என்பதே அதன் குறிக்கோள்! இந்த இலட்சியம் ஓங்குமாக!



# ஜட்கா வீரர்

எம்.எஸ்.மணி

எழும்பூர் ஸ்டேஷனை விட்டு வெளியே வந்ததும் நான் எதிர் பார்த்தபடி என்னை வரவேற்க ஒரு கூட்டம் நின்று கொண்டிருந்ததைக் கண்டு என் உள்ளம் உற்சாகத்தால் பூரித்தது.

"வா, சாமி! நம்ப வண்டிலே ஏறு சாமி!" என்று பல குரல்கள் என்னை அன்புடன் அழைத்த போது என் நெஞ்சு நெட்டியாய் நெகிழ்ந்தது.

"பெட்டியை இப்படிக் கொடு, சாமி!" என்று டஜன் கணக்கான கைகள் என் இரு கைகளிலு முள்ள இரு தோல் பெட்டிகளையும் பரிவுடன் வாங்கிக் கொள்ளத் துடித்தபோது என் மனம் பாகாய்க் கரைந்தது.

நான் ஒரு தரம் சுற்றிப் பார்ப்பதற்குள் கூட்டம் பெரிதாகச் சமாளிக்க முடியாத நிலைமைக்கு வந்து விடும் போலாகி விட்டது. ஆனால் நல்ல வேளை யாக இவ்வளவு பெரிய கும்பலைக் கண்டதும் இரு போலீஸ்காரர்கள், "ஏதோ அரசியல் தலைவர் தான் ஆவடிக் காங்கிரஸ் கூட்டத்துக்காக முன் னறிவிப்பில்லாமல் வந்திருக்கிறார் போலிருக் கிறது!" என்று எண்ணியது என்னுடைய நல்ல காலம்தான்.

கும்பலை ஒதுக்கி விட்டு அவர்கள் என்னருகில் வந்து, "ஐயாவுக்கு யாரைப் பார்க்க வேண்டும்!" என்று பணிவுடன் கேட்டார்கள்.

"சென்னையை!" என்று தலைநிமிர்ந்து பதில் சொன்னேன்.

இதைக் கேட்டதும் அலைபாகச் சிரிப்பொலி எழுந்தது. இரு போலீஸ்காரர்களும் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்து விட்டு நகர்ந்தார்கள். அவர்கள் நடந்த உடனே ஜட்காவீரர்கள் மீண்டும் என்னை முற்றுகை யிட்டார்கள். அடுத்த வினாடி என்னை அவர்கள் சகோதர பாசத்துடன் கட்டித் தழுவி இழுக்க ஆரம்பித்த போதுதான் என் நிலைமை எவ்வளவு அபாயகரமானது என்பதை உணர்ந்தேன். அதோடு எந்த என் சொந்த வியாபாரத்தை உத்தேசித்து நான் சென்னைக்கு வந்தேனோ அவ் வியாபாரத்தைத் தொடங்க அதைவிடச் சரியான இடமும் சமயமும் இடையாது என்பதையும் உணர்ந்தேன். உடனே நான் முதல் நாள் திருச்சி ஜங்ஷன் ஜட்கா வீரர்களிடம் வெற்றிகரமாக நடந்து கொண்ட முறையையே கடைப் பிடிக்கத் தீர்மானித்தேன்.

அதன்படி நான் என்னை வெடுக்கென்று நண்பர் களிடமிருந்து பிய்த்துக் கொண்டேன். இரண்டு பெட்டிகளையும் கைகளில் வைத்துக் கொண்டே இறு இறு வென்று ஒரு தடவை சுழற்றினேன். அப்போது என்னைச் சுற்றி வட்டமாக மூன்று அடி இடைவெளி ஏற்பட்டது. உடனே என் தோல் பெட்டிகளைத் தரையின் மேல் ஒன்றின் மீதொன்றாக வைத்து விட்டு அவைகளின் மேலேறிக் கொண்டேன். என் விநோதச் செய்கை யைக் கண்டதும் ஜட்கா வீரர்களின் கூட்டம் பிரமித்துப் போய் நின்றது.

இதுதான் சமயமென்று நான் என் பிரசங்க மாரியைத் துவக்கினேன்: "அருமை மன்னர் களே! ஜட்கா வீரர்களே! முதலில் யான் என்னை யார் என்று அறிமுகப் படுத்திக் கொள்கிறேன். யான் என்றால் நான் என்று அர்த்தம் என்று யானுமே நான் உங்களுக்குத் தெரியப்படுத்த வேண்டியதில்லை! யான் அல்லது நான் தென் மாவட்ட ஜட்கா வண்டிப் பிரயாணிகள் சங்கத் தின் உபதலைவர் என்று நீங்கள் அறிந்தால் என்னிடம் இவ்வளவு அன்பை வெளிப்படுத்தி யிருக்க மாட்டீர்கள். ஜட்கா வண்டி ஏறுபவர்க ளுக்கு, ஜட்கா வண்டி ஓட்டுபவர்கள் இழைக்கும் அநீதியை வன்மையாகக் கண்டிக்கவும், கூடு மானால் அடக்கவுமே மேற்படி சங்கம் ஆரம் பிக்கப் பட்டிருக்கிறது என்பதையும் முன்னெச் சரிக்கையாக உங்களுக்குத் தெரியப் படுத்திவிட விரும்புகிறேன்."

பிரசங்கத்தைக் கொஞ்சம் நிறுத்தினேன். தங்கள் பிழைப்புக்கு ஏதோ ஆபத்து வந்து விட்டது என்பதை உணர்ந்ததற்கு அடையாள மாகப் பல ஜட்கா வீரர்கள் பீடிகளை அணைத்து விட்டுக் காதில் செருகிக் கொண்டார்கள். இது தான் என் வியாபாரத்தைத் தொடங்கத் தக்க தருணம் என்று தெரிந்து கொண்டு சட் டென்று கீழே குதித்துப் பட் டென்று மேல் பெட்டியைத் திறந்தேன். அதிலிருந்து இரண்டு டப்பாக்களை எடுத்து இரண்டு கைகளிலும் பிடித்துக் கொண்டு தலைக்கு மேல் 'கர கர' வென்று சுற்றிக் காண்பித்தேன்.



டீரென்று கூட்டத்தை நோக்கி, "காலையில் பல் தேய்த்துவிட்டு டீ குடிக்கிறீர்களா! இல்லாவிட்டால் பல் தேய்க்காமலேயே டீ குடிக்கிறீர்களா!" என்று கேட்டேன்.

"என்ன சாமி! நாங்க என்ன குதிரையா பல் தேய்க்காமல் டீ குடிக்க!" என்று கேட்டான் ஒரு ஜட்கா வீரன்.

"அப்படியானால் உன் குதிரை பல் தேய்க்காமல் டீ குடிக்கிறதா!" என்று திருப்பி அவனைக் கேட்டேன் நான்.

"டேய், அய்யா படா ஆள்ரா!" என்று பக்கத்திலிருந்தவனிடம் சொல்லி விட்டு முதல் பேர்வழி என்னிடம் திரும்பி, "ஏன் சாமி! குதிரைக்கு டீ கொடுக்கிற தென்றால் பக்கெட் டீ வேணுமே! இப்போ நாங்க குதிரைக்குக் கொள்ளும் புல்லுமே வாங்கப் பணமில்லாமே கஷ்டப்படுறோம். இந்த லச்சணத்துலே அதுக்கு டீ வேறே கொடுக்கணுமா!" என்று கேட்டான்.

"ஆ! உங்களுடைய அந்தக் கஷ்டத்தைப் போக்கத்தான் நான் சென்னைக்கு விஜயம் செய்திருக்கிறேன்!" என்றேன்.

அவர்கள் கஷ்டத்தைப் போக்க ஏதோ பணம் தான் கொடுக்கப் போகிறேனென்று எண்ணிக் கூட்டம் என்னிடம் சற்று நெருங்கியது. நானும் மேலே தொடர்ந்தேன்.



"நண்பர்களே! நான் பணம் ஏதாவது இப்பொழுது கொடுக்கப் போவதாக நினைக்காதீர்கள். ஆனால் அதைவிட உயர்ந்த பண்டம் ஒன்றை உங்களுக்கு அளிக்கப் போகிறேன். இதோ இந்த டப்பாவுக்குள் என் குருநாதர் குதிரைப்பட்டிச் சாமியார் அருளிச் செய்த ஒரு அபூர்வ பஸ்பம் இருக்கிறது. ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு யுத்த காலங்களில் குதிரைக்குப் பசியே எடுக்காம லிருப்பதற்காக உபயோகப் படுத்தப் பட்ட இந்த பஸ்பத்தின் விவரத்தை ஏட்டுச் சுவடிகளைப் போட்டுப் புரட்டி என் குருநாதர் அலசிக் கண்டு பிடித்திருக்கிறார். பஸ்பத்தின் விலை மலிவா யிருந்தாலும் அதில் சேர்ந்துள்ள வஸ்துக்கள் விலை யுயர்ந்தவை. கொள்ளு, எள்ளு, எட்டிக்காய், மட்டிப்பால், சேமக் கிழங்கு, ஆமணக்கு விதை, இன்னும் என் குருநாதர் அருளிய ஸ்பெஷல் மின்சார மூலிகை இவைகளைக் கொண்டு தயார் செய்த இந்த பஸ்பத்தைக் குதிரைகள் சாப்பிட வேண்டிய அவசியமில்லை. சும்மா இதைக் கொண்டு அவைகளின் பல்லைத் தேய்த்தால் போதும். அப்படி விடாமல் எண்ணி ஆறுநாட்கள் காலையும் மாலையும் தேய்த்தால் சாகிற வரைக்கும் குதிரைகள் கொள்ளைக் கண்டால் வெறுக்கும். புல்லைத் தின்பதை மறுக்கும். தண்ணீர் குடிக்காமலேயே நாற்பது காத தூரம் ஓடும். டப்பா நாலே அணாதான். இரண்டாக வாங்கினால் ஏழணா. மூன்றாக வாங்கினால் பத்தணா. மேல்கொண்டு வேண்டுபவர்களுக்குக் கிடைக்குமிடம் டப்பாவுக்குள்ளிருக்கும் நோட்டீஸில் இருக்கிறது!" என்று கூறி விட்டு, "யாருக்கு வேண்டும்!" என்று கேட்டேன்.

நான் கூவி முடித்ததைக் கண்டதும் அங்கிருந்த எல்லாரும் காதுக்குள் செருகிக் கொண்டிருந்த தங்கள் துட்டுக்களை எடுத்து இடுப்பில் பத்திரமாக வைத்துக் கொண்டார்கள்.

ஒரு நிமிஷம் பார்த்தேன். ஐந்து நிமிஷம் பார்த்தேன். யாரும் அசைந்து கொடுப்பதாகக் கூடக் காணோம். கெஞ்சிக் கேட்டேன். கொஞ்சிக் கேட்டேன். மசிய வில்லை. கடைசியில் வேறு ஒரு அஸ்திரத்தைப் பிரயோகப் படுத்திவிடுவது என்று நிர்மானித்து விட்டேன்.

"ஜட்கா வீரர்களே! நான் ஏதோ வெத்து வியாபாரி என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருப்பது உங்கள் துரதிர்ஷ்டம்தான். என்னுடைய சங்கத்தின் பலம் உங்களுக்குத் தெரியாதது என் துரதிர்ஷ்டம்தான். ஆகையால் என் சொந்தப் பிழைப்புக்கு ஆதரவு கொடுக்கும் வகையில் என் பல்பொடியை வாங்குகிறீர்களா! அல்லது கோழி வாக்கத்திலிருக்கும் எங்கள் சங்கத்தின் தலைமைக் காரியாலயத்தை எழும்பூர் ஸ்டேஷனுக்கே மாற்றி, ஆறு மாதங்களுக்குப் பிறகு நடக்கப் போகும் எங்கள் முதல் வருட மகாநாட்டை அடுத்த வாரமே கூட்டி......"

"சாமி! சாமி! அதை மாத்திரம் செய்து விடாதீங்க! ஆனால் பட்டணத்துக் குதிரைகளெல்லாம் 'பிரஷ்' இல்லாமல் பல்லைத் தேய்த்துக் கொள்ளச் சம்மதிக்காதுங்களே! அதான் யோசனை செய்யறோம்!" என்றான் முன்னிருந்த ஜட்கா வீரன் ஒருவன்.

"ஆ! குதிரைக்குப் பல் தேய்க்க 'பிரஷ்'ஷா! திருச்சி ஜட்கா வீரர்கள் அது மாதிரி கேட்காமலேயே என் பல்பொடியை வாங்கிக் கொண்டார்களே!" என்று ஒரு முறை தயங்கினேன்.

பிறகு, "வியாபாரமாகா விட்டால் போகிறது. வண்டிக் கூலியையாவது மிச்சம் பிடிக்கலாம்" என்ற எண்ணத்துடன், "இதோ! எங்கள் மெட்ராஸ் லோகல் ஏஜண்டிடம் விசாரித்து அரை மணியில் வாங்கி வருகிறேன்!" என்று நடையைக் கட்ட ஆரம்பித்தேன்.

ஆனால் ஜட்கா வீரர்களா ஏமாந்தவர்கள்! "நம்ப வண்டியிலே ஏறு சாமி! கால் மணியிலே திரும்பிடலாம்!" என்று மறித்தார்கள். என் கடைசி பாணத்தைப் போடுவதைத் தவிர வேறு வழியில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன்.

"நண்பர்களே! நான் உங்கள் வண்டியில் ஏறத் தடையில்லை! ஆனால் எங்கள் சங்க விதிகளின்படி நீங்கள் மட்டும் பிரயாணியான என்னிடம் அழைப்பு விட்டால் போதாது! உங்கள் ஜட்காவை இழுக்கும் குதிரைகளும் என் போன்ற பிரயாணிகளை இழுத்துச் செல்ல விருப்பம் தெரிவித்தால்தான் அந்த வண்டியில் ஏற முடியும். அதன்படி இப்பெருங் கூட்டத்தில் எந்தக் குதிரை கனைக்கிறதோ அந்த வண்டியில்தான்......"

திடீரென்று என் பின்னாலிருந்து ஒரு பெருங் கனைப்புச் சத்தம் எழுந்தது. அதைத் தொடர்ந்து, "பலே ராஜா! வா சாமி! ஏறு என் வண்டியில்!" என்று ஒரு குரல் என்னை அழைத்தது. வண்டி ஓட ஆரம்பித்த போது தூரத்திலிருந்து ஒரு குரல் கூவியது: "சாமி! கனைத்தது குதிரையில்லே, உங்க வண்டியை ஓட்டும் ஜட்கா வீரன்தான்!" "ஆ!" என்று அலறிப் போய்ச் சாய்ந்தேன்!

## உண்டுகளித்த உண்மையை
## உவந்து சொல்கிறான் அந்தரங்கமாய்



"ஜே. பி. மங்காராமின் **ராயல் க்ரீம்** பிஸ்கட்டுகளை வாங்கித் தரச் சொல்லி அப்பாவைக் கேள். இந்த பிஸ்கட்டுகளில் இருக்கும் சேர்த்தியான க்ரீமின் வாசனையை நீ விரும்புவாய்!"



**தரத்தில் உயர்ந்தது**
**விடமின் சத்து நிறைந்தது**

J. B.
MANGHARAM'S
ROYAL
CREAM
BISCUITS

அழகிய வர்ண வேலைப்பாடுகளமைந்த காற்றுப்புகாத பாக்கெட்டுகளில் உள்ள மங்காராமின் **ராயல் க்ரீம்** பிஸ்கட்டுகள் பரிசுக்கு உகந்ததாக விளங்குகின்றன !

**ஜே. பி. மங்காராம் & கோ** **குவாலியர்**

சென்னை ஆபீஸ்: 35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை - 1



இந்த நவீன சிகிச்சை

# ஜலதோஷத்தை 2 விதங்களில் எதிர்த்துப் போராடுகிறது.

இப்பொழுது நீங்கள் ஜலதோஷத்தை முன்னெக்காட்டிலும் அதிக சீக்கிரத்தில் நிறுத்தலாம் படுக்கப் போகும் சமயத்தில் விக்ஸ் வேபோரப்பை உங்கள் குழந்தையின் மார்பின் மேலும், தொண்டையின் மேலும், முதுகின் மேலும், தடவித் தேயுங்கள் இந்த நவீன ஔஷதம் பல தேசங்களில் பிரக்யாதி பெற்றுள்ளது. ஏனெனில் அது ஜலதோஷத்தை இரண்டு விதங்களில் எதிர்த்துப் போராடுகிறது.



**1. அதன் குணப்படுத்தும் உஷ்ண மார்பிலுள்ள வலியை அகற்றுகிறது.**

விக்ஸ் வேபோரப்பின் சக்திவாய்ந்த மருந்துச் சத்து சருமத்தின் வழியாக உட்சென்று மார்பிலுள்ள சளியை வெளியேற்றுகிறது. மேலும், அதே சமயத்தில்...



**2. அதன் நல்ல வாசனை சுவாசக் குழாய்களைச் சுத்தம் செய்கிறது.**

நல்ல வாசனையுள்ள விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்துக்கு மிகவும் சக்தி வாய்ந்த மருந்தாகும். உங்கள் குழந்தை இந்த வாசனையை இரவு முழுவதும் சுவாசிக்கிறது. அடைசலாயிருந்த அவனுடைய மூக்கு சுத்தமாகிறது. தொண்டைப்புண்ணுக்கு ஆறுதலளிக்கப்படுகிறது. இருமல் நிறுத்தப்படுகிறது. அநேகமாக மறுநாள் காலையில் ஜலதோஷத்தின் கொடுமை மறைந்து விடுகிறது.

தடவித் தேயுங்கள்...

**விக்ஸ் வேபோரப்**




"விக்ஸ்" மற்றும் "வேபோரப்" டிரேட் மார்க்குகள்.

319

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்

•

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் நீரிழிவு (DIABETES) என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ளவரையில் சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள், சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்திலின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறு நீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறுநீரும் குறைகிறது. 3வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்கு மேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் இடையாது; இன்ஜக்ஷன் இடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

•

**50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0**

(பாக்கிங், தபால் செலவு இனாம்)

•

**Venus Research Laboratory (K.M.)**

**POST BOX No. 587, CALCUTTA**




## 2. திருக்குற்றாலம்

ஆற்று வளமும் அருமையான காற்று வளமும் உடையது திருக்குற்றாலம். மஞ்சு தவழும் சோலை சூழ்ந்த குற்றால மலையில் மழை பொழியும்; அருவி சொரியும். அருவி வெள்ளம் ஆறாகப் பாய்ந்து ஓடும். திருக்குற்றாலத்தில்,

> " ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
> ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்

என்று பாடினார் குறவஞ்சிக் கவிஞர். சிற்றாறு என்னும் சித்திரா நதியில் பெருகி வரும் வெள்ளமும், குற்றாலத்தில் நற்றவம் புரியும் சான்றோர் உள்ளமும் இக்கவிதையால் அழகுற விளங்குகின்றன.

திருக்குற்றாலத்தில் அருவிகள் பல உண்டு. வட அருவி என்பது சிறந்ததோர் அருவி. பொங்குமா கடல் என்னும் ஆழச் சுனையில் மூழ்கி எழுந்து பாய்ந்து விழும் அவ்வருவியைக் காண்பது ஓர் ஆனந்தம். இன்னும், ஐந்து கவராகப் பிரிந்து விழும் அருவியும் அம்மலையிலே உண்டு. ஐந்தலை அருவி என்பது அதன் பெயர். "தேனருவித் திரை எழும்பி வானின் வழி ஒழுகும்" என்று புகழப் பெற்ற தேனருவியும், சிற்றருவி

என்று சொல்லப்படும் 'கானருவி' * யும் குற்றாலத்தில் உண்டு. இவ் அருவித்துறையினில் நீராடி இன்புற்றோர் எண்ணிறந்தவர்.

மேலை நாட்டு மேதையரும் போற்றிப் புகழும் பெருமை வாய்ந்தது திருக்குற்றால அருவி. அயர்லாந்து தேசத்திலே பிறந்த அறிஞர் ஒருவர் சமயத் தொண்டு செய்வதற்காகத் தமிழ் வழங்கும் தென்னாட்டிற்கு வந்து சேர்ந்தார். அரை நூற்றாண்டு அந்நாட்டில் வாழ்ந்து "என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டார்." தமிழின் தொன்மையையும் செம்மையையும் உலகறியக் காட்டிய பெருமை அவருக்கே உரியதாகும். அரும்பணியில் ஈடுபட்ட அப் பெரியார் கடுமையான வேனிற் காலத்தில் குற்றாலம் போந்து அருவியாடி இன்புற்று வந்தார். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் ஆசையால் அவ் அருவியின் பெருமையை எழுதி வைத்துள்ளார். "இக்கானிலத்தில் உள்ள நன்னீர் அருவிகளுள் தலை சிறந்தது குற்றால அருவி" என்னும் பொருள்பட அவர் வழங்கிய புகழுரையைத் 'திருநெல்வேலி வரலாறு' என்ற ஆங்கில நூலிலே காணலாம்.†

மலையடிவாரத்தில் அமைந்த திருக்குற்றாலத்தில் கோங்கும் வேங்கையும், சந்தனமும் சண்பகமும் செழித்தோங்கி வளரும். வளமுற வளர்ந்த இம்மரங்களில் முல்லைக் கொடிகள் பின்னிப் பூத்துக் கமழும்.

"செல்வம் மல்கு செண்பகம்
வேங்கை சென்றேறிக்
கொல்லை முல்லை மெல்லரும்பு
ஈனும் குற்றாலம்"

என்று தேவாரம் பாடிற்று. வேங்கை மரத்தின் பொன் போன்ற மலர்களைப் பறித்துக் குறும்பலா மரத்தடியில் அமர்ந்த இறைவன் திருவடியிலே தூவி வணங்குவர் சிவனடியார். நாள்தோறும் இக்காட்சியைக் கண்ட மலை யானைகளின் உள்ளத்திலும் ஆர்வம் பெருகிற்று; தாமும் குறும்பலா ஈசனைக் கும்பிட வேண்டும் என்னும் ஆசையால் பூப் பறிக்கப் புறப்பட்டன. வேங்கை மரத்தில் கொத்துக் கொத்தாகப் பூத்திருந்த மலர்களைத் துதிக்கையால் வளைத்துப் பறித்து, மத்தகத்தில் ஏந்திக் கொண்டு, குறும்பலாவிற் போந்து தலை வணங்கித் தொழுதன. அந்நிலையில் மத்தகத்தில் இருந்த மலர்கள் ஈசன் சேவடியிற் சேர்ந்தன. இவ்வாறு யானைகளும் மலர் தூவி வழிபட்ட காட்சியைக் கண்டு இன்புற்ற திருஞான சம்பந்தர்,

"பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து
மத்தகத்திற் பொலிய ஏந்திக்
கூந்தற் பிடியும் களிறும்
உடன் வணங்கும் குறும்பலாவே"

என்று பாடியருளினார்.

* 'Forest Falls' என்னும் ஆங்கிலப் பெயர் உடையது இவ்வருவி.

† History of Tinnevelly by Caldwell p. 8.

குற்றால மலையில் பலவகையான பழங்கள் உண்டு. "குலை வாழைத் தீங்கனியும் மாங்கனியும் தேன் பிலிற்றும்" என்று தேவாரத்திலே பாடப்பட்ட செழுஞ் சோலைகள் இன்றும் குற்றாலத்தில் காட்சி தருகின்றன. அம் மலையின் ஆதி வாசிகளாகிய வானரங்கள் அப் பழங்களை வயிறாரத் தின்று வாட்டமின்றி வாழும்.

குற்றாலத்துக் குரங்குகள் தமிழ்ப் பாட்டில் அமையும் பேறு பெற்றுள்ளன. பூஞ்சோலையின் கிளைகளில் இருந்தும் கடந்தும், ஆடியும் ஓடியும் விளையாடுகின்ற குரங்குகளை நோக்கி, "குற்றாலத்துக் குரங்கே! கொப்பை விட்டு இறங்கே!" என்று பரிந்து பாடுவர் இளம் பிள்ளைகள். பிள்ளைக் கவிஞராகிய திருஞான சம்பந்தரும் இக் குரங்குகளின் மூதாதைகளைக் குற்றாலத்திலே கண்டார்.

"மலையார் சாரல் மகவுடன்
வந்த மடமந்தி
குலையார் வாழைத் தீங்கனி
மாந்தும் குற்றாலம்"

என்ற பாட்டு ஒரு செஞ்சொற் சித்திரம். குற்றாலத்துக் குரங்கு ஒன்று குட்டியோடு மலையினின்று இறங்கிற்று; ஒரு வாழைத் தோட்டத்தின் உள்ளே புகுந்தது; செம்மையாகப் பழுத்திருந்த வாழைக் குலையின் மீது அமர்ந்தது: பழங்களை ஒவ்வொன்றாகப் பறித்தது: உரித்தது; தின்றது. வயிறு கொள்ளு மட்டும் தின்றது. இப்படி மந்திகள் மாந்தியன போக எஞ்சிய கனிகளையே மாந்தர் உண்டனர் போலும்!

சிற்றாற்றின் கரையிலே சித்திர சபை என்னும் சிறந்த மன்றம் ஒன்று உள்ளது. ஈசன் திரு நடம் புரியும் பஞ்ச சபைகளில் அதுவும் ஒன்று. 'கூற்றுவன் வரும் பொழுது உற்றாரும் உறவினரும் உறுதுணை யாகார். குற்றாலத் துறையும் கூத்தனே உற்ற துணை' என்று அறிவுறுத்தினர் ஆன்றோர்.

"உற்றார் யாருளரோ
உயிர் கொண்டு போம்பொழுது
குற்றாலத் துறை கூத்தன்
அல்லால் நமக்கு–உற்றார் யாருளரோ"

என்று திருநாவுக்கரசரால் பாடப் பெற்ற கூத்தன் கோவில் இன்றும் குற்றாலத்தில் காட்சி தருகின்றது.

இயற்கை வளம் மலிந்த குற்றாலத்தில் வீசும் இளங் காற்றிலே உள்ள இன்பசுகம் வேறெங்கும் காண்டல் அரிது. மந்த மாருதம் என்னும் அம் மெல்லிய பூங்காற்று நலிவுற்ற உடலுக்கு நன்மருந்து; இயற்கை அன்னை அளிக்கும் இணையற்ற விருந்து.

திருக் குற்றாலத்தின் சிறப்பைக் கற்றாரும் மற்றாரும் அறியக் காட்டுவது குறவஞ்சி நாடகம். சிங்கன் என்ற குறவன் வேட்டையாடப் புறப்படுகிறான்; பாங்கான ஓர் இடத்தில் வலையை விரித்துப் பக்கத்தில் உள்ள புதரில் பதுங்கியிருக்கிறான். எண்ணியபடியே பறவைகள் வலையில் அகப்படுகின்றன.

"தேசத்துக் கொக் கெல்லாம்
கண்ணிக்குள்ளே வந்து
சிக்குது பார், கறிக்குது பார்"

என்று கூத்தாடுகிறான். பிடித்த பறவைகளை எடுத்துக் கொண்டு காதல் மனையாளாகிய சிங்கியைக் காணச் செல்கிறான்.

வீட்டிலே சிங்கியைக் காணவில்லை. சிங்கனது முறுக்கு மீசை துடிக்கிறது. "என்னிடம் சொல்லாமல் எங்கே போனாள் இவள்? எப்படிப் போனாள்?" என்று வெறும் வீட்டைப் பார்த்து விழிக்கிறான்!

சிலநாள் கழித்துச் சிங்கி வந்து சேர்ந்தாள். பட்டு உடுத்து, பணி பூண்டு, சீவி முடித்துச் சிங்காரமாக வந்த சிங்கியைக் கண்டான் சிங்கன். சினமெல்லாம் எங்கேயோ பறந்து விட்டது.

"இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்
எங்கே நடந்தாய் நீ, சிங்கி"

என்று மெத்த அன்போடு கேட்டான்.

"கொத்தார் குழலார்க்கு வித்தாரமாக
குறி சொல்லப் போனேன் அடா
—சிங்கா"

என்ற கனிவான மறுமொழி கிடைத்தது.

அவள் சுற்றிக் கட்டியிருந்த பட்டுச் சேலையைப் பார்த்து வியப்புற்ற சிங்கன்,

"இல்லாத சுற்றெல்லாம் எங்கே படித்தாய்
நீ, சிங்கி"

என்று மெல்ல நெருங்கினான்.

"நல்லாரைக் காண்பவர்க்கு
எல்லாம் வரும் அடா, சிங்கா"

என்று அறிவுரை பகர்ந்து பேச்சை முடித்தாள் ஆசைக் குறத்தி!



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா.வீ

சித்திரம்.

## 36. வைர மோதிரம்

கோகிலா நிலைக்குத்தவிட்டு நின்றாள். கணவனைப் பிரிந்து கதியிழந்து வாழவேண்டி வரும் என்று அவள் கனவில்கூட நினைக்கவில்லை. அதுவும் அவள் எதிர்பார்க்காத அந்தப் பிரிவு அன்றே ஆரம்பமாக வேண்டுமா? அன்றே ஆரம்பமாகி விட்டது என்று யார் சொன்னார்கள்? அதை ஒருவர் சொல்ல வேறு வேண்டுமா? அவள் கணவன் ஜகதீஷ் அன்று அவளுடன் எங்கே இருந்தான்? ஜகதீஷை அன்றுவரை அவள் தன்னைப் பிரிந்து தனித்திருக்க விட்ட தில்லை. உத்தியோகம் பார்த்து வந்த காலத்தில் ஜகதீஷ் சுற்றுப் பிரயாணத்துக்குப் புறப்பட்டால், அவளும் அவன் கூடவே புறப்பட்டு விடுவாள். அவன் பிரயாணிகளின் விடுதிகளில் தங்கினாலும் சரி, கிராமத்துச் சாவடிகளில் தங்கினாலும் சரி, அவளும் அவன் கூடவே தங்குவாள்.

உத்தியோகத்தைத் துறந்து நகரத்தில் புறாக்கூண்டை யொத்த அறை யொன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அவன் வசித்து வந்த பொழுதும் அவள் அவனை விட்டுப் பிரிந்திருக்க வில்லை. ராமன் இருக்குமிடம் அயோத்தி என்று எண்ணிய சீதையைப் போலவே, அவளும் வாழ்க்கை நடத்தினாள். இனிமையும் ஹாஸ்யமும் கலந்த தன் இனிய சுபாவத்தினால் சிரிக்கச் சிரிக்கப் பேசி ஜகதீஷை எப்பொழுதும் சந்தோஷமாகவே வைக்க முயன்றாள். அவன் முகத்தில் துயரக் கோடுகளையோ, கவலையின் சாயலையோ அவள் எந்நாளும் காணச் சகித்ததில்லை.

கணவனும் மனைவியும் இப்படி அன்னியோன்னியமாக வாழ்வது ஜகதீஷின் சிநேகிதர்களுக்குப் பிடிக்க வில்லை என்று சொல்லி விடுவதற்கில்லை. இருந்தாலும் கேலி செய்வதற்கு வகையான சந்தர்ப்பம் கிடைத்தால் சிநேகிதர்கள் இலேசில் விட்டு விடுவார்களா? அதனால் ஜகதீஷ் தன் நண்பர்களின் குழாத்தில் அடிக்கடி பரிகாசத்துக்குப் பாத்திரமானான்.

இப்படிப் பிரியாமல் இருந்த ஜகதீஷை அவள் எங்கே என்று தேடுவது? எப்படித் தேடுவது?-இதை நினைத்த கோகிலா மன மொடிந்து போனாள். கணவன் இருக்கும் பொழுது அவன் எதிரே தன் கண்களில் நீர் சோர விடக்கூடாது என்ற உறுதியுடன் வாழ்க்கை நடத்தியவள் அவள். இன்று அவளுக்கு மனம் தாள வில்லை. இருதயம் குமைந்தது. வேதனை கசக்கிப் பிழிந்தது.

அதனால் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகளை அப்படியே விட்டு விட்டு மொட்டை மாடிக்குச் சென்றாள். தனிமையில் சென்றதும் உள்ளம் திறந்து விசித்து விசித்து அழலானாள். கண்களில் நீர் ஆறாகப் பெருகிற்று. இருதயம் வெடித்து அதன் காரணமாக விழிகளின்வழியே நீர் ஆறாகப் பாய்கிறதோ என்று எண்ணத் தோன்றியது. தன் கண்களிலிருந்து வெளிவரும் தூய நீரைப் பிறர் பார்த்துவிடக் கூடாதே என்பதற்காகவோ என்னமோ, அவள் தன் புடவைத் தலைப்பினால் கண்களை மூடிக் கொண்டாள். பிறகு தன் நினைவு ஒழிந்து செயலற்று அவள் மொட்டை மாடிச் சுவரில் சாய்ந்து விட்டாள். எத்தனை நேரம் அப்படி நின்றாளோ, யார் கண்டார்கள்?

சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுக்குத் தன் அருகில் யாரோ வந்து நிற்பது போலத் தோன்றியது. ஒரு வேளை ஜகதீஷ்தான் வந்திருப்பானோ? இந்த நினைவு எழுந்ததுதான் தாமதம்; தன் கண்களை மறைத்திருந்த புடவைத் தலைப்பை அகற்றினாள். நிஜமாகவே அவளுக்கு வெகு அருகில் ஒருவன் நின்று கொண்டிருந்தான். ஜகதீஷாக இருந்தால் இத்தனை நேரம் அவள் கையைத் தன் கைகளில் ஏந்தி அழுகைக்குக் காரணம் கேட்காமல் சும்மா நின்றுகொண்டிருப்பானா?

கோகிலா தலை நிமிர்ந்து பார்த்தாள். சூழ்ந்து நின்ற முன் இருட்டில் அவள் யாரைப் பார்த்தாள்? ஜகதீஷையா?

இல்லை!

என்ன? இல்லையா? அவள் எதிரே நின்று கொண்டிருந்தது ஜகதீஷ் இல்லையா? அப்படியானால் வேறு யார்?

இந்த உலகத்தில் மனிதன் நினைப்பதுபோல் எல்லாம் நடந்து விட்டால்தான் நன்றாயிருக்குமே! இது வரை விதியின் கை அதற்கு எங்கேயாவது இடம் கொடுத்திருக்கிறதா?

அந்தக் கரிய இருளில் லால்ஜி சேட்டின் மங்கிய முகம் தெளிவற்ற நிலைமையில் தெரிக்

தது. அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பது யாரும் மறுக்க முடியாத உண்மை. சந்தேகத்துக்கு ஆஸ்பதமான மனிதனின் முகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே இவன் குற்றம் புரிந்தவன், இவன் குற்றம் புரியத் தயாராகிறான் என்பது கூட முக பாவத்தை உணரும் சக்தி பெற்றவர்களுக்குத் தெரிந்து விடுகிறது. அத்தகையவனின் முகத்தில் விசித்திரமானதொரு பலவீனம் பளிச்சிட்டு இழை யோடுகிறது. ஒருவனது முகத்தைப் பார்த்து இவன் உள்ளத்தில் ஒன்றும் விகற்பம் இல்லாதவன், இவன் சுத்தக் கபடன், இவன் தூய நடத்தை கொண்டவன், இவன் தீய நடத்தையில் நோக்கம் கொண்டவன் என்பதை இந்த உலகில் எத்தனையோ பேர் சரியாக ஊகித்து உணரும் திறன் பெற்றுத் தான் இருக்கிறார்கள்!

லால்ஜி ஸேட் அரசாங்க சபைத் தேர்தலில் நிற்பதன் மூலம் தாம் பெற்ற அநுபவத்தைக் கொண்டு மட்டு - மரியாதையுடன் நாகரிகமாகப் பேசிப் பழகக் கற்றுக் கொண்டிருந்தார். "கோகிலா! இவ்விஷயத்தைக் கேட்டதும் எனக்குச் சொல்ல முடியாத துயரம் உண்டாயிற்று!" என்று அநுதாபம் தோய்ந்த குரலில் அவர் கோகிலாவைப் பார்த்துக் கூறினார்.

துயரப்படும் உரிமை தன்னைத் தவிர வேறு யாருக்குமே கிடையாது என்று உரிமை கொண்டாடுபவளைப் போல் முகத்தை வைத்துக்கொண்டு, "எதற்காகத் தாங்கள் துயரப் பட வேண்டும்?" என்று லால்ஜி ஸேட்டைக் கேட்டாள் கோகிலா. அவளுடைய அழுகை சட்டென்று நின்று விட்டது.

லால்ஜி ஸேட் தமது தினசரி வழக்கப்படி அன்றும் ஜன்னல் வழியாக முகத்தை நீட்டி மொட்டை மாடியைப் பார்த்துக் கொண்டிருந்தார். கோகிலா கண்ணீர் பெருக்கி அழுதவாறு நிற்பது அவருக்கு அங்கிருந்து நன்றாகத் தெரிந்தது.

வாழ்க்கையில் எத்தனையோ சம்பவங்கள் ஒரே ஒரு முறைதான் நிகழ்கின்றன. சந்தர்ப்பத்தைச் சரியான முறையில் பயன் படுத்திக் கொள்ளும் சமயோசித புத்தியுள்ளவன் தவற மாட்டான். அந்தப் புத்தி கொஞ்சம் கட்டையாக இருப்பவன் கிடைத்த தருணத்தைக் கை நழுவ விட்டு விட்டுப் பின்னால் வருந்துவான். இம்மாதிரி சம்பவங்கள் கண் இமைக்கும் நேரத்தில் கை சொடுக்குவது போல் வரும்; போய் விடும். கண்குத்திப் பாம்பாக இருப்பவன் கன லாகவமாகப் பற்றிக் கொண்டு பயனடைவான். இல்லாதவன் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்று மனம் வருந்துவான்.

லால்ஜி ஸேட் இம்மாதிரி கைக்கு எட்டும் சந்தர்ப்பத்தைக் கை நழுவ விடும் முட்டாள்களின் கோஷ்டியைச் சேர்ந்தவர் அல்ல; கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வதில் அவருக்கு இணை அவர்தான்.

லால்ஜி ஸேட் மெதுவாகக் கீழே இறங்கி வந்தார். கோகிலாவுடன் எப்படிப் பேச்சைத் தொடங்குவது என்ற குழப்பத்தில் சிறிது நேரம் மௌனமாக நின்றார். அன்றைக்கு நிகழ்ந்த நிகழ்ச்சிதான், தானாகவே, அவருக்கு அந்தச் சூழ்நிலையை ஏற்படுத்தி வைத்திருந்ததே! அப்புறம் அவருக்கு என்ன யோசனை இருக்க முடியும்?

கோகிலாவை முதன் முதலாகப் பார்த்தது முதற் கொண்டு இம்மாதிரி சந்தர்ப்பம் கிட்டுமா என்று அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். கோகிலாவுடன் பேச வேண்டும், பேச வேண்டும் என்று அவர் உள்ளம் எப்படித் துடித்துக் கொண்டிருந்தது என்பது அவருக்கல்லவா தெரியும்? எத்தனை நாட்களாக அவர் இந்தத் தருணத்தை எதிர்பார்த்துத் தவம் கிடந்தார்? இந்த உலகத்தில் யார் யாருக்காகத் துடிக்கிறார்கள், தவங் கிடக்கிறார்கள் என்பதைக் கண்டு பிடித்துக் குறிப்பு எடுக்க முடியுமானால்......? இதைப் பற்றிய பேச்சு இப்பொழுது எதற்கு?

"உனக்கு ஒரு கஷ்டம் வருவது, எங்களுக்குத் துளிக்கூட அநுதாபம் ஏற்படாமல் இருப்பது என்பது எங்கேயாவது நடக்கக் கூடிய காரியமா? ஒருவர் படும் துயரத்தைத் தன்னுடையதாகப் பாவிப்பது தானே...நான் என் தொழில் சம்பந்தமான அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது இந்தத் துயரம் தரும் செய்தி என் காதில் விழுந்தது. உடனே வேலையை



அப்படி யப்படியே போட்டுவிட்டு இங்கே ஓடி வந்தேன். சோதனைக்கு வந்த போலீஸ் திரும்பியபின் தான் என் மனத்துக்கு நிம்மதி ஏற்பட்டது !" என்றார் லால்ஜி ஸேட்.

"தங்களைப் போன்ற அயலார்களுக்கு அநுதாபம் ஏற்படாமல் இருக்குமா? அநுதாபம் ஏற்படாமல் இருந்தால்தானே ஒருவர் ஆச்சரியப்பட வேண்டும்?—என்ன செய்வது?" என்றாள் கோகிலா.

"முதலில் இந்தச் செய்தி காதில் விழுந்ததும் அவனை அனுப்பி வைக்கலாம் என்று தான் பார்த்தேன். அவன் எங்கேயோ உலாவப் போய் விட்டான். நான் மேலேயிருந்து நீ அழுது கொண்டு நிற்பதைக் கண்டேன். என் மனம் கேட்கவில்லை. அதனால் நானே நேரில் வந்தேன் !" என்றார் லால்ஜி ஸேட். பாரதப் பண்பில் ஊறிய மக்களுக்கு இதன் பொருளை எடுத்துக் கூற வேண்டிய அவசியம் இல்லை.

"ஆண்டவன் சித்தப்படித்தானே எதுவும் நடக்கும். அதற்கு நாம் என்ன செய்ய முடியும்?" என்று சொன்ன கோகிலா மேலும் அங்கே நிற்க விருப்பமில்லாமல் புறப்படுவதற்காக அடி எடுத்து வைத்தாள்.

அதைக் கண்ணுற்ற லால்ஜி ஸேட்டுக்குக் கிடைத்தற்கரிய அருமையான சந்தர்ப்பம் கை நழுவிப் போவதாகத் தோன்றியது. "கோகிலா! இனி உனக்கு அதிகமாகப் பணம் தேவைப்படலாம். போன மாதத்து வீட்டு வாடகை கூட இன்னும் கொடுக்கவில்லை. இல்லையா? அதனால் ஒன்றும் பரவாயில்லை. அதை எண்ணி எண்ணி வீணில் மனக் கஷ்டப் படாதே !" என்றார்.

அந்தச் சொற்களைக் கேட்ட கோகிலாவுக்கு உண்மையாகவே லால்ஜி ஸேட் தன்மீது அநுதாபம் காட்டுகிறாரோ என்று தோன்றியது. எனவே, நன்றி தெரிவிக்கும் நோக்கத்துடன், "ஏழைகளான எங்கள் மீது இத்தகைய கருணை காட்டுவதற்கு என் நன்றி. தங்களுடைய இந்த அருங்குணம் மிகவும் போற்றுவதற்கு உரியது!" என்றாள்.

படபடப்பு ஒரு காரியத்தைப் பாழ் படுத்தி விடும். பொறுமை அந்தக் காரியத்தைப்பொன்னுக்கி இனிய பலனைக் கொடுக்கும். பொறுமையைக் கையாண்ட லால்ஜி ஸேட்டுக்குச் சற்றுத் தைரியம் பிறந்தது.

ஒரு அடி முன் எடுத்து வைத்து மகிழ்ச்சி பொங்கும் குரலில், "நன்றாயிருக்கிறதே, நீ சொல்வது? உன்னைப் போன்றவர்களைக் கவனித்துக் கொள்ளாமல் இருப்பதற்காகவா நாங்கள் இருக்கிறோம்? கஷ்டம் ஏற்படுவது யாருக்கும் சகஜம்தானே?" என்றார். இரண்டு வார்த்தைகளை இனிமையாகவும் மென்மையாகவும் பேசினால் கருணையென்னும் அருங்குணம் இன்னும் உறுதிப் படுகிறதல்லவா? அதனால் மனத்தில் இன்னும் தாராளத்தை வரவழைத்துக் கொண்டு, "உனக்கு ஏதாவது வேண்டியிருந்தால், அல்லது பணம் காக தேவைப்பட்டால் தைரியமாகக் கேள். சிறிதும் சங்கோசப் படாதே! இம்மாதிரி சந்தர்ப்பத்தில் உபயோகப் படாத பணம் இருந்து என்ன?" என்றார்.

"அதற்கென்ன? பேஷாகக் கேட்டு வாங்கிக் கொள்கிறேன்!" என்றாள் கோகிலா. ஆனால் அவளுக்கு அவருடைய அந்தப் பேச்சும் பரிவும் சிறிது கூடப் பிடிக்கவில்லை. அங்கே நிற்க மனம் இல்லாமல் மறுபடியும் புறப்பட்டாள். லால்ஜி ஸேட் கிடைத்த தருணத்தைக் கை நழுவ விட விரும்பவில்லை. சட்டென்று முன்னேறிச் சென்று கோகிலாவின் கையில் இரண்டு



# கண்ணாடியில் உங்கள் உருவம்

உங்கள் சருமமும் மேனியும் ரக்ஷித்து போஷிக்கப் படவேண்டியது அவசியம். இதற்கு 'ஹாஸலீன்' 'Hazeline' வகை அழகு சாதனங்களே சிறந்தவை என்று புத்திசாலியான பெண்கள் அறிவார்கள். இவை சருமத்தை சுத்தம் செய்வதுமின்றி மேனியழகையும் நாளுக்கு நாள் தூய்மைப் படுத்துகின்றன.

☆ உங்கள் யௌவன மேனியழகிற்கு "'ஹாஸலீன்' ஸ்னோ" டிரேட் மார்க் "'Hazeline' Snow" Trade Mark உபயோகியுங்கள். இது சருமத்தில் இயல்பாகப்பொருந்தி, சருமத்திற்கு மழமழப்பு, வெண்மை, பிரகாசமான தேஜஸ் இவைகளைத் தருகின்றது.

☆ 'ஹாஸலீன்' பிராண்ட் க்ரீம் 'Hazeline' Brand Cream உபயோகித்து உங்கள் சருமத்தை மழமழப்பாயும் மிருதுவாயும் லளிதமாயும் விளங்கச் செய்யுங்கள். இது பலவகைகளில் சருமத்திற்கு ரக்ஷிப்பு அளிக்கிறது.






பர்ரோஸ் வெல்கம் அண்ட் கம்பெனி (இந்தியா) லிட். பம்பாய்

கோட்டுக்களைத் திணித்து, "இன்று முதலே உனக்குப் பணம் தேவையாகத்தான் இருக்கும். அதனால் சங்கோசப் படாதே. இந்தா, இதை வைத்துக் கொள். இன்னும் தேவைப் பட்டால் கேள். தருகிறேன்!" என்றார்.

"தேவைப் பட்டால் கேட்டு வாங்கிக் கொள்கிறேன் என்று தான் நான் உங்களிடம் ஒரு தடவை சொன்னேனே, அப்புறம் எதற்காக என்னைச் சிரமப் படுத்துகிறீர்கள்? எனக்கு ஒன்றும் வேண்டாம்!" என்று சொன்னவள் இரு கோட்டுக்களையும் இரண்டாகக் கிழித்து மொட்டை மாடியின் ஒரு மூலையில் வீசி யெறிந்தாள்.

"அடேடே! இரண்டும் இரு நூறு ரூபாய் நோட்டு அல்லவா?" என்றார் லால்ஜிஸேட். அவருக்கு அப்படிப் பணத்தை அலட்சியப் படுத்தியது கொஞ்சமும் பிடிக்க வில்லை. பெண்ணை வெற்றி கொள்ளும் அந்தத் துணிவான செயலுக்கு இருநூறு ரூபாய் ஆரம்பச் செலவா? அவருக்கு அது மிகப் பெருந் தொகையாகப் பட்டது. அதோடு விரும்பிய காரியமும் கைகூட வில்லை யென்றால்......?

"இங்கே ஒருவரும் இருநூறு ரூபாயைப் பார்த்ததே யில்லையே! என்னவோ பெரிதாக......" என்று முணு முணுத்துக் கொண்டே கோகிலா நகர்ந்தாள். லால்ஜி ஸேட் அவள் முன்னால் போய் நின்று இரு கைகளையும் நீட்டி அவள் வீட்டுக்குப் போகும் வழியைத் தடுத்துக் கொண்டார். பிறகு, "இருநூறு ரூபாய் ஒரு பிரமாதமா? நான் அப்படி எங்கே சொன்னேன்? உனக்கு எத்தனை வேண்டும், சொல்லு! இதோ பார்! இந்த வைர மோதிரம் இன்று தான் செய்து வந்திருக்கிறது. கல்லின் விலையே அறுநூறு ரூபாய். நான் இன்னும் இதை அணிந்து கொள்ளக் கூட வில்லை!" என்றார்.

கோகிலா ஒரு முறை தலை நிமிர்த்தி லால்ஜி ஸேட்டைப் பார்த்தாள். அவள் உள்ளம் பற்றி யெரிந்து கொண்டிருந்தது. "ஸேட் ஸாஹப்! எங்கள் குடும்பத்துக்கு நீங்கள் ரொம்ப ரொம்ப வேண்டியவர்கள் என்பதை நீங்கள் சொல்லாமலே நான் ஒப்புக் கொள்கிறேன். எங்களுக்காக உங்களுக்கு ஏன் இந்த வீண் சிரமம்? வேண்டாம், சொல்வதைக் கேளுங்கள்!" என்று குரலில் நயத்தையும் சொல்லில் குத்தலையும் வருவித்துக் கொண்டு சொன்னாள் கோகிலா.

அதைக் கேட்ட லால்ஜி ஸேட் 'கடகட' வென்று செயற்கையாக ஒரு சிரிப்புச் சிரித்தார். இயற்கைக்கு மாறாக ஒலித்த அவருடைய அந்தச் சிரிப்பொலியில் மிருக குணம் நிறைந்த காம வெறி மேலிட்டு ஒலிப்பது தெளிவாகத் தெரிந்தது.

"உன்னைப் போன்ற கெட்டிக்காரியைப் பற்றி என்ன சொல்வது? வார்த்தைகளை வெகு நாசுக்காக உபயோகிக்கிறாய். உன் மனமும் என் மனமும் இப்படி ஒன்றி யிருக்கும் பொழுது......" என்று ஆரம்பித்தார் லால்ஜிஸேட். அவரது குரல் ஆழமான கிணற்றில் மூழ்கிக் கொண்டே பேசுபவனைப் போலத் தோன்றியது. சொல்ல வந்த வாக்கியத்தை முடிக்காமலே அவர் தம்முடைய இரு கைகளையும் குவித்துக் கோகிலாவுக்கெதிரே நீட்டினார்.

"என்ன? நீங்கள் எனக்கு அந்த மோதிரத்தைத் தரப் போகிறீர்களா?" என்று கேட்டாள் கோகிலா.

"ஆமாம், ஆமாம். அதற்காகத்தான்......" என்று இழுத்தார் ஸேட். வாழ்க்கையின் வெகு வெற்றிகரமான கணம் தம்மை நெருங்கி விட்டதாகவே அவருக்குத் தோன்றியது. உடனே தம் கையிலிருந்த மோதிரத்தைக் கோகிலாவின் கையில் கொடுத்து விட்டு அவளருகில் இன்னும் நெருங்கி நின்றார். மோதிரத்தைக் கையில் வாங்கிக் கொண்ட கோகிலா தூரத்தில் இருந்த ஒரு கூரையின் மீது வீசி யெறிந்தாள். இருளின் மங்கிய ஒளியில் வைரம் பிரகாசித்துக் கொண்டே பறந்து ஒரு சிறு சத்தத்துடன் மறைந்தது.

"நீங்கள் எனக்கு மோதிரம் பரிசளித்தீர்கள். நானும் உங்கள் மனம் கோணாமல் பெற்றுக் கொண்டேன். இப்பொழுது உங்களுக்குப் பூரண திருப்திதானே? அப்புறம் எதற்காக எதிரே நிற்கிறீர்கள்? போய் வாருங்கள். இனி மேல் அழையா வீட்டு விருந்தாளியாக என் எதிரே வராதீர்கள். என்ன புரிந்ததா?" என்றாள் கோகிலா.

காதல் விவகாரம் இத்தனை கிராக்கி யானதா? தம்பிடிக்குக் கூடக் கணக்குப் பார்க்கும் லால்ஜி ஸேட்டுக்குக் கப்பல் கவிழ்ந்த வியாபாரியைப் போன்ற நிலைமை ஏற்பட்டது. வயிற்றை என்னவோ செய்தது. பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டல்லவா? அவருக்குக் கோபம் கொப்புளித்துக் கொண்டு வந்தது. பணத்தினால் ஆகாத காரியம் இந்த உலகத்தில் ஒன்று இருப்பதாக அவர் எண்ணியதே யில்லை. விஜயலக்ஷ்மியைப் போன்ற அழகிய மங்கை அவருக்கு எப்படிக் கிடைத்தாள்? பணத்தின் பலத்தைக் கொண்டு தானே? அப்படி யிருக்கும் பொழுது பிச்சைக்கு ஆலாய்ப் பறக்கப் போகும் இந்தக் கோகிலாவுக்கு இத்தனை மண்டைக் கர்வமா? அவருடைய மனம் அவளை ஏகமாகக் கறுவியது.

"என் வீட்டை இப்பொழுதே காலி செய்து விடு. திருடர்களும் கொள்ளைக்காரர்களும் வசிப்பதற்காக நான் இந்த வீட்டைக் கட்டி வைக்கவில்லை. தெரிந்ததா?" என்று லால்ஜி ஸேட் சீறினார்.

அதைக் கேட்டதும் கோகிலா அயர்ந்து போய் விட்டாள். அளவுக்கு மீறி வந்த ஆத்திரத்தில் அவள் தன் நிலையை மறந்து விட்டாள். அவள் கணவன் குற்றம் சாட்டப் பட்டு ஓடி ஒளிபவன் அல்லவா? அந்த நிலையில் வாடகை வாங்கிக் கொண்டு அவளைத் தன் வீட்டில் ஒருவர் குடிக்கூலிக்கு வைத்துக் கொண்டாலும், அவள் மேல் கருணை கூர்ந்து அவர்கள் உபகாரம் செய்வதாகத்

தானே கருதப்படும்? அதை நினைத்துப் பார்த்த அவளுக்குத் திக்கென்றது. அந்த வீட்டை விட்டு வெளியேற நேர்ந்தால், அவள் வேறு எங்கே போய்த் தங்குவது?

லால்ஜி ஸேட்டுக்குத் தாம் பிரயோகித்த பாணம் சரியான இடத்தில் சரியான முறையில் பட்டு வேலை செய்து விட்டதாகத் தோன்றியது. அவருக்கு ஏற்கெனவே தமது அறிவில் ஒரு அகந்தை உண்டு. அது இப்பொழுது பன்மடங்காக அதிகரித்து விட்டது.

"ஏன் பேசாமல் நிற்கிறாய்? சொல்லு, பதில்!" என்று மௌனமே உருவாய் நின்ற கோகிலாவைப் பார்த்து மிகுந்த ஆங்காரத்துடன் லால்ஜி ஸேட் கேட்டார். பல சந்தர்ப்பங்களில் பெண்கள் பலவந்தத்தின் மூலமாகத்தான் வசமாகிறார்கள். இத்தகைய எத்தனையோ அநுபவங்கள் லால்ஜி ஸேட்டுக்கு ஏற்பட்டிருக்கின்றன. அதைக் கருத்தில் கொண்டு வெகு தைரியத்துடன் அவர் கோகிலாவின் கையைப் பிடித்தார்.

கோகிலாவைத் தம் இச்சைக்கு உடன்படுத்த லால்ஜி இங்கே முயன்று கொண்டிருந்த இதே சமயத்தில்தான் ஆற்றங்கரையில் மாய வலை வீசி மதி மயக்கி ஜகதீசைத் தன் கைக்குள் போட்டுக் கொள்ளும் முயற்சியில் விஜயலக்ஷ்மி ஈடுபட்டிருந்தாள்.

லால்ஜி ஸேட் தன் கையைப் பிடித்ததும் கோகிலாவுக்கு ஆத்திரம் மூண்டது. ஒரே உதறலில் தன் கையை விடுவித்துக் கொண்டாள். உடனே, "பீயூஷ்! அமர்! யார் அங்கே?" என்று இரைந்து கூவினாள்.

மொட்டை மாடிக்கு வரும் வாசற்படியில் வத்ஸராஜின் ஆஜானுபாகுவான உருவம் வந்து நின்றது. ராதாவையும் வத்ஸராஜையும் தனியே விட்டு விட்டுக் குழந்தைகள் இருவரையும் அழைத்துக் கொண்டு உள்ளே சென்ற கோகிலா வெகு நாழிகையாகியும் திரும்பி வரவில்லை. குழந்தைகள் விளையாடிக் கொண்டே முன்பக்கத்து அறைக்குத் திரும்பி வந்திருந்தார்கள். கையெழுத்தும் மறைந்து நன்றாக இருட்டி விடவே, ராதாவுக்கு யோசனையாகப் போய் விட்டது. கோகிலாவைப் பார்த்து வருவதற்காக உள்ளே சென்றாள். அங்கே கோகிலாவைக் காணவில்லை. எனவே அவள் துணுக்குற்றாள். மனக் கஷ்டத்தில் உழலும் அவளைத் தனியாக விட்டது தவறு என்று மனம் வருந்தினாள். வேதனை தாளாமல் அவள் ஏதாவது ஒன்றுக் கொன்று செய்துகொண்டு விட்டால் என்ன ஆவது? இந்த எண்ணம் எழுந்ததுதான் தாமதம்: அவள் மனத்தில் அளவு கடந்து அச்சம் உண்டாகி விட்டது. உடனே தன் கணவன் வத்ஸராஜைக் கையோடு அழைத்துக் கொண்டு மொட்டை மாடிக்குச் சென்றாள்.

அவர்கள் படியேறிச் செல்வதும் கோகிலா கூச்சல் இடுவதும் ஏக காலத்தில் நடந்தன. நாலே பாய்ச்சலில் வத்ஸராஜ் மாடியேறி அவர்களருகில் போய் நின்றான்.

வத்ஸராஜைப் பார்த்ததும் லால்ஜி ஸேட்டின் முகம் ஒரேயடியாக வெளிறி விட்டது. கோகிலா உடல் நடுங்க, உள்ளம் நடுங்க வத்ஸராஜுக்கு அருகில் வந்து நின்றாள். அதற்குள்ளாக ராதாவும் அவளை அணுகி வந்து விட்டாள்.

"டேய், சேட்! உன் பழக்கம் இன்னும் போகவில்லையா? சரி, இருக்கட்டும். அதற்கு வழி சொல்கிறேன்!" என்றான் வத்ஸராஜ்.

லால்ஜி ஸேட் வாய்திறந்து ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை. வத்ஸராஜ் மேலே தொடர்ந்தான்: "அன்று மூளை கலங்கியிருக்க வேண்டியவன் நீ. ஆனால் மயிரிழை தப்பி விட்டாய். அதற்குப் பதில் உன் அண்ணன் அந்த அடிக்கும் அதனால் ஏற்பட்ட அதிர்ச்சிக்கும் ஆளானான். அன்று தப்பினால் என்ன? இன்று மாட்டிக் கொண்டிருக்கிறாய். சந்தர்ப்பமும் சரியாக இருக்கிறது. வகையாகச் சிக்கிக் கொண்டிருக்கிறாய். இன்று உன்னை நான் உயிருடன் விடப் போவதில்லை!" என்றான்.

"நான் உன்னிடம் ஒன்றுமே பேசவில்லையே, அப்பா! கிரிதர் ஸேட் பணம் கேட்டார். நீ கொடுக்கவில்லை. அதற்காக உன்னைக் கடிந்து கொண்டார்; கட்டாயப் படுத்தினார். உடனே உனக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. பணத்தைச் செலவழித்து உன்னைத் திருட்டுக் குற்றத்திலிருந்து காப்பாற்றியவன் நான். அதற்கு நீ செய்யும் பிரதியுபகாரம் இது தானா?" என்று சிரமப்பட்டுத் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு லால்ஜி ஸேட் கேட்டார். அதோடு தமக்கும் வத்ஸராஜுக்கும் உள்ள கொடுக்கல் வாங்கல் விஷயத்தையும் ஞாபகப்படுத்தினார்.

"பலே, பலே! திருட்டுக் குற்றத்திலிருந்து நீ என்னைக் காப்பாற்றினாயோ? ஏன் சேட்! எதற்கு இந்தப் பச்சைப் பொய்? என்னைத் திருடத் தூண்டியவனே நீ தானே? நான் கொடுக்க வேண்டிய கடனை ஒன்றுக்கு இரண்டாகச் சொல்லி...இல்லை, இல்லை... நாலாகச் சொல்லி என் நிலத்தைக் கட்டிக் கொண்டாய். எஞ்சியிருந்த வீட்டையும் எழுதி வாங்கிக் கொண்டாய். அத்தனைக்குப் பிறகும் நீ என்னை நன்றி கெட்டவன் நாணயம் இல்லாதவன் என்று இடித்துக் காட்டினாய். இதெல்லாம் உனக்கு நினைவில்லையே?" என்று கேட்டான் வத்ஸராஜ்.

"நீ என்ன சொல்கிறாய்? எனக்கு ஒன்றும் புரியவே இல்லையே! நான் அப்படியெல்லாம் சொல்லியே இருக்க மாட்டேன். சொன்னதாகவும் எனக்கு நினைவில்லை!"

அடிக்குப் பயந்து உளறுபவன் கதையாக லால்ஜி ஸேட் மேலுக்கு இல்லையென்று கூறி மறுத்து விட்டாரே யொழிய வத்ஸராஜைப் பார்த்ததும் அவருக்குச் சில வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம் நினைவுக்கு வந்தது. (தொடரும்)



# வாழ்வின் வளம் நோக்கி . . .

காகாவென்று சப்தமிட்டுச் செல்லும் பெரிய ரெயில் வண்டி பெருமூச்சுடன் வந்து ஸ்டேஷனில் நிற்கிறது. கிராம ஜனங்கள் பரபரப்புடனும் ஆர்வத்துடனும் வண்டியை சூழ்ந்து கொள்ளுகிறார்கள்...சமூகத்தின் வாழ்க்கையில் முக்கியத்துவம் பெற்ற சம்பவம் இது. ஆம்—கிராம மக்களின் உழைப்பினால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் இனி நகரங்களுக்கெல்லாம் இந்த ரெயில் வண்டியில் அல்லவா எடுத்துச் செல்லப்படும்

வரப்போகும் வருடங்களில் கிராமத்தில் உற்பத்தியாகும் பொருள்கள் எல்லாம் நகரங்களுக்கு ரெயில் வழியாகவும் ரஸ்தாக்கள் மூலமாகவும் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு எடுத்துச் செல்லப்படும். ஐந்து வருட திட்ட காலத்திற்குள் 3000 மைல் பாதை செப்பனிடப்படும். மிகவும் சிறந்த போக்கு வரவு சாதனத்தை அமைக்க அடிப்படையாக 770 மைல்களுக்கு கான்க்ரீட் ரஸ்தாக்களும், 66 பிரம்மாண்டமான பாலங்களும் கட்டப்படும். வியாபாரத்தின் ஜீவ நாடியான இந்த சாதனங்களின் மூலமே நம் நாட்டு மக்களின் கனசாரமும், வர்த்தகமும் மேன்மேலும் உயர்ந்தோங்கி, அவர்களின் வாழ்க்கை உன்னதமடையும்.

*இவ்வைந்து வருடத் திட்டத்தின் பல்வேறு சாதனங்களில் லக்ஷக்கணக்கான டன் எஃகு உபயோகிக்கப்படும். ஆதலால் நம் நாட்டு மக்களின் வருங்கால வாழ்க்கையைச் செழிம்புறச் செய்வதில் எஃகானது எண்ணற்ற துறைகளில் ஈடுபடும்.*

**தி டாடா அயர்ன் & ஸ்டீல்**
**கம்பெனி லிமிடெட்**



## ராஷ்ட்ரபதி ராஜேந்திரர்

புத்தர் பிரான் அவதரித்த புண்ணிய மாகாணத்தில் பிறந்து பெருமை பெற்ற பாபு ராஜேந்திரர். சத்தியமும் சாந்தமுமாகப் பாரத நாட்டின் பண்பெலாம் நிறைந்து காட்சிதரும் உத்தமர். பாரதத்தின் முதலாவது ராஷ்ட்ரபதி.



## மாந்தருக்குள் மாணிக்கம் நேரு

பாரதத் தாயின் தவப் புதல்வர். தலைவர் திலகம். யுத்த பீதியும். அணு குண்டு பயமும் அச்சுறுத்தி வரும் உலகத்தில் அமைதியை நிலை நாட்டப் பாடுபட்டு வரும் சமாதான வீரர். பாரதப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு



## பாரத ரத்தினம் ராஜாஜி

அரசியல் ஞானி என்று உலகம் போற்றும் உத்தமர். "கண்ணன் காட்டிய வழி" யில் வாழ்ந்து வரும் கர்ம யோகி. சங்கரர், ராமாநுஜர், மாணிக்கவாசகர் பரம்பரையில் உதித்து பக்திச் செல்வத்தை வழங்கி வரும் பெரியார்



## பூதான மூர்த்தி வினோபா

காந்தி மகான் அளித்த கர்ம வீரர்! சுதந்திரப் போரின் முதல் சத்தியாக்ரகி! ஞானமும், சீலமும் நிரம்பிய முனிவர். பூதான இயக்கத்தின் தந்தை. "ஸர்வோதயம்" என்ற இலட்சியத்தின் உதாரண புருஷர்.

# விநோபாஜியின் வேள்வி

சுரேஷ் ராம்

[ இவர் ஸ்ரீ விநோபா பாவே அவர்களுடன் கூட இருந்து அவர்களுக்குத் தொண்டு செய்து வருகிறார். ]

**வி**நோபா பாவே 1916-ல் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். அவருக்கு அந்தக் கல்லூரிப் படிப்பு அர்த்தமற்றதாகவும் இயற்கைக்கு மாறுபட்டதாகவும், சற்றும் பயன் அற்றதாகவும் தோன்றியது. அதனால் அந்தக் கல்லூரிப் படிப்புக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு இமயமலைச் சாரலை நோக்கிப் புறப்பட்டார்!

இப்படி ஒரு காரியம் செய்யும்படி தூண்டியது எது என்று அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் கேட்டால், 'அதாதோ பிரம்ம ஜிக்ஞாஸா' என்று பதில் கூறுவார். அதாவது எங்கும் நிறைந்து என்றும் அழியாத சர்வ வல்லமை பொருந்திய பிரம்மத்தை அடைய வேண்டும் என்கிற பேர் அவாவினால் தூண்டப்பட்டுத்தான் புறப்பட்டதாகக் கூறுவார்.

அப்படிப் புறப்பட்டவர் காசி நகரத்துக்கு வந்து சேர்ந்தார். மகா மேதாவிகளும், பண்டிதர்களும் சாஸ்திரங்களைக் கரை கண்டவர்களும் வாழும் நகரம் காசி. அங்கே விநோபா ஆத்மானுபவத்தில் மிக உயரிய நிலையை அடைய வேண்டி சமஸ்கிருதத்திலுள்ள வேதாந்த நூல்களைப் படிக்க ஆரம்பித்தார்.

அப்போது காசி ஹிந்து சர்வகலாசாலை ஆரம்பிக்கப் பட்டது. அதன் ஆரம்ப விழாவுக்கு மகாத்மா காந்தி விஜயம் செய்து ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். இந்தச் சொற்பொழிவு பத்திரிகைகளில் வெளியாகி யிருந்தது. ஏதோ ஒரு பத்திரிகையில் காந்தியடிகளின் பேச்சு வெளியாகி யிருந்ததை விநோபாஜி படிக்க நேர்ந்தது. அன்று அந்தப் பிரசங்கத்தை அவர் படிக்கவில்லை என்று வைத்துக் கொள்ளுங்கள், இன்று நமக்கு இப்படிக் காட்சி தந்திருக்க மாட்டார். எங்கேயோ இமயமலைச் சாரலில், யாருடைய கண்ணிலும் படமுடியாதபடி ஒரு குகையில் தவம் செய்து கொண்டு இருந்திருப்பார்! நம் நல்ல வேளை அன்று அவர் காந்தி மகானின் பேச்சைப் படித்தார்!

அந்தப் பேச்சைப் படித்ததன் விளைவாக அவர் உள்ளத்தில் பல சந்தேகங்கள் எழுந்தன. அதைத் தெளிவுபடுத்திக் கொள்ளும் பொருட்டுக் காந்தியடிகளுக்கே ஒரு கடிதம் எழுதினார். அதற்குக் காந்தியடிகளிடமிருந்து பதில் உடனே வந்தது. அந்தப் பதிலைப் பார்த்து விட்டு மற்றொரு கடிதம் எழுதினார். அதற்கும் உடனே காந்தி மகாத்மா பதில் எழுதினார். அமைதி யிழந்து தவித்துக் கொண்டிருந்த விநோபாவின் உள்ளத்துக்கு அந்த பதிலும் போதிய தெளிவும், மனச் சாந்தியும் அளிக்கவில்லை. மூன்றாவது தடவையாக ஒரு கடிதம் எழுதினார். அதற்கு மகாத்மா, அத்தகைய சந்தேகங்களுக்குக் கடிதம் எழுதி மட்டும் தெளிவுபடுத்தி விட முடியாது என்றும் சமீபத்தில் தாம் கோச்ராப் என்ற இடத்தில் ஆரம்பித்துள்ள ஆச்ரமத்தில் தம்மை நேரில் கண்டு பேசும்படியும் எழுதி யிருந்தார்.

விநோபா காசிக்கு வந்து மூன்று மாதங்களே ஆகி யிருந்தன. மூன்று மாதப் படிப்புப் போதும் என்று காசியை விட்டு, காந்தி மகானைக் காணப் புறப்பட்டு விட்டார் விநோபா. 1916ம் ஆண்டு ஜூன் மாதம் 7-ம் தேதி அண்ணலைச் சந்தித்தார். அன்றுதான், ஏதோ ஒரு திசையில் போய்க் கொண்டிருந்த விநோபாவின் வாழ்க்கை நதி வேறொரு திசையை நோக்கித் திரும்பியது.

இதுதான் இமயமலைச் சாரலையும் பாறைகளையும், மலைக் காட்சிகளையும் விநோபா காண முடியாமற் போனதன் வரலாறு.

சர்வ வியாபியான ஈசனுடன் இணையுற இமய மலைக்குச் சென்றுதான் முயல வேண்டும் என்பதில்லை. ஒருவன் எங்கிருக்கிறானோ அந்த இடத்திலிருந்தே பாடுபடலாம். அந்த இடத்திலேயே இமயமலையைப் போன்ற பேர் இடையூறுகள் தோன்றத்தான் செய்கின்றன. இந்த வகையில் விநோபா தமது வாழ்க்கையில் தினந்தோறும் இமயமலைத் தரிசனம் செய்துகொண்டே வருகிறார் என்று சொல்லலாம்!

அவர் தம் வாழ்க்கையில் எத்தனையோ மலைகளைக் கடந்து, இப்போது பூதான யக்ஞம் என்ற மலையின் உச்சியை யடைய முயன்று வருகிறார். இந்த மலைப் பாதையில் ஏறிச் செல்லும்போது தான் விநோபா தம் பால்யத்தில் தவம் செய்ய வேண்டும் என்று புறப்பட்ட இமயமலையைக் காண்கிறார்.

* * *

**பூ**தான வேள்வியை யொட்டி உத்தரப் பிரதேசத்திலுள்ள ஹரித்துவாரம், ரிஷிகேசம் முதலிய இடங்களுக்கு யாத்திரை சென்றபோது 1916-ல் அவர் விரும்பியது 1951-ல் நிறைவேறியது. இமயமலையைப் பார்த்தார்.

1954-ம் வருஷத்தில் பீஹார் மாகாணத்தில் விநோபாஜி பூதான யாத்திரை செய்து கொண்டிருந்தார். அப்போது கம்பீரமாகத் தோற்றமளிக்கும் தவளகிரியையும் கௌரிசங்கர் மலையையும் பார்த்தோம். எங்கள் உள்ளம் பரவசமாகி விட்டது. விநோபாவோ அந்தக் காட்சியை அப்படியே பிடித்து வைத்துக் கொள்பவர்போல் சற்று நேரம் பார்த்துக் கொண்டே வழியில் நிற்பார். பிறகு கொஞ்ச தூரம் நடப்பார். மீண்டும் அப்படியே நின்று விடுவார். ஐந்து நிமிஷம் பத்து நிமிஷம் கூட நின்று விடுவார். ஒவ்வொரு சமயம் கண்களை மூடிக்கொண்டு ஏதேதோ சமஸ்கிருத சுலோகங்களைத் தமக்குள் சொல்லிக் கொள்ளுவார்.

இப்படி அன்று — செப்டம்பர் 24, 1954 — நடந்து சென்றதில் சாதாரணமாக ஆகும் நேரத்தைவிட ஒரு மணி நேரம் கூடவே ஆயிற்று! மாலையில் நிகழ்ந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் காலையில் கண்ட மனோரம்யமான காட்சியின் பிரதிபலிப்பு இருந்தது. அவர் அன்று பேசியதில் ஒரு பகுதி:

" இன்று காலை நான் கண்ட காட்சி என் உள்ளத்தைப் பரவசப் படுத்தி விட்டது. எனக்கு அளவு கடந்த மன அமைதியை நல்கிற்று. நமது முன்னோர்கள் எப்போதும் இமயமலையையே தமது வாழ்வின் லட்சியமாகக் கொண்டிருக்

இருக்கிறீர்கள்! நமது பாரதப் பண்பாடு இன்று இவ்வளவு உயர்ந்து விளங்குகிறது என்றால் அதற்குக் காரணம் இமயமலையிலிருந்து பெற்ற உற்சாகமும் உறுதியும் ஆகும். பாரதப் பண்பாட்டின் மூலம் இமயமலையே. மக்களுக்கு ஏதேனும் தொண்டு செய்வதிலேயே எப்போதும் என் காலத்தைச் செலவழித்து வந்திருக்கிறேன். ஆயினும் ஹிமாசலத்தை நினைக்காத நாளே கிடையாது! ஒரு கிராமத்திலிருந்து இன்னொரு கிராமத்துக்கு நடந்து போய்க் கொண்டிருக்கும் போதுகூட ஹிமாசலத்தைப் பற்றியே சிந்தித்த வண்ணம் செல்கிறேன். என் உள்ளக் கோயிலில் பிரதிஷ்டை செய்து இதுகாறும் பூஜித்து வந்த இமயத்தை இன்று நேரில் கண்ணால் கண்டேன். ஒருமணி நேரத்துக்கு மேல் என் கண்குளிரக் கண்டு களிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. கீதையில், பக்தன் இரண்டு குணங்களைப் பெற்றிருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்று பக்தன் தனக்கென்று வீடு வைத்துக் கொள்ளக் கூடாது; இரண்டு திண்ணிய மனம் படைத்திருக்க வேண்டும். எனக்கென்று வீடு வாசல் கிடையாது. ஒரு ஊர் என்பதும் இல்லை. காலையிலிருக்கும் ஒரு ஊரில் மாலை இருப்பதில்லை. தினம் ஊர் ஊராகப் போய்க் கொண்டிருப்பதில் தினம் ஆயிரக் கணக்கான புதுப் புது முகங்களைப் பார்க்கிறேன். அவர்கள் யாவர் முகத்திலும் ஸ்ரீமந் நாராயணனையே பார்க்கிறேன். கீதையில் சொல்லப்பட்ட மற்றோர் அம்சமாகிய திண்ணிய மனமும் ஈசன் அருளால் படைத்திருக்கிறேன். இந்த ஹிமாசலத்தைப் போன்ற ஒரு அசைக்க முடியாத லக்ஷ்யத்தையும் தைரியமாகக் கொண்டிருக்கிறேன். அதாவது கிராமக் கைத்தொழில்களின் மூலமும் பூதான வேள்வியின் மூலமும் மக்கள் வாழ்விலே அஹிம்சா முறையில் புதுப் புரட்சியே உண்டாக்கலாம் என்கிற திடமான நம்பிக்கை கொண்டிருக்கிறேன்."

* * *

அக்டோபர் மாதம் முழுவதும் இமயமலைச் சாரலை ஒட்டிய பிரதேசத்திலேயே சென்று கொண்டிருந்தோம். விநோபாவின் உள்ளம் இமயமலையின் மகோன்னதமான வடிவிலும் அழகிலும் திளைத்துக் கொண்டிருந்தது. அதன் பயனாக விஞ்ஞானம், கலை, சமுதாய சாஸ்திரம் ஆகிய விஷயங்களில் அவர் கொண்டிருந்த அபிப்பிராயங்களிலும் மாறுதல் ஏற்படலாயிற்று. இமயமலை அவருக்கு இவ்விஷயங்களில் ஒரு புது ஒளி வீசிப் புது உண்மைகளைக் காணச் செய்தது! விநோபாவின் பின்வரும் மொழிகளில் இதைக் காணலாம்:

"பௌதிக சாஸ்திரத்தைப் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் எவ்வளவோ உண்டு. பௌதிக சாஸ்திர விஷயங்களை ஐரோப்பாவிடமிருந்து கற்றுக் கொள்ளுவது சரியே. சமுதாய சாஸ்திரம், அரசியல் முறை முதலியவை சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஐரோப்பாவைப் பார்த்து நாம் கற்றுக் கொள்வதற்கு அதிகமாக இல்லை. ஆனால் இன்று நிலைமை நேர்மாறாக இருக்கிறது. நாம் நமது அரசாட்சி முறையை ஐரோப்பிய பாணியில் அமைத்துக் கொண்டு விட்டோம். சமீப காலத்தில், சில நூற்றாண்டுகளுக்கு முன் ஐரோப்பாவில் ஏற்பட்ட பார்லிமெண்டரிக் கட்சித் தேர்தல் முறைகளைக் கையாளத் தொடங்கி விட்டோம். நமது நாட்டின் பழம்பெரும் அனுபவத்தின் அடிப்படையில் அரசியலை வகுத்திருந்தால் எவ்வளவோ சௌகரியமாகவும் க்ஷேமமாகவும் இருந்திருக்கும். முன்னேற்றமும் அடைந்திருப்போம்.

"ஐரோப்பிய சமுதாய முறை வேறு; நமது சமுதாய முறை வேறு. அவர்களது அரசியல் முறையைப் பின்பற்றத் தொடங்கியதில் எவ்வளவோ பின்னேற்றமடைந்து விட்டோம். நமது பாஷை அரசியலுக்குப் போதிய சக்தி வாய்ந்ததாக இல்லை என்று கூறப்படுகிறது. யுதிஷ்டிரர், அசோகர், அக்பர் போன்ற பேரரசர்களுக்கு நம்முடைய பாஷை போதிய சக்தி வாய்ந்ததாக இருந்தது. அந்த பாஷையைக் குறைபடுத்திச் சொல்லுவதைக் கேட்க மனம் புண்படுகிறது. நாம் நம்முடைய மொழியிலே நமது பண்பாட்டின் அடிப்படையில் அரசியலை வகுத்திருந்தால் ஐரோப்பியர்கள் அதைப் பார்த்துத் தங்கள் மொழியில் பெயர்த்து எழுதிக் கொள்ள ஆரம்பித்திருப்பார்கள். நாமோ அவர்களுடைய எண்ணங்களையும் திட்டங்களையும் 'ஈயடிச்சான் காப்பி' யடிக்கப் பார்க்கிறோம். அதனால் நாம் பெரும் பள்ளத்தில் விழுந்து விட்டோம். பின்னேற்றம் அடைந்து விட்டோம்.

"இரண்டு பொருள்கள் ஒன்றன் பின் ஒன்றாகச் சுற்றி வட்டமாக வருகின்றன என்று வைத்துக் கொள்ளுங்கள். பின்னதாக இருக்கும் பொருள் முகத்தைப் பின் பக்கம் திருப்பிக் கொண்டு சுற்றத் தொடங்கி விட்டால் முன்னதாக இருந்த பொருள் பின்னதாகி விடுகிறது.

"இதே நிலைமைதான் நம் நாட்டிலும் ஏற்பட்டிருக்கிறது. நாம் நமது முகத்தை ஐரோப்பா இருக்கும் திசைப் பக்கம் திருப்பிக் கொண்டோம். அதன் பயனாக நஷ்டம் அடைந்து விட்டோம். இதை நாம் செய்யாமலிருந்திருந்தால் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருப்போம்!"

* * *

நமது நாட்டில் மக்களிடை ஏற்கனவே எத்தனையோ பிரிவினைகள். ஜாதியின் பெயராலும், சமயத்தின் பெயராலும் சமூக ஆசாரங்கள் பெயராலும், இருக்கும் வேற்றுமைகள் இவ்வளவு அவ்வளவல்ல. இவை போதாவென்று தேர்தல் முறைகளும், கட்சிப் போராட்டங்களும், கோஷ்டிச் சண்டைகளும் இழைக்கும் கொடுமை சொல்லி முடியாது. இவை நமது கிராம மக்களின் அமைதியான வாழ்க்கையைச் சீர்குலைக்கின்றன. நாம் அரும் பாடுபட்டுப் பெற்ற சுதந்திரத்தையே குலைத்து விடுமோ என்று கூடப் பயமாக இருக்கிறது.

இன்றையப் பொதுநல ஊழியர்கள், அரசியல் அதிகாரப் பதவிகளையும் உத்தியோகங்களையும் பற்றத்தான் பெரிதும் பாடுபட்டு வருகிறார்கள். தங்கள் முழு நேரத்தையும் கவனத்தையும் அதில்தான் செலவழிக்கிறார்கள். சிலர் பதவியை அடைந்திருக்கிறார்கள்; மற்றவர்கள் அடைய முயல்கிறார்கள். மொத்தத்தில் யாவரும் அதிகார வெறி பிடித்தவர்களாகவே இருக்கிறார்கள். பொது மக்களின் கஷ்ட நஷ்டங்களில் கவனமும் சிரத்தையும் செலுத்த அவர்களுக்கு அவகாசமில்லை. இந்தப் பரிதாப நிலையைக் குறித்து ஒரு இடத்தில் விநோபாஜி சொன்னார்:

"இலக்கணத்தில் மூன்று காலங்கள் உண்டு. அதாவது: இறந்த காலம், நிகழ்காலம், எதிர் காலம் என்று. இலக்கணத்திலிருப்பது போலவே அரசியல் கட்சிக்காரர்களுக்கும் மூன்று காலங்கள் உண்டு: தேர்தலுக்கு முந்தைய காலம், தேர்தல் காலம், தேர்தலுக்குப் பிந்திய காலம். எல்லாக் காலமும் தேர்தலை




யொட்டியே நிற்கும். நாலாவது ஒரு காலம் இருப்பது அவர்களுக்குத் தெரியவில்லை. கால தேவன் அவர்களுக்காகக் காத்திருக்கிறான் என்பதை அவர்கள் மறந்தேயிருக்கிறார்கள் !

"அரசியல் ஊழியர்களுடைய பலம் மக்களுக்குப் புரியும் தொண்டில் இருக்கிறது; கட்சிச் சண்டையில் இல்லை என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. சுதந்திரம் அடைந்து விட்ட பின் மக்களின் பொருள் நிலை விருத்தி யடைவதற்கும் நல்வாழ்வுக்கும் அல்லவா பாடுபட வேண்டும்! அதிகாரத்தைப் பற்றுவதில்தான் தங்கள் பலம் இருக்கிறது என்று நினைப்பவர்கள் சுதந்திர வாழ்க்கையின் ரகசியத்தை உணரவில்லை என்பதுதான் பொருள்.

"ஒன்று நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். எத்தனையோ அரசியல் வாதிகள் பூதான யக்ஞத்தில் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் யாவரும் அரசியலை விட்டு விட்டார்கள் என்பதல்ல பொருள். ஊழல் மலிந்த அரசியலைச் சுத்தப் படுத்தப் பாடுபடுகிறார்கள் என்பதுதான் பொருள். வானத்தில் எத்தனையோ நட்சத்திரங்கள் ஒளி வீசிக் கொண்டிருக்கின்றன. அந்த சமயத்தில் சூரியன் வருகிறான். மற்ற ஒளிகள் இருக்குமிடம் தெரியாமல் போய் விடுகின்றன. இந்த பூதான இயக்கமும் அம்மாதிரியே, கட்சிச் சண்டைகள் மலிந்த அரசியலை அகற்றி, பொதுமக்களின் க்ஷேமத்துக்கும் சுகத்துக்கும் பாடுபடுகிறது."

யுத்தமில்லாத காலம் எல்லாம் சமாதான காலம் அல்ல. சமாதானம் என்பது யுத்த பயம் அறவே நீங்கப்பெற்ற காலம். ஒரு மனிதன் இன்னொரு மனிதனை அல்லது ஒரு நாடு இன்னொரு நாட்டைச் சுரண்டி வாழும் வரை சமாதானம், சாந்தி, அமைதி என்பவை யெல்லாம் ஏது! அதனாலேதான் அன்பும் அஹிம்சையும் சேர்ந்த முறையில் சமுதாயத்தையும் மக்கள் மனப்பண்பையும் மாற்றியமைக்க சர்வோதயம் முயல்கிறது. மக்களிடை தற்சமயம் நிலவிவரும் செல்வப் பற்றை மாற்றி, தனி நபர்களிடம் சேர்ந்துள்ள சொத்தை அவர்களாகவே பிறருடன் பகிர்ந்து அனுபவிக்கச் செய்யும் மனப் பண்பை ஏற்படுத்த முயல்கிறது சர்வோதயம். இதைப் பற்றி விநோபா சொல்லுகிறார்:—

"ஒரு வியாபாரி பணம் சேர்க்கிறான். அந்தப் பணத்தில் ஒவ்வொரு சமயம் ஒரு பகுதி ஏழைகளுக்கும் கொடுத்து உதவுகிறான். ஆனால் நாட்டில் உள்ள ஏழைமை ஒழிந்துவிட வேண்டும் என்கிற பரந்த உணர்ச்சி அவனிடம் இல்லை. குதிரையின் சொந்தக்காரன் குதிரையினிடம் எவ்வளவு பட்சமாக இருந்தாலும், குதிரை குதிரையாகத்தான் இருக்கும்; மனிதன் எஜமானனாகத்தான் இருப்பான். சர்வோதயம் மக்களுக்குள் உள்ள ஏற்றத் தாழ்வுகளை ஒழித்துச் சம உணர்ச்சியை உண்டாக்க முயல்கிறது! இதுதான் பூதான இயக்கத்தின் முக்கிய நோக்கம்."

* * *

எங்களுடைய யாத்திரையில் சில ருசிகர ஹாஸ்யங்களும் உண்டு. ஒரு சமயம் ஒரு முஸ்லிம் பிரபு தமது தரிசு நிலங்களை யெல்லாம் விநோபாவின் பூதான இயக்கத்துக்குத் தந்தார். அப்போது விநோபாஜி அவரது விளை நிலங்களிலும் ஆறில் ஒரு பகுதி கேட்டார். அந்தப் பணக்காரர், "தாங்கள் கேட்பது நியாயமே. ஆனால் எங்களில் பெண்களுக்குச் சொத்தில் சம உரிமை உண்டு. எனக்குச் சகோதரர்கள் நால்வர், தங்கைகள் இருவர். நான் உட்பட நாங்கள் ஏழு பேர் இருக்கிறோம்" என்று கூறினார்.

"அப்படியானால் என்னை எட்டாவது சகோதரனாகக் கொள்ளுங்கள்!" என்றார் விநோபா.

அதன்படியே அவரது விளை நிலங்களில் எட்டில் ஒரு பகுதி விநோபாவுக்கு அவர் வழங்கினார்.

பிஹாரில் பல கிராமவாசிகள் மிக உற்சாகமாகத் தங்கள் நிலங்களை வழங்கினார்கள். விநோபாஜி தொடங்கியுள்ள மகத்தான வேள்வியை மக்கள் குதூகலத்துடன் வரவேற்றார்கள். வெற்றிகரமாகப் பிஹார் யாத்திரை முடித்துக் கொண்டு இமயமலைச் சாரலை விட்டுத் தக்ஷிண திசை திரும்பினோம்.

ஜனவரி 26 ம் தேதி யன்று இந்த ப
ஸ்ரேஷ்டர் தமது புனித வேள்வியைத் தொ
வதற்காக ஒரிஸ்ஸா ராஜ்யத்தில் பிரவேசிக்கிற




# புதுமைப் பெண் செந்திரு

## பகீரதன்

காலை மணி ஏழுக்கு மேல் இருக்கும். உயிர் உள்ள ஏதோ ஒரு உருவம் என் படுக்கையில் வந்து உட்கார்ந்தது போல் இருந்தது. என்னைத் தட்டி எழுப்பியபடியே "எழுந்திருங்கள்" என்று உரிமையுடன் சத்தம் போட்டது.

நான் படுக்கையில் இருந்து எழுந்து உட்கார்ந்தேன். என் எதிரில் சாத்தப்பன் உட்கார்ந்திருந்தான். அவன் என் நெருங்கிய தோழன். அச்சுத் தொழிலாளி. ரொம்பவும் வேடிக்கையான ஆள்.

"உம். நாழியாகி விட்டது. எழுந்திருங்கள்" என்று என்னை மீண்டும் துரிதப்படுத்தினான்.

திறந்திருந்த கொல்லைப்புற ஜன்னல் வழியாகச் சுவரின் மீது சூரிய வெளிச்சம் விழுந்து கொண்டிருந்தது. அந்த வெளிச்சத்தில் தெரிந்த தங்கள் நிழலைப் பார்த்தபடி இரண்டு சிட்டுக் குருவிகள் பறந்து கொண்டிருந்தன.

"அப்பா! எழுந்து விட்டீங்களா?" என்று கேட்டுக் கொண்டே என் மகன் ஓடிவந்தான். படுக்கை அறையைச் சுற்றி நிலைகொள்ளாமல் குதித்தான். அதனால் அங்கு மேஜை மீதிருந்த சாமான்கள் சில சிதறிக் கீழே விழுந்தன.

"உன் மனைவியை அப்படியே உரித்து வைத்திருக்கிறான்." என்று என் மகனைப் பார்த்துச் சொன்னான் சாத்தப்பன்.

எனக்குத் திடீரென்று என் மனைவியின் நினைவு வந்து விட்டது. படுக்கையை விட்டு இறங்கி என் மகனைத் தூக்கச் சென்றேன். அவன் என் கையில் அகப்படாமல் ஓடிக் கொண்டிருந்தான்.

சாத்தப்பன் பாட ஆரம்பித்து விட்டான். எனக்குப் பிடித்தமான பாட்டு. என்னையும் செந்திருவையும் சேர்த்து வைத்த பாட்டு.

"சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொலல்—பாவம்"

"உயிர்களிடத்தில் அன்பு வேணும்; தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்"

இந்தப் பாட்டைக் கேட்கும்போது என் சிந்தனை எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னால் சென்று விட்டது. நான் செந்திருவைச் சந்தித்த அந்த நாட்கள் நினைவுக்கு வந்து விட்டன. என்னை மணந்து கொண்டதால் அவள் பட்ட கஷ்டங்களை ஒரு கணம் எண்ணிப் பார்த்தேன். கடைசியாக என் கையில் ஒரு பச்சிளங் குழந்தையைக் கொடுத்து விட்டு அவள் என்னை விட்டு, ஏன், இந்த உலகத்தை விட்டே சென்ற சம்பவம் நினைவுக்கு வந்தது. அப்படியே என் மகனை வாரி எடுத்துக் கொண்டேன். பழைய சம்பவங்கள் என் மனத்திரையில் சுருள் சுருளாக விரிய ஆரம்பித்தன.

** ** **

நந்தனையும், பாணரையும் தந்து பெருமை பெற்ற ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவன் நான்.

நான் வேலை பார்த்த அச்சகம் ஒரு தேசபக்தருக்குச் சொந்தமானது. அவர் பரந்த மனப்பான்மையுள்ளவர். காந்தி மகானிடம் அளவற்ற பக்தி கொண்டவர். இந்த நாட்டில் சாதி பேதமே இருக்கக் கூடாது என்ற லட்சியத்துக்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்தவர். அவருடைய உதவியில்தான் நான்கூடப் படித்தேன் என்பதைப் பின்னால் தெரிந்து கொண்டேன்.

அவர் அச்சகத்தில் அச்சுக் கோக்க வரும் விஷயம் எல்லாம் அன்னிய ஆட்சியிலிருந்து நம் நாடு விடுதலை பெற வேண்டிய அவசியத்தைப் பற்றியும், தீண்டாமையின் கொடுமையைப் பற்றியும், அது ஒழிய வேண்டிய அவசரத்தைப் பற்றியுமே இருக்கும். அந்த விஷயங்களைப் படித்துப் படித்து அச்சுக் கோத்ததன் மூலம் நான் பல

பெரிய விஷயங்களைப் புரிந்து கொண்டேன். பள்ளிக்கூடமும், கல்லூரிகளும்கூட சொல்லிக் கொடுக்க முடியாத அளவு எனக்கு அந்த அச்சகம் கல்வியளித்து விட்டது.

அந்தச் சமயத்தில் செந்திரு என்ற மாணவி தீண்டாமை விலக்குக்குப் பாடுபட முன்வந்திருந்தாள். அவளைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்பு ஒன்றை எங்கள் அச்சகத்தின் தலைவர் சிறு புத்தகமாக அச்சிட்டு மக்களுக்கு வழங்கினார். அந்தப் புத்தகம் முழுவதையும் நான் ஒருவனே அச்சுக் கோர்த்தேன். அப்படி அச்சுக் கோர்க்கும் போது செந்திருவின் பெயரையும் என்னுடைய இதயத்தில் கோர்த்துக் கொண்டேன்.

அது முதல் செந்திருவோடு சேர்ந்து தீண்டாமை ஒழிப்புக்குச் சேவை செய்வது என்று தீர்மானித்துக் கொண்டேன். அப்பொழுது நாட்டில் அன்னிய ஆட்சியை எதிர்த்துக் கொடிப் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. அதில் ஈடுபட்டுப் பிரசாரம் செய்துகொண்டிருந்தாள் செந்திரு.

செந்திரு உயர் குலத்துப் பெண். படித்த மாணவி. பெரிய பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவள். ஒரு சமயம் காந்தி மகானின் பிரசங்கத்தைக் கேட்டு அப்படியே மெய்யுருகி விட்டாள். தேசத்தின் விடுதலை இயக்கத்துக்காகத் தன்னையே அர்ப்பணித்து விட்டாள். அவருடைய ஹரிஜன நிதி தேசத்துக்கு மிகவும் அவசியம் என்பதை உணர்ந்து, தான் அணிந்திருந்த ஆயிரக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள நகைகளைக் கழற்றிக் கொடுத்து விட்டாள்.

இதை யெல்லாம் தெரிந்து கொண்டிருந்த எனக்குச் செந்திரு தெய்வமாகவே காட்சியளித்தாள். ஒருநாள் அவளைச் சந்தித்தேன். நான் ஒரு ஹரிஜன் என்றும், தேசிய விடுதலை இயக்கத்துக்காக என்ன வேலை கொடுத்தாலும் செய்யத் தயாராய் இருக்கிறேன் என்றும் தெரிவித்துக் கொண்டேன். செந்திரு எந்தவிதமான ஆட்சேபனையும் சொல்லாமல் என்னைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டாள்.

நான் செந்திருவுடனே சேர்ந்து தேசத் தொண்டில் ஈடுபட்ட சமயம் என் தந்தை காலமாகி விட்டார். என் தாயாருக்கு என் செயல் ஒன்றுமே பிடிக்கவில்லை. "தம்பி! ஊர் உலகத்தைப் போல ஒழுங்காக வேலைக்குப் போய் நாலுகாசு கொண்டு வந்தால் போதாதா! வேண்டாத விஷயத்தில் எல்லாம் ஈடுபட்டு வருகிறாயே!" என்று முதலில் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாள்.

இருந்தாலும் என் அச்சகத்தில் உள்ளவர்களை விட நான் நல்ல முறையில் மாறுபட்டு வருவதைக் காண என் அன்னைக்குச் சந்தோஷமாகவே இருந்தது. இப்பொழுதெல்லாம் நான் வீட்டுக்கு வரும்போது செந்திரு கொடுத்த பல புஸ்தகங்களைக் கொண்டு வந்து மிகுந்த கவனத்துடன் படிக்க ஆரம்பித்தேன்.



ஒருசமயம் அன்னை "உனக்கு உடம்பு சரியாக யில்லையா!" என்று கவலையுடன் கேட்டாள்.

"என் உடம்புக்கு என்ன! சௌக்கியமாகத் தான் இருக்கிறேன்" என்றேன்.

"நீ ரொம்ப மெலிந்திருக்கிறாய்" என்று சொன்னாள். பிறகு மௌனமாக இருந்து விட்டாள்.

நாளடைவில் என்னுடைய பேச்சிலும், நடை, உடையிலும் மாற்றம் ஏற்பட்டிருப்பதை என்னால் நன்றாக உணர முடிந்தது. எல்லாம் செந்திருவைச் சந்தித்த பிறகுதான் என்பதை அறிந்து என் அன்னை மகிழ்ச்சி அடைந்தாள்.

நான் நல்லபடியாக இருக்க வேண்டும் என்று பகவானைப் பிரார்த்தித்தவண்ணமிருந்தாள்.

** ** **

ருத்ராட்ச மணிகள் உருளுவதைப் போல் நாட்கள், வாரங்கள், மாதங்கள் மெதுவாகக் கழிந்து கொண்டிருந்தன. ஞாயிற்றுக் கிழமை தோறும் செந்திருவும், இன்னும் சில நண்பர்களும் எங்கள் வீட்டில் கூடிப் பல விஷயங்களைப் பற்றி விவாதித்து வந்தோம்.

என் அன்னையுடன் செந்திரு பழகுவதைப் பார்க்கும்போது எனக்குச் செந்திரு மீது இன்னும் எல்லையற்ற மதிப்பு உண்டாகி விட்டது.

ஒரு நாள் என் அன்னை செந்திருவைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தாள்.

"தம்பி! அந்தப் பெண் செந்திரு எவ்வளவு அழகான, அறிவுள்ள பெண்ணாக இருக்கிறாள். அவள் யார்!" என்று கேட்டாள்.

"அவள் ஓர் உபாத்தியாயினி" என்றேன்.

"உபாத்தியாயினியா! எவ்வளவு எளிமையாக இருக்கிறாள். அவள் பெற்றோர்கள் எங்கே யிருக்கிறார்கள்!" என்று வியப்புடன் கேட்டாள்.

"பக்கத்து ஊரில் இருக்கிறார்கள். உயர்ந்த குலத்தில் பிறந்தவள். அவள் தந்தை பெரிய பணக்காரர். அவருக்கு ஏராளமான செல்வம் இருக்கிறது. அவள் விடுதலை இயக்கத்தில்—காங்கிரஸில் சேர்ந்து விட்டாள். சாதி பேதத்தை ஒழிக்கக் காந்தி மகானுடன் சேர்ந்து விட்டாள். அதனால் அவளை அவள் பெற்றோர்கள் வெறுத்து விட்டனர். இப்பொழுது ஒரு பெண்கள் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயினியாக இருந்து வருகிறாள். அங்கிருந்து கொண்டே தேசிய இயக்கத்துக்கும் வேலை செய்கிறாள்" என்றேன்.

என் அன்னை திடுக்கிட்டாள். "தம்பி! நீங்கள் எல்லாம் சுதந்திர இயக்கத்துக்கும் வேலை செய்ய வேண்டியதுதான். இருந்தாலும் எனக்கு என்னவோ பயமாகத்தான் இருக்கிறது" என்றாள்.

அது முதல் செந்திருவின் மீது என் அன்னைக்கு அபார மதிப்பு ஏற்பட்டு விட்டது. என் வீட்டுக்குச் செந்திரு வரும்போது அன்னை மலர்ந்த முகத்துடன் வரவேற்று உபசரிக்க ஆரம்பித்தாள்.

நான் குடியிருந்த பேட்டை மக்கள் எல்லாரும் தொழிலாளர்கள். சுகாதாரத்துக்கும் எங்கள் பேட்டைக்கும் சம்பந்தமே கிடையாது. பேட்-

டையின் பெரும்பாலான மக்களுக்குச் சுகாதாரத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. காலையில் எழுந்தவுடன் தொழிலாளர்கள் தங்கள் குடிசைகளை விட்டு வெளியேறுவார்கள். அவர்கள் முகங்கள் ஒளியிழந்து காணப்படும். போதிய ஓய்வு இல்லாததால் உடலின் தசை நார்கள் தளர்ந்து போயிருக்கும். காலைவேளையில் நடுங்கும் குளிர் நாளில்கூடத் தங்கள் தங்கள் வேலையைத் தேடி வேகமாக நடந்து செல்வார்கள். தெருக்கள் மிகக் குறுகலாகவும் மேடு பள்ளங்கள் நிறைந்தும் இருக்கும். வீதியில் செல்லும் தொழிலாளர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் எச்சம் பேச்சும் காற்றிலே கலந்து வரும்.

இந்தமாதிரிச் சூழ்நிலையில் வாழ்ந்து வந்தவன் தான் நானும். செந்திருவின் தொடர்பால் என் வாழ்க்கையில் பல மாறுதல்களை உண்டாக்கிக் கொண்டேன். என்னைச் சேர்ந்தவர்களையும் சீர்திருத்த முயன்றேன். முன்பெல்லாம் வேலை செய்த நேரம் போக மற்ற நேரங்களில் என்ன செய்வது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருப்பேன். இப்பொழுதோ, நேரமே போதவில்லை. மக்களுக்குத் தொண்டாற்றுவதால் மனத்திலே எல்லையற்ற இன்பமும் சாந்தமும் நிலவியிருந்ததை உணர்ந்து மகிழ்ந்தேன்.

என் உள்ளத்தில் இருந்து வந்த கர்வம் மறைந்து விட்டது. என் உடலையும், உடையையும் சுத்தமாக வைத்துக்கொள்ளக் கற்றுக் கொண்டேன். என் வாழ்க்கையில் மென்மையான இடலும், எளிமையும் அதிகப்பட்டு வருவதைக் கண்டு என் அன்னை வியந்தாள். செந்திரு தன்னுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டாள்.

ஒரு சமயம் என் வீட்டில் காந்தி மகானின் படத்தையும், ராமபிரானின் திருஉருவப் படத்தையும் வாங்கிக்கொண்டு வந்து சுவரில் மாட்டித் தொங்க விட்டேன். இதைப் பார்த்த என் அன்னை இந்தக் காலத்துப் பிள்ளைகள் காந்தி மகானாவது கடவுளைப்பற்றி நினைக்கிறார்களே என்று சந்தோஷப் பட்டாள்.

அதன் பிறகு சுவர்களில் நாட்டுக்குத் தொண்டாற்றிய வீர புருஷர்களின் படங்கள் மாட்டப்பட்டன. அலமாரிகளில் புஸ்தகங்கள் பெருகிக் கொண்டே வந்தன. அலமாரிகள் என் பொது சேவையைப் பாராட்டி, தச்சுத் தொழிலாளத் தோழன் ஒருவனால் எனக்கு அளிக்கப் பட்டவை. இதனால் என்னுடைய குடிசை வீடு, நல்ல வீட்டின் தோற்றத்தையே பெற ஆரம்பித்தது. இந்த மாறுதலுக்குக் காரணமான செந்திருவை என்னால் எப்படி மறக்க முடியும்!

இவ்வாறு வாரங்களும், மாதங்களும் சென்று கொண்டே இருந்தன. எப்படியோ ஒரு ஆண்டு ஓடிக் கழிந்து விட்டது.

போற்றி போற்றி யோராயிரம்போற்றி! நின்
பொன்னடிக்குப் பல்லாயிரம் போற்றிகாண்!
துன்ப நீக்குஞ் சுதந்திர பேரிகை
சாற்றி வந்தனை மாதரசே, யெங்கள்
சாதிசெய்த தவப்பயன் வாழிநீ!

என்று கவியரசர் புதுமைப் பெண்ணைப் பாடினாரே, அந்த லட்சணங்கள் அத்தனையும் பொருந்தி விளங்கினாள் செந்திரு. அவள் மதுரத் தேமொழியில் மயங்காத மக்களே இல்லை.

சுதந்திர பிரதிக்ஞை தினம் கொண்டாட வேண்டும் என்று அறிவிக்கும் பிரசுரங்களை, பல கிராமங்களுக்கு வழங்கினேன். போலீஸ் ஸ்டேஷன் சுவர்களில் கூட அவைகளை ஒட்டி மகிழ்ந்தேன்.

பிரசுரங்களில் கண்ட செந்திருவின் வீர வாசகங்களைப் பற்றி ஜனங்கள் கூட்டம் கூட்டமாக விவாதித்துக் கொண்டிருந்தனர். மக்களின் வாழ்க்கை கொந்தளித்துக் கொண்டிருந்தது.

செந்திருவின் பேச்சுக்கள் உள்ளத்தில் வீர உணர்ச்சியை எழுப்பி விடக்கூடிய சக்தியுடன் இருந்தனவே தவிர, தனி மனிதர்களைப் பற்றிய விஷயங்களாக அமையவில்லை.

சூரியன் வானத்தில் மேலெழுந்து தன் பொற்கிரணங்களை அள்ளிச் சொரிந்து கொண்டிருந்தான். சூரிய வெளிச்சம் எங்கள் பேட்டையைப் பரிசுத்த மாக்குவது போலிருந்தது. எல்லாப் பொருள்களும் இன்பமாகத் தோன்றின.

நான் தாயின் மணிக் கொடியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு பிரதானமான ஒரு தெருவை நோக்கிச் சென்று கொண்டிருந்தேன். செந்திரு தன் தேனினுமினிய இன்குரலில்,

"தாயின் மணிக்கொடி பாரீ—அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீ!"

என்ற பாடலைப் பாடிக் கொண்டு வந்தாள். வரவரக் கூட்டம் அதிகரித்தது.

"போலீஸ்! போலீஸ்!" என்று யாரோ கூவினர்.

பல போலீஸ் ஜவான்கள் குறுந்தடியை வீசிக் கொண்டு எங்களை நோக்கி வந்தனர்.

"கலைந்து போங்கள்" என்று உத்தர விட்டனர்.

போலீஸார் சொல்வதைக் காதில் வாங்காமல் நான் கூட்டத்தினருக்குப் பேச ஆரம்பித்தேன். "தோழர்களே! நம் கொடி, அறிவு, சத்தியம், சுதந்திரம் ஆகியவற்றின் கொடியாகும்! இதை யாரும் தாழ்த்த முடியாது" என்றேன்.

"தேசியக் கொடி வாழ்க!" என்று நூற்றுக் கணக்கான குரல்கள் கோஷித்தன.

கூட்டத்தில் உணர்ச்சி கொந்தளித்துக் கொண்டிருந்தது. கொடியின் மகிமையை உணர்ந்தவர்கள் நான் பிடித்திருந்த கொடியின் கழியை வந்து தாங்கித் தூக்கிப் பிடித்தனர். அப்படிப் பிடித்த கைகளில் செந்திருவின் கரமும் இருந்தது.

கெட்டையான போலீஸ் அதிகாரி ஒருவர் கடுமையான குரலில் தம் உதவிப் போலீஸ்காரர்களுக்கு உத்தர விட்டார்.

"அவனிடமிருந்து கொடியைப் பிடுங்குங்கள்!" என்றார். உடனே ஒரு போலீஸ்காரர் பாய்ந்து வந்து என்னிடமிருந்து கொடியைப் பிடுங்கினார். என் கைகளுக்கு விலங்கிடப் பட்டன.

நான் என்னையும் அறியாமல் செந்திருவைத் திரும்பிப் பார்த்தேன். "என் அன்பே! செந்திருவே! போய் வருகிறேன்" என்றேன்.

நீதி மன்றத்தில் எனக்கு ஆறு மாதம் கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

** ** **

சிறைச்சாலைக்கு அடிக்கடி வந்து என்னைப் பார்த்து வந்தாள் செந்திரு. நான் என் அன்னையை ஒரு முறை அழைத்து வரும்படி அவளிடம் கூறினேன். "ஆகட்டும்" என்று சொல்லிக்கொண்டு இருந்தாள். ஆனால் அன்னையை அழைத்துக் கொண்டு வரவே யில்லை. இதன் காரணம் எனக்குப் பின்னால்தான் தெரிய வந்தது.

என் அன்னை நான் சிறைப் பட்டதும் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டாள். அவளுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செந்திரு கவனித்து வந்தாள். அது காரணமாக அவள் என் வீட்டிலேயே தங்கி விட்டாள்.

இந்தச் சமயத்தில் செந்திருவின் மனத்தை என் அன்னையால் புரிந்து கொள்ள முடிந்தது.




## ‘ஓவல்டின்’

### இன்றியமையாததான குடும்ப பானம்!

பொதுவாக பேசினால், ஆனந்தமான குடும்பங்கள் ஆரோக்கியமான குடும்பங்களாக உள்ளன. அளவிலும் தரத்திலும் நிசரி போஷாக்கு அவர்களுக்குப் போதும்! ஆரோக்கியத்திற்கு அவசியமான உணவுச் சத்துக்கள் சாதாரண சாப்பாட்டில் சிலசமயங்களில் இல்லை என்பதை அறிந்து பல புத்திசாலித்தனமான வீட்டுப் பெண்மணிகள், தங்கள் குடும்பத்தாருக்கு ஓவல்டின் கலந்து கொடுக்கிறார்கள்.

ருசி மிகுந்த ஓவல்டின் ஒவ்வொருவருக்கும் இழந்த சக்தியை தருவதோடு, ஆரோக்கிய சுகமான நித்திரையையும் அளிக்கிறது. முதிர்ந்த பார்லிமால்ட், சுத்தமான க்ரீம் பசும்பால், பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்ட கொக்கோ, இயற்கையான பாஸ்பேட்டுகள், வைட்டமின்கள் ஆகியவைகள் பக்குவமாகக் கலந்து தயாரிக்கப்பட்ட உணவுச்சத்து. வைட்டமின்கள் Bயும் Dயும் சேர்ந்து சிறப்பிக்கின்றன. ‘ஓவல்டின்’ வாங்குவதில் அமிதமான லாபம்-அதற்கு இணை வேறு இல்லை!

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ. (இந்தியா) லிட்.,

# ஓவல்டின்

### உலக அபிமானம் பெற்றுள்ள உணவு பானம்!




சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 வரை ரேடியோ சிலோனில் (அலை-41.72 மீட்டர்கள்) ஓவல்டின் அமெச்சூர் நேரத்தைக் கேளுங்கள்.

IV. 444

அவன் என்னைக் காதலிக்கிறான் என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது. ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த என்னைத் துணிந்து ஊர் அறியக் கல்யாணமே செய்து கொள்ளவும் செந்திரு தீர்மானித்து விட்டாள். இந்தச் சேதியை என் அன்னையிடமே செந்திரு தெரிவித்திருக்கிறாள்.

செந்திருவின் கருத்து அன்னைக்கு விளக்கமாயிருந்தது. அவள் உண்மையாக உணர்ந்ததைச் சொன்னாள். சொன்னதை நிறைவேற்றும் ஆற்றலும் அறிவும் அவளுக்கு உண்டு. அதனால் அன்னை செந்திருமீது இரக்கம் கொண்டாள்; அவளைக் கட்டி அணைத்துக் கொண்டாள்.

"என் செல்வமே! நீ மகத்தான தியாகம் செய்து விட்டாய். மனித குலத்தின் மாசாகிய சாதி வித்தியாசத்தை ஒழித்துக் கட்டி விட்டாய். உன் பாடு ரொம்பக் கஷ்டம்தான்" என்றாள்.

செந்திரு சிறு குழந்தைபோல அன்னையின்மீது சாய்ந்துகொண்டு மெதுவாகச் சிரித்தாள். அவள் முகமெல்லாம் சிவந்தது. அவள் சொன்னாள்:

"அம்மா! நான் ஒன்றும் பெரிய தியாகம் செய்து விடவில்லை. தங்கள் குமாரர் மிகப் பெரிய மேதை. அவரை அடைய நான் பாக்கியம் செய்திருக்க வேண்டும். என் அன்பு முழுவதையும் அவருக்கு அர்ப்பணம் செய்யவேண்டும் என்பதே என் ஆசை. நான் அவரை அளவுக்கு மீறிக் காதலிக்கிறேன். அவரும் அப்படித்தான். இது எனக்குத் தெரியும். ஆனால் அவர் ஒருநாளும் தம் உள்ளத்தை என்னிடம் திறந்து கூறியதில்லை. நாங்கள் சேர்ந்தே வாழ்வோம்" என்றாள்.

என் அன்னை செந்திருவைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

"உங்களுக்குக் குழந்தை பிறந்த பிறகு அதைத் தாலாட்டும் பேறு எனக்குக் கிடைத்தால் நான் பிறவிப் பயன் பெற்றவளாவேன்" என்றாள்.

அதன் பிறகு செந்திரு அன்னையுடன் சேர்ந்து என்னை ஒருமுறை பார்க்க வந்தாள்.

அன்று அவளுடன் ஏனோ எனக்கு என்ன பேசுவது என்றே தெரியவில்லை.

அதற்குப் பின் ஒவ்வொரு நாளும் எனக்கு ஒரு யுகமாகவே வளர்ந்தது.

ஆறு மாதம் முடிந்து சிறைக் கூடத்தை விட்டு வெளியில் வந்தேன்.

சிறை வாசலில் என் அன்னையும், செந்திருவும் எண்ணற்ற தோழர்களும் காத்திருந்து என் கழுத்தில் மலர் மாலை சூட்டி வரவேற்றனர்.

அடுத்த வாரத்திலேயே எனக்கும் செந்திருவுக்கும் திருப்பரங்குன்றம் முருகன் சன்னதியில் ஆடம்பரமில்லாமல் திருமணம் நடந்தது.

திருமணம் நடந்த பின் மூன்று மாதங்கள் வெகு இன்பமாகக் கழிந்தன. மூன்று மாதங்கள் முடிந்த பின் ஒரு நாள் என் அன்னை எங்கள் இருவரையும் அழைத்தாள். தன் எதிரில் சற்று நேரம் உட்காரும்படி சொன்னாள். நீங்கள் சந்தோஷமாக வாழ வேண்டும் என்றாள். "செந்திரு! என் மகனை உன்னிடம் விட்டுப் போகிறேன். பார்த்துக் கொள்" என்றாள். மயக்கமாக வருகிறது என்று என் மடிமீது சாய்ந்தாள். கண்ணை மூடி விட்டாள். செந்திருவின் கண்ணீரையும், என் கதறலையும் அன்னை கண் திறந்தே பார்க்கவில்லை.

** ** **

என் அன்னையின் மறைவுக்குப் பின் எங்கள் வாழ்க்கையில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. செந்திரு தீவிரமாகத் தேசிய இயக்கத்தில் ஈடுபட்டு உழைக்க ஆரம்பித்தாள். தான் இரண்டு மாத கர்ப்பிணி என்பதையும் மறந்து உற்சாகமாக ஏழை எளிய மக்களுக்கு வேலை செய்தாள். அவள் உற்சாகத்தை நான் மேலும் வளர்த்தேன்.

செந்திருவின் சேவையைக் கண்டு அப்போது ஆண்ட ஆங்கில சர்க்கார் பயந்தனர். மக்கள், அதிலும் ஏழை உழைப்பாளி மக்கள் தங்களைப் பற்றித் தெரிந்து கொண்டார்களானால் அவர்களை அடக்கி ஆள முடியாதே என்று பயந்தனர்.

செந்திருவுக்குத் தடை உத்தரவு பிறப்பித்தனர். அவள் எங்கள் பேட்டையை விட்டுச் செல்லக் கூடாது என்று போலீஸ் கண்காணித்தது.

"என் மக்களுக்குச் சேவை செய்வதை யார் தடுப்பது!" என்று வெளிக் கிளம்பினாள் செந்திரு.

சர்க்கார் தன் மீது போட்டிருந்த தடையை மீறினாள். பேட்டையை விட்டு வெளியே சென்றாள். சர்க்கார் செந்திருவைக் கைது செய்தனர். "இனி அப்படிச் செய்வதில்லை" என்று சொன்னால் மன்னித்து விடுவதாக நீதிபதி கூறினார்.

"தருமம் தழைக்கும், தமிழ் நாட்டில் பிறந்தவள் நான். வீரம் காத்து வெற்றிக் கொடி நாட்டிய வீரத் தமிழர் மரபில் வந்தவள் நான். மன்னிப்புக் கேட்க மாட்டேன். நீங்கள் என்னைத்தான் சிறையில் அடைக்கலாமே ஒழிய, என் எண்ணத்தை ஒரு நாளும் சிறைப்படுத்த முடியாது" என்று கர்ஜனை செய்தாள். செந்திருவின் பேச்சைக் கேட்டு நீதிமன்றமே ஸ்தம்பித்தது.

என் அருமைச் செந்திருவுக்கு ஒன்பது மாதம் தண்டனை கொடுக்கப்பட்டு விட்டது.

** ** **

மாதங்கள் ஒவ்வொன்றாக வளர்ந்தது. சிறையில் செந்திருவின் வயிற்றில் கரு வளர்ந்தது. சிறைக்கு வெளியில் நாட்டில் பஞ்சம் வளர்ந்தது.

பஞ்சம் என்றால் அப்பொழுது ஆண்ட அரசாட்சியினால் உண்டாக்கப்பட்ட பஞ்சம். ஆங்கிலேய சர்க்கார் நம்முடைய சுதந்திர உணர்ச்சியை அழித்து, நமக்குள் ஏற்றத் தாழ்வு கற்பித்து ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கும்படி செய்வதில் தங்கள் மேதையைச் செலவழித்தார்களே ஒழிய நாட்டையும், நாட்டு மக்களின் மேன்மையையும் நினைத்துப் பார்க்கவில்லை.

தமிழகத்தின் ஜீவாதாரமான உழவுத் தொழிலை வளர்ப்பதற்கு அவர்கள் சரியான திட்டம் வகுக்கவில்லை. நம் மக்களின் வாழ்வுக்கு வழி செய்யவில்லை. கிராமங்கள் சீர்திருந்த வேண்டும் என்று நினைக்கவே இல்லை. அதனால் ஆறு மேடிட்டுவிட்டது. ஏரிகள் தூர்ந்து போய் விட்டன. குளங்கள் எல்லாம் பாழாகி விட்டன. இரண்டு ஆண்டுகள் சேர்ந்தாற் போல் மழை பெய்யாது போகவே பஞ்சம் தாண்டவமாட ஆரம்பித்து விட்டது.

பச்சைப் பசேல் என்று காட்சி தரும் தமிழ் நாட்டின் பல பகுதிகள் பாலைவனம் போல் பயங்கரமாகக் காட்சி அளித்தன.

மரத்தின் இலைகளெல்லாம் உதிர்ந்து விட்டதால் மரங்கள் மொட்டையாகக் காட்சி அளித்தன. மக்கள் எலும்பும் தோலுமாக ஒரு பிடி சாதத்துக்காக எந்தவிதமான நீச் செயலையும் செய்யத் துணிந்து விட்டனர்.

எங்கள் பேட்டையிலிருந்த மக்கள் ஒவ்வொருவராக வெளிக் கிளம்பிக் கொண்டிருந்தனர். இச்சமயத்தில் எவ்வித முன் அறிவிப்பும் இல்லாமல் என் அருமைச் செந்திருவைச் சிறையிலிருந்து அனுப்பி விட்டனர் அரசாங்கத்தார்.

அழகே உருவான என் செந்திரு உருக்குலைந்தவளாக, நிறைமாதத்துடன் என் முன் வந்து நின்றாள். எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

செந்திருவை அப்படியே அணைத்துப் பிடித்துக் கொண்டு சிறு குழந்தை போல அழுதுவிட்டேன். எனக்கு அந்தச் சமயத்தில் அதைத் தவிர வேறு ஒன்றும் செய்யத் தெரியவில்லை. "என்னை மணந்து கொண்டதால் நீ என்ன பயனை அடைந்தாய்!" "சாதியை ஒழித்து விட்டதால் நீ என்ன கண்டு விட்டாய்!" என்று என்னென்னவோ கேட்டேன். வாய்விட்டு அரற்றினேன்.

செந்திரு என்னைச் சிரித்த முகத்துடன் பார்த்தாள். "அசட்டுக் கேள்விகளைக் கேட்கிறீர்களே! நான் தங்களை அடைந்ததை எண்ணி அடையும் சந்தோஷத்தை நீங்கள் உணர முடியாது." அவள் கருநீலக் கண்கள் பளபளவென்று மின்னின.

நான் செந்திருவுக்கு அவசரமாக உணவு தயாரித்தேன். தன் உடல் நிலையையும் பொருட்படுத்தாமல் அவள் என்னுடன் சமையல் வேலையில் துணை செய்தாள். நாங்கள் இருவரும் சாப்பாட்டை முடித்துக்கொண்டு சற்றுத் தூரம் நடந்து விட்டு வரலாம் என்று கிளம்பினோம்.

"நடப்பது எவ்வளவு சுகமாக இருக்கிறது. காற்றிலே பறப்பதைப் போல் அல்லவா இருக்கிறது!" என்றாள் செந்திரு.

இன்ப நினைவுகளும் அனுபவங்களும் என் மனத்திரையில் தோன்றி மறைந்தன.

நாங்கள் நடந்து சென்ற சாலை ஒரு பூந்தோட்டத்துக்குள் சென்றது. இப்பொழுது அந்தத் தோட்டத்தில் ஒன்றுமில்லை. எல்லாச் செடிகளும் காய்ந்து கருகிக் கிடந்தன. தோட்டத்தின் மத்தியில் இருந்த மண்டபத்தில் உட்கார்ந்தோம்.

திடீரென்று பெருங்காற்று அடித்தது. மழை வரும் போல இருந்தது. அது என் இதயத்துக்குள் ஏதோ ஒரு இன்பத்தை அளித்தது.

செந்திரு அருகில் இருந்த சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் தலை சற்றுச் சாய்ந்திருந்தது. ஏதோ வேதனை தாங்காமல் அவள் கைகள் துடித்துக் கொண்டிருந்தன.

"என்ன செந்திரு!" என்றேன்.

அவள் "புரியவில்லையா!" என்று கேட்டாள்.

விஷயம் என்ன என்பதை உணர்ந்து கொண்டேன். செந்திருவின் கண்கள் தெறித்து விழுந்து விடும் போலிருந்தன. அவள் கன்னங்களின் மேலே கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

"கடவுளே! கடவுளே!" என்று பல்லைக் கடித்துக் கொண்டு முனுமுனுத்தாள் செந்திரு.

செந்திருவை அப்படியே படுக்க வைத்து விட்டு மருத்துவம் பார்க்கும் பாட்டியை அழைத்து வரப் பேட்டைக்கு ஓடினேன். தலைதெறிக்க ஓடினேன். நல்ல வேளை பாட்டி இருந்தாள். அவளை அழைத்துக் கொண்டு ஓடி வந்தேன்.

மருத்துவம் பார்க்கும் பாட்டி வருவதற்குள் நிலைமை மோசமாகிச் செந்திரு மூர்ச்சையானாள்.

பாட்டி எங்கள்மீது கொண்டுள்ள அன்பால் தம் அனுபவம் அத்தனையும் உபயோகப்படுத்திச் செந்திருவுக்கு உதவி செய்தாள்.

என் கண்களில் கண்ணீர் வழிய ஆரம்பித்து விட்டது! "செந்திருவைக் காப்பாற்று, கடவுளே!" என்று பிரார்த்தித்தேன்.

என் பிரார்த்தனைக்குப் பதில் தருவதுபோல் 'குவா,' 'குவா' என்று அழுதினுமினிய குழந்தையின் மோகனக் குரல் கேட்டது.

செந்திருவுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து விட்டுப் பாட்டி குழந்தையைக் கொண்டு வந்து என் கையில் கொடுத்தாள். "செந்திரு கூப்பிடுகிறாள்!" என்றாள். ஆண் குழந்தை, என் கையிலிருந்து வழுக்கி விழுந்துவிடும்போல அதன் உடல் அவ்வளவு வழுவழுப்பா யிருந்தது. குழந்தையை மிருந்த ஜாக்கிரதையாக எடுத்துக் கொண்டு செந்திருவிடம் சென்றேன்.

செந்திரு புன்முறுவல் பூத்தாள். அவள் கண்களில் புது ஒளி வீசுவதைக் கண்டேன்.

குழந்தை "குவா, குவா" என்று காலை உதைத்துக் கொண்டு கத்த ஆரம்பித்து விட்டது.

நடுங்கும் கைகளால் குழந்தையை வாங்கிப் பால் கொடுத்தாள் செந்திரு. "கடவுளே! என் கணவரையும் குழந்தையையும் காப்பாற்று" என்றாள்.

திடீரென்று இலேசான குரலில் கதறிவிட்டாள் செந்திரு. குழந்தையை என்னிடம் எடுத்துக் கொடுத்தாள். நன்றியும் மகிழ்வும் ததும்பும் இளநகை அவள் முகத்திலே மலர்ந்தது. தன் கைகளைத் தூக்கிக் கடவுளுக்கு வணக்கம் செலுத்தினாள்.

அவள் கண்களில் மின்னிய ஒளி மீண்டும் மங்கியது. முகத்தில் சோகம் குடிகொண்டது. செந்திரு என்னை விட்டுப் போய் விட்டாள். என்னைக் கவனித்துக் கொள்ளும்படி கூறிய என் அன்னையின் வாக்கை மறந்து நான் கவனித்துப் பாதுகாக்க என்னிடம் ஒரு பச்சிளம் பாலகனைக் கொடுத்து விட்டுப் போய் விட்டாள்.

இரண்டு ஆண்டுகளாகப் பெய்யாதிருந்த மழை எங்கிருந்தோ வந்து கொட்டு கொட்டென்று கொட்டத் தொடங்கி விட்டது. "குழந்தை பிறந்த வேளை ஊருக்கு மழை பெய்கிறது" என்று என்னைச் சேர்ந்தவர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்க என் செந்திரு இருக்கவில்லை. புதுமைப் பெண் செந்திரு புதுமைப் பெண்ணாகவே மறைந்து விட்டாள்.

** ** **

இதை யெல்லாம் நினைத்துப் பார்த்தபோது தான் உணர்ச்சி மிகுதியால் என் மகனைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட ஆரம்பித்து விட்டேன்.

"அப்பா! ஏன் அழுகிறீங்க!" என்றான் குழந்தை.

"ஒன்றுமில்லேடா கண்ணு!" என்று கண்ணைத் துடைத்து விட்டுக் கொண்டேன்.

"சுதந்திரம் பெறுவதற்காக எத்தனையோ பேர் தியாகங்கள் செய்தார்கள். அவர்களில் பலர் சுதந்திரத்தைப் பார்த்து அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லை. ஆனால் நீங்கள் அப்படி இல்லையே. சுதந்திர நாட்டில் வாழ்வதற்கும் பாக்கியம் செய்திருக்கிறீர்கள். செந்திரு அளித்த செல்வக் குமாரனும் உங்கள் முன் இருக்கிறான். இதை எண்ணி மகிழ்வதைவிட எதை எதையோ எண்ணிக் கண்ணீர் விடுகிறீர்களே!" என்றான் சாத்தப்பன்.

சற்று நேரம் கழித்து மீண்டும் சொன்னான்: "இப்பொழுது உங்கள் கடமை செந்திரு விட்டுச் சென்ற குழந்தையைப் பாதுகாத்து வளர்க்க வேண்டும். அதே போல செந்திரு போன்றவர்களின் தியாகத்தால் நாம் பெற்ற சுதந்திரத்தையும் பேணி வளர்க்க வேண்டும்" என்றான்.

"நீ சொல்வதும் உண்மைதான்" என்றேன்.

"வந்தேமாதரம் என்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்"

என்ற கீதத்தை யாரோ பாடிக்கொண்டிருந்தனர். அது பொங்கிப் பெருகி வந்து எங்களை அப்படியே தழுவிக் கொண்டது. என்னுடைய குமாரன் அவனையும் மீறி "வந்தேமாதரம் என்போம்!" என்றான். அவன் குரல் என் மனைவி செந்திருவின் குரல் போலவே இருந்தது! அவன் களங்கமற்ற முகம் செந்திருவின் திருமுகத்தை எனக்கு நினைவூட்டியது. அப்படியே அவனைத் தூக்கிக் கொண்டேன். "வந்தேமாதரம் என்போம்!" என்று என்னை மறந்து கூத்தாடினேன்.

# வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

# மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!
✓ ஒளிவீசும் பற்கள்!
✓ சொத்தை குறையும்!




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள் :

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ்கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல்நுனி நோக்கி தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

TPG/14

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 3. ஆஸ்துமாவுக்கு ஆசனம்

ஆசனம் செய்ய நல்ல காற்றோட்டமான இடமாய் இருக்க வேண்டும். கதவுகளையும், ஜன்னல்களையும் அடைத்து விட்டுச் செய்யக் கூடாது. அறை, கூடம் இவைகளில் செய்யலாம். மொட்டை மாடியிலும் செய்யலாம். ஆனால் ஆசனம் செய்யும்போது வெய்யில் நேராக உடம்பில் படும்படியாக இருத்தல் கூடாது. பனியில், திறந்த வெளியில் செய்யக் கூடாது.

ஆசனம் பழகப் பருத்தியிலான ஜமக்காளம் அல்லது கனத்த விரிப்பு இவைகள்தான் நல்லது. மெத்தை, கம்பளி, பாய் முதலியன கூடாது. ஆசனம் செய்வதற்கு ஏற்ற நேரம் காலைதான். காலையில் செய்ய முடியாதவர்கள் மாலையில் செய்யலாம். சௌகரியமிருந்தால் காலை மாலை இரு வேளைகளிலும் செய்யலாம். ஆஸ்துமா வெகு சீக்கிரம் குணமாகும்.

காலையில் மலஜலம் கழித்துப் பல் தேய்த்த பின் ஆசனம் செய்ய வேண்டும். காலையில் அந்தப் பழக்கமில்லாதவர்கள் மலம் கழிக்க வேண்டிய உணர்ச்சியில்லாவிட்டாலும், காலையில் எழுந்ததும் மலம் கழிக்க வேண்டிச் சிறிது நேரம் அப்படியே உட்கார்ந்து, மலம் கழிக்க வேண்டுமென்று மனத்தினால் நினைத்து வந்தால் சில நாட்களில் உட்கார்ந்ததும் தினப்படி இந்தப் பழக்கம் உண்டாகி விடும். அவ்வாறு பழக்கம் உண்டாகும் வரை ஆசனங்களைச் செய்யாமல் நிறுத்த வேண்டியதில்லை. மலம் கழியாவிட்டாலும் ஆசனம் செய்யலாம். அப்படிச் செய்யும் போது சிலருக்கு இடையில் வெளிக்குப் போக வேண்டும்போல் உணர்ச்சி உண்டாகும். அப்பொழுது வெளியே போய்விட்டு வந்து மறுபடியும் ஆசனத்தை விட்ட இடத்திலிருந்து தொடங்கிச் செய்யலாம். இவ்வாறு சில நாள் செய்துகொண்டு வந்தால் ஆசனம் துவங்குவதற்கு முந்தியே இந்த ஆரோக்கியப் பழக்கம் ஏற்பட்டு விடும்.

இரவு படுக்கு முன்பும், பல் துலக்கி ஒரு டம்ளர் தண்ணீர் அருந்தினால் மலம் சுத்தியாக உதவும்.

புதிதாய் ஆசனங்களைத் தொடங்குகிறவர்கள், மூன்று நான்கு தடவை மலசுத்தி ஆகும் வண்ணம் பேதிக்குச் சாப்பிடுவது நல்லது.

ஆசனங்கள் தினசரி செய்ய வேண்டியவே. எப்படி உணவு, உறக்கம் அவசியமோ அப்படியே ஆஸ்துமாக்காரர்கள் ஆசனமும் தினசரி அவசியம் செய்ய வேண்டும்.

ஆசனம் செய்யும்போது வாய் மூடியே இருக்க வேண்டும். வாயைத் திறந்து வாயின் வழியே சுவாசிக்கக் கூடாது.

ஆசனம் செய்து முடித்த இருபது அல்லது முப்பது நிமிஷங்களுக்குப் பின் குளிக்கலாம். அதன்பின் சாப்பிடலாம். ஆசனம் செய்து முடித்தவுடன் குளிக்கவோ சாப்பிடவோ கூடாது. ஆசனம் செய்த பின் மூச்சுப் பயிற்சி செய்யலாம். ஆசனம் செய்வதற்கு முன்பும் செய்யலாம். மூச்சுப் பயிற்சி எத்தனை தடவை செய்தாலும் நன்மை தான். பகல் சாப்பிடுவதற்கு முன்பு செய்யலாம். மாலையில் செய்யலாம். இரவு படுக்கப் போவதற்கு முன்பும் செய்து வரலாம்.

ஆஸ்துமாக்காரர்களுக்கு அநேகமாய் குளிர்ந்த ஜலம் குளிக்கப் பிடிக்காது. வெந்நீரில்தான் குளிப்பார்கள். ஆசனப் பயிற்சியும், பிராணாயாமப் பயிற்சியும் தீவிரமான பின், அதாவது இரண்டு மூன்று மாதங்களுக்குப் பின் குளிக்கும் தண்ணீரின் சூட்டைச் சிறது சிறிதாகக் குறைத்து வந்து பின் குளிர்ந்த ஜலமே குளிக்கத் தொடங்கலாம்.

ஒரு நாளைக்குக் காலை, மத்தியானம், இரவு ஆகாரமே நல்லது. மாலையில் அவசியமானால் பழங்கள் சாப்பிடலாம். மத்தியானம் ஒரு வேளை உணவு பல காய்கறிகள், கீரை வகைகளுடனும் காலை மாலை இலேசான ஆகாரமாயும் சாப்பிட வேண்டும். வளரும் வயதினர்கள் மாலையில் இலேசான சிற்றுண்டி சாப்பிடலாம்.

மாலையில் ஆசனம் செய்ய வேண்டுமானால், தான் சாப்பிட்ட ஆகாரம் கடினமானதாய் இருந்தால் ஆறு மணி நேரம் பொறுத்தும் இலேசான ஆகாரமாயிருந்தால் நாலு மணி நேரம் பொறுத்தும் செய்யலாம். மொத்தத்தில் வயிறு காலியாக இருக்க வேண்டியது.

ஒரு நாளைக்கு மூன்று வேளை ஆகாரங்களைத் தவிர, மற்றெந்த காரணங்களைக் கொண்டும் இடையில் சிற்றுண்டியோ, பான வகைகளோ சாப்பிடக் கூடாது.

இடையில் தாகத்துக்கு அருந்த சுத்த ஜலத்தைக் காய்ச்சி, ஆற்றி, வடிகட்டி வைத்துக் கொண்டு சாப்பிடுவதே நல்லது. காப்பி, டீ, சோடா, கலர், கிரஷ் வகைகள், பால், மற்றப் பானங்கள் முதலியவை அருந்தக் கூடாது. புகையிலை, பீடி, சிகரெட் சுருட்டு, பொடி, மதுபான வகைகள், கஞ்சா, அபின் போன்றவைகளை உபயோகிக்கக் கூடாது.

கூடுமானவரை பால் சாப்பிடுவது நல்லது. பால் பிடிக்கா விட்டால் சுக்கு தனியாகத் தட்டிப் போட்டு, பாதி பனைவெல்லம், பாதி நல்ல வெல்லம் போட்டுக் காப்பி செய்து அருந்தலாம். கேழ்வரகை நன்கு கறுக்க வறுத்துப் பொடி செய்து காப்பி போடலாம். சுக்கு தனியா சீரகம் நன்னாரி வேர் இவைகளையும் இடித்து வைத்துக் கொண்டு காப்பி போடலாம்.

அதிக காரம் எதிலுமே சேர்க்கக் கூடாது. சாம்பார், ரசம், குழம்பு இவைகளில் மட்டும் இலேசாய்ச் சேர்க்கலாம். கூட்டுக்கறி, பொரியல், பச்சடி, அவியல் முதலிய மற்ற எந்தப் பதார்த்தங்களிலும் காரம் கூடாது.

உடம்புக்கு ஒத்துக் கொண்டால் புளிக்குப் பதில் எலுமிச்சை சேர்க்கலாம். காய்கறி கீரை வகைகள் நிறையச் சாப்பிட வேண்டும். இவைகளை நறுக்குவதற்கு முன் அலம்பிக் கொள்ளுவது நல்லது. சிறு தீயில் வேக வைக்க வேண்டும். வேகுவதற்கு எவ்வளவு தண்ணீர் வேண்டுமோ அவ்வளவு அளவாய் விட வேண்டும். பாத்திரத்தை மூடி வைத்து வேக வைப்பது நல்லது. ஜலம் கொதித்த பின் உப்பு சிறிது போட்டுக் காய்கறிகளைப் போடுவது நல்லது. கீரைக்கு ஜலம் விட வேண்டியதிருக்காது. அவசியமானால் கொஞ்சம் வெந்நீர் விடலாம். காய்கறி, கீரைச் சத்து விலகாமல் இருக்க எலுமிச்சை ரசம் விட்டு வேக



1949-ம் ஆண்டு, ஏப்ரல் மாதம், லண்டனில் நடைபெற்ற காமன்வெல்த் பிரதமர் மகாநாட்டுக்கு நமது பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு டில்லியிலிருந்து புறப்பட்ட பொழுது, கவர்னர் ஜெனரல் ராஜாஜியும், உதவிப் பிரதம மந்திரி ஸர்தார் படேலும் வழியனுப்புகிறார்கள்.

வைக்கலாம். அதிக நேரம் வேக வைக்கக் கூடாது. அப்படியும் ஜலம் அடியில் தங்கினால் அதைக் கீழே கொட்டி விடக் கூடாது. அதில் தான் நிறைய சத்துக்கள் இருக்கும். அந்த ஜலத்தைச் சாம்பார், ரசம், குழம்பு இவைகளில் சேர்த்துக் கொள்ளலாம்.

சாதம் சிறிதளவும், காய்கறி கீரை வகைகள் அதிகமாயும் சாப்பிட வேண்டும்.

அரிசி முழு தவிட்டுடன் கூடியதாயும், கஞ்சி வடிக்காமல் ஆவியில் குக்கரில் சமைப்பது போல் சமைக்க வேண்டும். இட்டிலிப் பானைக்குள் பாத்திரம் வைத்து அதில் அரிசியும் ஜலமும் விட்டு வேக வைத்தால் குக்கரில் சமைப்பதுபோல் ஆகிவிடும். மூடியுள்ள எந்தப் பாத்திரத்திலும் குக்கரைப்போலச் சமைக்கலாம். அரிசி பல தடவைகள் ஜலம் விட்டுக் கழுவக் கூடாது. அரிசியை ஊற வைத்து ஜலம் கொட்டக் கூடாது. அரிசியில் ஜலம் விட்டதும் வேகமாய்க் கழுவி ஜலத்தைக் கொட்டி விடலாம். இதை ஒரு தடவை மட்டும் செய்தால் போதும்.

பசுவின் பால், தயிர், மோர், வெண்ணெய் நல்லது. பசுவின் நெய் கிடைப்பது கஷ்டம். அதனால் எருமை நெய் உபயோகிக்கலாம். பசுவின் நெய் கிடைத்து உபயோகித்தால் மிகவும் நல்லது.

பழ வகைகள் ஆஸ்துமாக்காரர்களுக்கு எது பிடிக்குமோ அவற்றைச் சேர்க்கலாம்.

வாரத்துக்கு ஒருவேளை ஆகாரம் எதுவும் உட்கொள்ளாமல் பட்டினி போடுவது நல்லது. ஒரு நாள் முழுக்க இருக்க முடிந்தவர்கள் இருக்கலாம். அல்லது பழங்கள் பிடித்தவைகளைச் சாப்பிடலாம்.

ஆசனம் செய்வதற்கு எந்தக் காரணத்தினாலாவது இடையில் சில நாட்கள் விட்டுப் போனால் மறுபடியும் செய்யலாமோ கூடாதோ என்று தயங்க வேண்டாம். மறுபடியும் தொடங்கிச் செய்யலாம். இடையில் சில நாட்கள் விட்டு விட்ட காரணத்தினால் சில ஆசனங்கள் மீண்டும் தொடங்கிச் செய்யும்போது முன் போல் சரியாய்ச் செய்ய வராமலும் இருக்கலாம். ஆனால் செய்யச் செய்யச் சில நாட்களில் சரியாக வந்துவிடும். முக்கியமாய், ஆஸ்துமாக் காரர்கள் விடாமல் செய்வதே நல்லது. அப்படியும் விட்டு விட்டால் அதிக நாள் விட்டு விடாமல் சீக்கிரம் செய்யவே பார்க்க வேண்டும்.

ஆஸ்துமாக் காரர்களுக்கு ஏற்கெனவே ஏதாவது ஆபரேஷன் செய்திருந்தால் ஆசன நிபுணர்களின் ஆலோசனை பேரில் தான் ஆசன சிகிச்சை தொடங்க வேண்டும். அவ்வாறே இரத்த அமுக்கமுள்ளவர்களும், இருதயத்தில் கோளாறுள்ளவர்களும் ஆசன நிபுணர்களின் யோசனைப்படி செய்ய வேண்டும். ஆஸ்துமாக்காரர்களுக்கு எது பிடிக்கவில்லையோ அதை அவர்கள் இன்னும் சில நாட்கள் சாப்பிடக் கூடாது. ஆசனம் துவங்கி அதன் வீரியம் உடலில் ஏற்பட்டபின், முன் எது எது சாப்பிட்டால் அவர்களுக்குப் பிடிக்காதோ அதைப் பின் சாப்பிட்டாலும் ஒன்றும் செய்யாது.

எண்ணெய் ஸ்நானம் வாரம் ஒரு தடவை செய்வது நல்லது. பிடிக்காதவர்கள் ஆசனம் துவங்கின மூன்று மாதங்களுக்குப் பின் செய்தால் அவர்கள் அதனால் பாதிக்கப்பட மாட்டார்கள்.

குடும்பத்தில் ஈடுபடுபவர்களாய் இருந்தால், அவர்கள் எவ்வளவு தூரம் ஈடுபாட்டைக் குறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவுக்கும் நல்லது. முற்றிலும் பிரம்மச்சரியம் அனுசரித்தால் இன்னமும் சீக்கிரம் குணமாகும். குறைந்தது ஆறு மாதங்களுக்காவது பத்தியமாய் இருத்தல் வேண்டும். அப்படி முடியாதவர்கள் குறைந்த அளவுடன் கடப்பதில் குற்றமில்லை.

ஆஸ்துமாக்காரர்கள் ஆசனம் செய்வதற்கென்று அவரவர்கள் வேலைகளுக்குப் போகாமல் இருக்கவோ வேலை செய்யாமல் இருக்கவோ வேண்டியதில்லை. ஆசனங்கள் எல்லாம் ஒரு மணி நேரத்துக்குள் முடித்துவிட வேண்டியது. காலையில் செய்து முடித்து விட்டால் வழக்கப்படி அவரவர்களின் வேலைகளைக் கவனிக்கலாம். எந்த வேலையும் ஆசனத்துக்குத் தடையில்லை.

படுத்த படுக்கையாய் இருக்கக் கூடிய ஆஸ்துமாக்காரர்களின் நிலை வேறு. அவர்களுக்கான ஆசனங்கள், பிராணாயாமம் சொல்லும்போது விரிவாக விவரிப்போம். அவர்கள் ஓய்வு எடுத்துக் கொண்டுதானே இருக்கிறார்கள்.

எனவே, எந்த நிலையிலுள்ள ஆஸ்துமாக்காரர்களும் மேற்படி பத்தியங்களை அனுசரித்துப் பூரண குணமடையலாம். (தொடரும்)




பாரத நாட்டின் விழிப்புக்கு மூல காரணமாக இருந்த பெரியார்களில் சுவாமி விவேகானந்தர் முக்கியமானவர். அந்தப் பெரியாரின் வாழ்க்கையிலிருந்து நாலு முக்கிய சம்பவங்களைச் சித்திரக் காட்சிகளாகத் தருகிறார் நமது ஓவியர் சந்திரா.

ஒரு சமயம் சுவாமி விவேகானந்தர் இரண்டு நாட்கள் உணவின்றிப் பட்டினியோடு இருக்கும்படி நேரிட்டது. ரயில்வே ஸ்டேஷனில் உள்ள தங்கு மண்டபம் ஒன்றில் அப்பொழுது இருந்தார். அங்கிருந்த வணிகர் ஒருவர் ''நான் கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதிக்கிறேன். பூரியும் லட்டும் சாப்பிடுகிறேன். நீர் உலகைத் துறந்தவர். ஒடுங்கிய வயிற்றுடன் இருக்கிறீர்'' என்று பரிகசித்தார். அந்த வேளையில் முன்பின் அறிமுகமில்லாத மிட்டாய்க் கடைக்காரர் ஒருவர், பூரி, மிட்டாய் முதலியவைகளுடன் வந்து, ''சுவாமி! மத்தியானம் சற்றுக் கண்ணுறங்கினேன். ஸ்ரீ ராமபிரான் கனவில் தோன்றித் தங்களுக்கு அமுது படைக்க உத்தரவிட்டார். சாப்பிட வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். இராம பிரானின் இந்தக் கருணையை நினைந்து நினைந்து வியந்தார் விவேகானந்தர்.



ஹிமாலயத்தில் தவம் செய்து வந்த முனிவர் ஒருவரை விவேகானந்தர் ஒரு முறை சந்தித்தார். ''தங்கள் பூர்வாசிரமம் யாதோ?'' என்று கேட்டார்.

''காஜிப்பூர் என்ற ஊரில் பாவ் ஹாரி பாபா என்ற யோகீச்வரர் தெரியும் அல்லவா? அவருக்குப் பக்த கோடிகள் கொண்டு சமர்ப்பித்த வெள்ளிப் பாத்திரங்களை யெல்லாம் ஒரு நாள் அவர் யோகத்தில் இருந்த சமயம், ஒரு திருடன் மூட்டை கட்டி எடுத்துக் கொண்டு கிளம்பியபோது, மூட்டை தவறி விழுந்து விட்டது. அந்தச் சத்தம் கேட்டு யோகீச்வரர் நிஷ்டை கலைந்து கண் விழித்தார். திருடன் பதறிப்போய் மூட்டையை அங்கேயே விட்டு விட்டு ஓடினான். யோகீச்வரர் என்ன செய்தார்? திருடன் போட்டு விட்டுப் போன மூட்டையைத் தாம் தமது கையில் எடுத்தார். புறப்பட்டார், திருடனைப் பின் தொடர்ந்து! திருடன் ஓடினான். யோகீச்வரரும் ஓடினார். கடைசியில் பிடிபட்டு விட்டான் திருடன். 'அப்பா! இப்படி நீ ஓடலாமா? இந்த மூட்டை உனக்குச் சேரவேண்டியதாயிற்றே. இதை விட்டு விட்டு ஓடுகிறாயே!'' என்று சொல்லி அந்த மூட்டையை அவனிடம் நீட்டினார் யோகி. அவ்வளவுதான்! அந்த ஒரு கணத்திலேயே திருடனுடைய மனத்தைப் போர்த்தி யிருந்த அஞ்ஞானத் திரை விலகிற்று. உள்ளத்தினுள்ளே கிடந்த ஆன்மப் பண்பைக் கிளறி விட்டது அந்த ஞானியின் வாக்கு.

''சுவாமி! அந்தப் பழைய திருடன்தான் அடியேன்!'' என்றார் முனிவர்.



1893-ம் ஆண்டு அமெரிக்காவில் நடந்த சர்வமத மகாசபைக்கு இந்து மதத்தின் பிரதிநிதியாக ஸ்ரீ விவேகானந்தர் சென்றிருந்தார். அதுவரையில் ஸ்ரீ விவேகானந்தர் இது போன்ற பெரிய சபையில் பேசியதில்லை. மிகுந்த அடக்கத்துடன் சென்று தமது கைகளைக் கட்டிக் கொண்டு மேடை மீது நின்றார். கம்பீரமாகப் பேசினார். "அமெரிக்க நாட்டுச் சகோதர சகோதரிகளே!" என்று ஆரம்பித்தார். உடனே வியப்பினால் சபையோரின் இடி முழக்கம் போன்ற கரகோஷம் எழுந்தது. காரணம் விவேகானந்தருக்கு முன் பேசியவர் அனைவரும் "சீமான்களே! சீமாட்டிகளே!" என்றுதான் பேச்சை ஆரம்பித்து வந்தனர். ஆனால் உலகம் அனைத்தையும் ஒரு குடும்பமாகப் பாவித்த இந்துமதப் பிரதிநிதியான ஸ்ரீ விவேகானந்தர் "சகோதரர்களே, சகோதரிகளே!" என்று ஆரம்பித்தது ஒரு மகத்தான மாறுதலாக இருந்து சபையோரின் உள்ளங்களைக் கவர்ந்தது!

'கொலம்பியன் ஹால்' என்ற மண்டபத்தில் கூடிய சர்வமத மகாசபையின் உயர்ந்த நோக்கத்தை நிறைவேற்றி வைத்தார் ஸ்ரீ விவேகானந்தர். அவருடைய அன்பும் பண்பும் நிரம்பிய சொற்பொழிவின் மூலம் அமெரிக்க நாட்டையே வென்று விட்டார். அந்த ஒரே நாளில் விவேகானந்தரின் புகழ் உலகம் முழுவதும் பரவி விட்டது!



அமெரிக்காவில் நடந்த சர்வ மத மகாசபைக்கு விவேகானந்தரை அனுப்பி இந்தியாவின் புகழையும், இந்து மதத்தின் சிறப்பையும் உலகறியச் செய்த பெருமை தமிழ் நாட்டுக்கு உரியது. ஸ்ரீ விவேகானந்தர் சென்னைக்கு வந்திருந்த போது சென்னை வாசிகளில் பலரின் வேண்டுகோளுக்கு இணங்கத்தான் சுவாமிகள் அமெரிக்காவுக்குச் செல்ல ஒப்புக் கொண்டார். இந்துக்கள் கப்பல் பிரயாணம் செய்யலாகாது, ஆங்கிலேயர்களுடன் பழகக் கூடாது என்ற பண்டைக்கால ஆசாரத்தை மாற்றி இந்துக்களின் வாழ்வு முறையை உயர்த்தினார் ஸ்ரீ விவேகானந்தர். சர்வதேச மகாசபையில் கலந்து கொண்டு இலங்கை வழியாக இந்தியா திரும்பினார் விவேகானந்தர். அப்பொழுது மதுரையில் சுவாமிகள் மூன்று தினங்கள் தங்கி இருந்து தமிழ்ப் பெருமக்களின் அன்பில் மூழ்கித் திளைத்தார்.

# ஏழுபது ஆண்டுகளில் ஏழு காங்கிரஸ்



ரா. நா.

எழுபது ஆண்டுகளில் இதுவரையில் மொத்தம் ஐம்பத்தொன்பது காங்கிரஸ் மகா சபைக் கூட்டங்கள் நடந்திருக்கின்றன.

இருபத்தி ஏழு வருஷங்களுக்குப் பிறகு இந்த ஆண்டில் மீண்டும் அறுபதாவது காங்கிரஸ் மகாசபை சென்னையில் கூடுகிறது. விசேஷ காங்கிரஸ்களை நீக்கி விட்டுப் பார்த்தால், கல்கத்தாவுக்கு அடுத்தபடி சென்னையிலேயே அதிகப்படியாகக் காங்கிரஸ் மகா சபைக் கூட்டங்கள் நடந்திருக்கின்றன என்பதை அறியலாம். இதுவரை ஏழு தடவை காங்கிரஸை நடத்தும் பாக்கியமும் பொறுப்பும் சென்னைக்குக் கிடைத்திருக்கின்றன.

காங்கிரஸ் மகாசபைக்கு விதை விதைத்து வளர்த்த பெருமை சென்னைக்கே அதிகம் உண்டு. ஏனெனில் முதல் காங்கிரஸில் முதல் தீர்மானத்தைப் பிரேரேபித்தவர், இந்த ராஜ்யத்தில் தேசியத்தை வளர்த்த 'சுதேசமித்திரன்', 'ஹிந்து' பத்திரிகைகளின் ஸ்தாபகரான ஜி. சுப்பிரமணிய அய்யர் ஆவார்.

மேலும் காங்கிரஸுக்கு முன்பே சென்னையில் மகா ஜன சபை எனும் அரசியல் ஸ்தாபனம் தொடங்கி, அதன் தலைவராயிருந்த பி. ரங்கய்ய நாயுடு, கீர்த்தி பெற்ற நீதிபதி மணி அய்யர் முதலியோர் முதல் காங்கிரஸுக்கே விஜயம் செய்து அந்த ஸ்தாபனத்துக்கு அடிகோலினர்.

## நார்ட்டனின் கர்ஜனை

மூன்றாவது காங்கிரஸ் 1887-ம் வருஷம் சென்னையில் கூடியது. அதற்கு ஜனாப் பத்ருதீன் தயாப்ஜி எனும் பம்பாய் முஸ்லிம் பிரமுகர் தலைமை வகித்தார். ராஜா ஸர் டி. மாதவ ராவ் வரவேற்புக் கழகத் தலைவராயிருந்தார். இந்தக் காங்கிரஸ் நடந்த போதுதான் அகில இந்தியப் புகழ் பெற்ற ஆங்கில பாரிஸ்டர் ஏர்ட்லி நார்ட்டன் அந்த ஸ்தாபனத்தில் சேர்ந்தார். இப்படி இவர் சேர்ந்ததற்காக மற்ற ஆங்கிலேயர்கள் இவரை 'ராஜத் துரோகி' என்று கேலி செய்தனர். அந்த அபாண்டத்துக்கு நார்ட்டன் பின் வருமாறு பதில் அளித்தார்:

"தீமையை எதிர்த்து எழுவது ராஜத் துவேஷமானால், — தங்களுடைய நாட்டின் நிர்வாகத்திலும்' மற்ற விவகாரங்களிலும் தங்களுக்கு நேர்மையான பங்கு கிடைக்க வேண்டும் என்று 'வற்புறுத்துவது ராஜத் துவேஷமானால்,—வகுப்பு ஆதிக்கத்தை எதிர்த்தும், அடக்குமுறை ஆட்சி முறையை எதிர்த்தும், அநீதிக்கு எதிராகப் போராடுவதும், தண்டிக்கப்படுமுன் விசாரணை நடத்தவேண்டும் என வற்புறுத்துவதும், தனி நபர் சுதந்திரத்தை ஆதரிப்பதும், நிதானமான முற்போக்கு வேண்டுமெனக் கோருவதும் — இவையெல்லாம் ராஜத்துவேஷமானால், நான் ராஜத் துவேஷி என அழைக்கப்படுவதைப் பற்றி மகிழ்ச்சியடைகிறேன். அது மட்டுமல்ல ; இவ்வளவு புகழும் பெயரும் பெற்ற பெரியார்களில் ஒருவராக என்னை மதிப்பது பற்றியும் பெருமையடைகின்றேன்."

இந்தக் காங்கிரஸுக்கு 607 பிரதிநிதிகள் வரையில் விஜயம் செய்திருந்தனர்.

ஸ்ரீ பத்ருதீன் தயாப்ஜியின் தலைமைப் பிரசங்கத்தில் முஸ்லிம்களும் காங்கிரஸில் சேர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். "ஆங்கில அரசாட்சி நமது நம்பிக்கையை இழந்து விடும் அளவுக்கு மோசமானது. இது தான் முஸ்லிம் தலைவர்களின் கருத்தும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமே இல்லை" என்று அடித்துக் கூறினார்.




ஸ்ரீ பாலகங்காதர திலகர்

பிரபலஸ்தர்கள் சேர்ந்து காங்கிரசைப் பலப்படுத்துவதைத் தடுப்பதற்காக அக்காலத்திய அரசாங்கத்தார் சிலருக்குப் பெரும் பதவி கொடுத்துக் காங்கிரஸிலிருந்து விலகச் செய்தனர். இவ்வகையில் பத்ருதீன் தயாப்ஜிக்குப் பம்பாய் உயர்தர நீதி மன்றத்தில் பதவியளித்தனர்.

ஆனால் யார் போனாலும் யார் இருந்தாலும் காங்கிரஸ் ரதம் மாத்திரம்

தடையின்றிப் போய்க் கொண்டே தானிருந்தது. தயாப்ஜியும் பதவியால் மயங்கி விடவில்லை. 1904-ல் பதவியிலிருந்து விலகியதும் மீண்டும் காங்கிரஸில் சேர்ந்து கொண்டார்.

இங்கே மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட வேண்டும். முதல் காங்கிரஸ் தலைவர் டபிள்யூ. ஸி. பானர்ஜி எனும் கிறிஸ்தவர். இரண்டாவது காங்கிரஸ் தலைவர் தாதாபாய் நௌரோஜி எனும் பார்ஸி. மூன்றாவது காங்கிரஸ் தலைவர் ஒரு முஸ்லிம்.

## வெளி நாட்டினரின் தொண்டு

மீண்டும் 1894-ம் வருஷம் சென்னையில் பத்தாவது காங்கிரஸ் நடந்தது. பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ வெப் அதற்குத் தலைமை வகித்தார். இவர் பிறவியில் ஐரிஷ்காரர். காங்கிரஸை ஆரம்பித்தவர் ஏ. ஓ. ஹியூம் என்பவர் என்பதையும், அவருடைய முயற்சிக்கு அக்காலத்திய ராஜப் பிரதிநிதி டபரின் பிரபு ஆசி கூறினர் என்பதையும், காங்கிரஸை ஸர் ஹென்ரி காட்டன், ஸர் வில்லியம் வெடர்பேர்ன் என்பவர்கள் வளர்த்தார்கள் என்பதையும் அறிந்தால் காங்கிரஸுக்கு ஒரு வெள்ளையர் தலைமை வகித்தார் எனும் விஷயத்தில் ஆச்சரியம் கொள்ள மாட்டோம். வெப் என்பவரைப் பற்றி வில்லியம் வெட்டர்பர்ன் எழுதி யிருப்பதைப் பாருங்கள் :

"இவர் காங்கிரஸுக்கு நல்ல சேவை செய்திருக்கிறார். இந்தியாவுக்கு பிரிட்டிஷாரின் நல்லெண்ணத் தூதராக விஜயம் செய்திருக்கிறார். இவர் ஒரு சமாதானப் புறா போன்றவர். இவருடைய அறிவு நிறைந்த இன்மொழிகளைக் கேட்டவர்கள் இவர் சமாதான நோக்கத்துடன் வந்திருக்கிறார் என்பதை அறிந்து கொள்வார்கள்."

அவருடைய தலைமைப் பிரசங்கத்திலிருந்து ஒரு பகுதியை இங்கு தருகிறேன்.

"அடிமைத்தனத்தை எதிர்த்துப் போராடும் சூழ்நிலையில் நான் பிறந்தேன். உலகெங்கும் தனி நபர் சுதந்திரம் வேண்டும் எனும் இயக்கத்தின் நண்பன் நான். கொடுங்கோன்மையையும் அடக்கு முறையையும் நான் எதிர்க்கிறேன். சீர்திருத்தத்துக்கும், சட்டபூர்வமான சுதந்திரத்துக்கும் நாம் பாடுபட வேண்டுமானால் அந்த இயக்கத்தில் ஈடுபடுபவர்கள் நற்குணம் படைத்தவர்களாகவும் நல்ல பயிற்சி பெற்றவர்களாகவும் இருப்பதுடன் நமக்குள்ள உரிமைகளைப் புத்திசாலித்தனமாக உபயோகிக்கும் ஆற்றலுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும்... நமது அரசியல் சூழ்நிலையில் பேராசைக்கும் பேய்க் குணத்துக்கும் இடமிருக்கலாகாது."

இந்தக் காங்கிரஸில் நிறைவேறிய தீர்மானங்களில் குறிப்பிடத் தக்கது, உயர்தர சர்க்கார் பதவிகள் வகிப்பதில் இந்தியர்களுக்குள்ள தடைகளை அகற்றவேண்டும் என்பதே.

## அடிகள் ஆரம்பித்த போர்

சென்னையில் கூடிய மூன்றாவது காங்கிரஸ் 1898-ல் நடந்த பதினாலாவது காங்கிரஸாகும். இதற்குத் தலைமை வகித்தவர் ஆனந்தமோகன் போஸ் என்ற வங்க விற்பன்னர். இவர் "கீழ் வங்கத்தின் ஒளி வீசும் நட்சத்திரம்" எனப் புகழ் பெற்று விளங்கினார். சொல்லின் செல்வராக விளங்கிய சுரேந்திரநாத் பானர்ஜிக்கு அடுத்தபடியாகக் கருதப்பட்டவர். காங்கிரஸ் தோன்றுமுன் தோன்றிய இந்திய சங்கத்தின் முதல் காரியதரிசியாக 1876-ல் நியமிக்கப் பட்டவர். இந்தியக் கல்வி உத்தியோகங்களில் உயர் பதவிகளுக்கு இந்தியரை நியமிக்காமல் தடை செய்த ஷரத்துகளை ஆட்சேபித்து 1896ம் வருஷம் நடந்த பன்னிரண்டாவது காங்கிரஸில் வந்த தீர்மானத்தை ஆதரித்தார். சாதன பிரம்ம சமாஜத்தின் ஸ்தாபகர்களில் இவர் ஒருவர். கல்கத்தாவில் 'ஸிடி காலேஜ்' எனும் கல்லூரியை நிறுவியவர். சொற்பொழிவாற்றுவதில் நிபுணர். வங்கப் பிரிவினையை எதிர்த்து நடந்த பொது ஜனக் கிளர்ச்சியில், தம் தேக நிலை கவலைக்கிடமா யிருந்தும், அவர் தம்மை ஒரு நாற்காலியில் அமர்ந்து கூட்டத்துக்குத் தூக்கிச் செல்லச் சொல்லி, அங்கு ஆவேசம் மிகுந்த பிரசங்கம் செய்தார் என்பது இவர் தேசாபிமானத்துக்கும் தீரத்துக்கும் ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும்.



டாக்டர் அன்சாரி

காங்கிரஸ் வருஷத்துக்கொரு முறை கூடிக் கலையும் ஸ்தாபனமா யிருக்கலாகாது என்னும் எண்ணத்தை ஸ்ரீ போஸ் அக் காலத்திலேயே உணர்ந்திருந்தார் என்பதற்கு, அவர் தலைமைப் பிரசங்கத்தில் காணப்படும் கீழ் வரும் வாக்கியங்களே அத்தாட்சியாகும்.

"நாம் நடத்தும் விவாதங்களும் நிறைவேற்றும் தீர்மானங்களும் பயனளிக்க வேண்டுமானால் வருஷ ஆரம்பத்திலிருந்து இறுதிவரை காங்கிரஸ் காரியங்களை இடைவிடாது சலியாது நடத்தவேண்டும். நாடெங்கும் காங்கிரஸ் செய்தியைப்பரப்பி, ஜனங்கள் உற்சாகத்தைக் கிளப்பி வேலைசெய்யத் தியாக ஆர்வம் கொண்ட ஊழியர்களை அனுப்ப வேண்டும். துண்டுப் பிரசுரங்கள் வழங்க





கட்டிடம் எதுவாயினும்
திடத்திற்கும், தரத்திற்கும்

சூலம் மார்க்

சங்கர் பிராண்ட்




போர்ட்லண்ட் ஸிமெண்டையே உபயோகியுங்கள்

இந்தியா ஸிமெண்ட்ஸ் லிட். சென்னை - 1




1. ஸிங்கில் வீல் பாரோ (PanType)
2. ஸாக் டிராக்
3. டிராக்டர் ட்ரெயிலர்
4. தண்ணீர் கைவண்டி
5. டபிள் வீல் பாரோ (Box Type)
6. தண்ணீர் வண்டி —
   250 காலன் அளவுள்ளது

1840 - இல் வண்டிகள் செய்யும் தொழிலைச் சிறிய அளவில் ஆரம்பித்து இன்று நாங்கள் உயர்தரச் சேவையினால் தனிப்பட்ட மேம்பாடு பெற்றிருக்கிறோம். எங்கள் சேவைக்கு ஈடு இணை எங்கும் இல்லாத பெருமை அடைந்திருக்கிறோம்.

114 வருஷங்களாக வண்டிகள் தயாரித்தும் இலேசான என்ஜினியரிங் சாதனங்கள் தயாரித்தும், சேவையில் அனுபவமடைந்து. தொழிலில் எந்தச் சிக்கலையும் சமாளிக்கும் திறமையுள்ளவர்களைப் பெற்றிருப்பதனால் நாங்கள் மிகவும் உயர்ந்த பொருள்களையே உங்களுக்கு அளிக்கிறோம்.

# ஸிம்ஸன் & கோ. லிட்.

மதராஸ் - 2.

கிளைகள் : பெங்களூர் - உதகமண்டலம் - திருச்சிராப்பள்ளி - செகந்திராபாத் (டெக்கான்)

வேண்டும். பாமர மக்களின் குறைகள் இரு வதற்குப் பாடுபட வேண்டும். கடவுள், தாய்நாடு இரண்டும் பற்றியே நாம் என் றென்றும் நினைக்க வேண்டும்."

இந்தக் காங்கிரஸின் போது தான் ஆப் பிரிக்கா இந்தியர் பிரச்னையும், அதற்காக மகாத்மா காந்தி ஆரம்பித்த சரித்திரப் பிர சித்தி பெற்ற போராட்டமும் தோன்றின.

## கொடும் பஞ்சமும், கொண்டாட்டமும்

நான்காம் முறையாக 1903-ல் சென்னை யிலே பத்தொன்பதாவது காங்கிரஸ் கூடி யது. லால்மோஹன் போஸ் தலைமை வகித் தார். இவர் 1890-ல் காங்கிரஸ் மேடையில் தோன்றி பிராட்லா இந்திய அரசியலமைப் பைப் பற்றிக் கொண்டு வந்திருந்த மசோ தாவை ஆதரித்துப் பேசினார். கல்கத்தா இந்திய சங்கத்தின் சார்பாக, தாய் பாஷை பத்திரிகைச் சட்டம், இந்திய ஸிவில் ஸர்வி ஸில் சேர்பவர்கள் 'என்ன வயதுள்ளவர்களா யிருக்க வேண்டும் என்பதில் வய தைக் குறைக்க ஏற்பாடு- இவ்விரு விஷயங்களையும் எதிர்ப்பதற்காக லண்ட னுக்கு அனுப்பப்பட்ட தூதுகோஷ்டியில் லால் மோஹனும் ஒருவர். இவர் லண்டன் செல்லும் பொழுது இவருக்கு வயது முப்பது. இவர் லண்ட னில் முதல் முதலாகச் செய்த பிரசங்கத்தைக் கேட்ட ஜான் பிரைட் எனும் ஆங்கில பார்லி மெண்ட் அங்கத்தினர், "இவர் செய்த மகத்தான பிரசங்கத்தின் நற்பயனை ஜீவனற்ற என் வார்த்தை களால் பாழ்படுத்த விரும்ப வில்லை" என்று வியப்புற்றாராம். ஸ்ரீ லால்மோகன் போஸ் பேசிய கூட்டங் களிலெல்லாம் ஏராளமான ஆங்கிலேயர் குழுமிக் குதூகலித்தனராம்.



ஸ்ரீ சுப்ரமணிய பாரதியார்

இவர் சென்ற தூதுகோஷ்டியின் பயனாக, 'தாய் பாஷை பத்திரிகைச் சட்டம்' பற்றி பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபையில் விவாதம் நடந்தது. இதில் கிளாஸ்டன் கலந்து கொண்டு, "இந்தச் சட்டம், இயற்றிய அர சாங்கத்துக்குப் பெரிதும் இழிவு தருவதாகும்" எனக் கூறினார். பின்னர் அவர் பிரிட்டனின் பிரதம மந்திரியாக வந்தவுடன் இந்தச் சட்டம் ரத்து செய்யப்பட்டது. இவருடைய அரசியல் வாழ்க்கையை அறிந்தவர்கள் எல்லாம் இவரை 'அரசியல் யோகி' என்று மரியாதையோடு அழைக்கலாயினர்.

அச்சமயத்தில் பிரிட்டிஷ் மன்னரின் முடி சூட்டு விழாவுக்கு இந்திய சர்க்கார் ஆடம் பரச் செலவு செய்தனர். அதே சமயம் இந்தியாவில் கொடும் பஞ்சம் தாண்டவ மாடியது. இவ்விரண்டு விஷயங்களையும் பற் றித் தலைவர் பேசியது குறிப்பிடத் தக்கது.

"பத்திரிகைகளிலும் பொது மேடைகளி லும் ஏகோபித்து நாம் செய்த ஆட்சேபத் தைப் புறக்கணித்து ஆடம்பர மிக்க முடி சூட்டு விழா நடந்து ஓராண்டு முடிந்து விட்டது. நாட்டில் பஞ்சமும் நோயும் தாண்டவமாடி, விழாக் கர்த்தாக்களின் காது கேட்க யமதர்ம ராஜன் வட்ட மிட்டுக் கொண்டிருக்கையில் எந்த நாட்டிலும் இந்த அர்த்தமற்ற ஆடம்பர மிக்க விழாவைக் கொண்டாடி யிருக்க மாட்டார்கள். பிற பணத்தைச் செலவழிக்கையில் உயர் பதவியி லுள்ளவர்கள் பொறுப்புணர்ச்சி யுடன் நடந்து கொள்வதுதான் இயல்பு. ஆனால் இவர்கள் கட்டின்றிக் கேள்வி கேட்பாரில்லா மல் பணத்தைத் தண்ணீராய்ச் செலவு செய் தனர். டில்லி தர்பாரில் செலவான பணத்தில் பாதியைப் பஞ்ச நிவார ணத்துக்குச் செலவு செய் திருந்தாலும், லட்சக் கணக்கான ஆண், பெண், குழந்தைகள் பட்டினி யால் சாகாமல் தடுத்து நிறுத்தி யிருக்கலாம்."

## குழப்பத்தில் முடிந்தது!

இருபத்து மூன்றாவது காங்கிரஸ் 1908-ல் ஐந் தாம்முறையாகச் சென்னை யில் கூடியது. டாக்டர் ராஷ் பிகாரி கோஷ் தலைமை வகித்தார். இவர் கல்கத்தாவில் சிறந்த வக்கீல். பெரிய பேச்சா ளர். இந்தக் காங்கிரஸ் சென்னை எல்பின்ஸ்டன் சதுக்கத்தில் கூடி யது. திவான் பகதூர் ஸ்ரீ கிருஷ்ணசாமி ராவ் வரவேற்புக் கழகத்தலைவராக இருந்தார்.

இந்தக் காங்கிரஸ் சரித்திரப் பிரசித்தி வாய்ந்தது. ஏனெனில் 1907-ல் சூரத்தில் கூடி அங்கே தலைமை தாங்க வேண்டிய டாக்டர் கோஷ் தமது பிரசங்கத்தைப் படிக்கத் தீவிரவாதிகள் விடவில்லை. லோக மான்ய திலகர் தலைமையில் இவ்வாறு தீவிர வாதிகள் முட்டுக் கட்டை போட்டதற்குக் காரணம் இருந்தது. இருபத்தி மூன்றாவது காங்கிரஸ் நாகபுரியில் கூட வேண்டுமென அதற்கு முந்திய கல்கத்தா காங்கிரஸில் திட்டம் செய்யப்பட்டது. ஆனால் நாகபுரி வரவேற்புக் கமிட்டியினர் திலகர் தலைமை வகிக்க வேண்டுமென விரும்பினர். அந்தச் சமயம் காங்கிரஸ் அதிகாரம் வகித்தவர்கள் திலகர் தலைவராவதை விரும்பவில்லை. ஆகை

யால் தங்களுக்கு ஆதரவு நிரம்ப உள்ள சூரத்துக்குக் காங்கிரஸை மாற்றினர்.

அச் சமயம் லாலா லஜபதிராய் காவலிலிருந்து விடுதலை பெற்றிருந்தார். அவரையே தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமெனத் திலகர் கோஷ்டியினர் விரும்பினர். மேலும் முந்திய வருஷம் கல்கத்தாவில் தாதாபாய் நௌரோஜியின் தலைமையில் நிறைவேறிய சுயராஜ்யம், சுதேசி, அந்நிய சரக்கு பகிஷ்காரம், தேசிய கல்வி சம்பந்தமான தீர்மானங்கள் சூரத்தில் கொண்டு வரப் படமாட்டாது என்றும் திலகர் கோஷ்டியினர் சந்தேகம் கொண்டனர்.

ஏனெனில் காங்கிரஸ் ஆரம்பிக்கும் வரையில் தீர்மான விவரங்கள் வெளி வரவில்லை. ஆகையால் திலகர், டாக்டர் கோஷ் தலைமை வகிப்பதை ஆட்சேபிக்க விரும்பினர். ஆனால் அவர் பேச அநுமதிக்கப் படவில்லை. முதல் நாள் கூட்டம் குழப்பத்தில் முடிந்தது.

முந்திய வருஷத் தீர்மானங்களை அப்படியே நிறைவேற்றுவதென வாக்களித்தால் தமது ஆட்சேபத்தை வாபஸ் பெறுவதாகத் திலகர் கூறினர். இதை மிதவாதிகள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகையால் இரண்டாம் நாள் கூட்டமும் கல்வீச்சு, நாற்காலிகள் வீச்சு ஆகிய ரகளையில் முடிந்தது.

அவ் வருஷம் காங்கிரஸ் மகா சபை கூடாமல் ஒத்தி வைக்கப் பட்டது.

இந்தக் கிளர்ச்சியில் பொதுவாக அநேக தமிழ்ப் பிரதிநிதிகளும், குறிப்பாக, சுப்ரமண்ய பாரதியாரும், வ. உ. சிதம்பரம் பிள்ளையும் கலந்து கொண்டனர் என்று கூறப்படுகிறது.



ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை

இந்த நிலையில் சென்னையில் காங்கிரஸ் கூடுமுன் தீவிரவாதிகளை ஒதுக்கும் முறையில் காங்கிரஸ் அமைப்பு விதிகள் விரைவாய் மாற்றப் பட்டன. குறிப்பாக, தலைவர் தேர்தலை வரவேற்புக் கமிட்டியினர் செய்த பிறகு மகாசபையில் அதை யாரும் ஆட்சேபிக்கலாகாது என விதி செய்யப்பட்டது.

சென்னையில் இந்தக் காங்கிரஸ் கூடுவதற்குமுன் லோகமான்ய திலகர் கைது செய்யப்பட்டு, ஆறு வருஷக் கடுங் காவல் தண்டனை விதிக்கப் பட்டார்.

முன்பு ஒரு தடவை திலகர் தண்டிக்கப் பட்டபோது அதை ஆட்சேபித்து சுரேந்திரநாதர் தீர்மானம் கொண்டு வந்து ஆவேசமாகப் பேசினர். இந்தக் காங்கிரஸில் திலகர் மீது எவ்விதத் தீர்மானமும் கொண்டு வரப் படவில்லை. 1906-ல் கல்கத்தாவில் கொண்டு வரப்பட்ட பகிஷ்காரத் தீர்மானம் கைவிடப் பட்டது. 'சுயராஜ்யம் என்கிற வார்த்தையே பிரஸ்தாபிக்கப்படவில்லை. 'சுதேசி', 'தேசியக் கல்வி' தீர்மானங்களும் உருமாறி உப்புச் சப்பின்றி நிறைவேற்றப் பட்டன.

## காங்கிரஸில் வெள்ளைக் கவர்னர்

பூபேந்திரநாத் வஸு தலைமையில் 1914 ல் நடந்த இருபத்தொன்பதாவது காங்கிரஸ் ஆறுவது தடவையாகச் சென்னையில் கூடியது. மகாசபை நுங்கம்பாக்கத்தில் தேவதன மாளிகையின் வெளிப்புறத்தில் கூடியது. வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஆரம்பத்தில் காங்கிரஸ் ஸ்தாபிதத்துக்கு உதவி செய்து, பின்னர் உயர்தர நீதி மன்றத்தில் பதவி வகித்து விலகிய மகான் மணி அய்யர்.

இவர் 1916-ல் ஹோம் ரூல் இயக்கத்தில் ஈடுபட்டு, காந்திஜியின் பட்டங்கள் துறக்கும் திட்டம் வருமுன் தனது 'ஸர்' பட்டத்தைத் துறந்தவர். பிரிட்டிஷ் ஆட்சியின் கேவலத்தை எடுத்துக் காட்டி அக் காலத்திய அமெரிக்க ஜனாதிபதி வில்ஸனுக்குக் கடிதம் எழுதியவர்.

இந்தக் காங்கிரஸ் தலைவர் ஜி. வஸு பெரிய சொற்பொழிவாளர். இவருடைய பிரசங்கத்தில் "இந்தியாவில் ஆங்கில ஆட்சி, அதிகார வர்க்கத்துக்குத் தெய்வீக பதவி அளிப்பது என அர்த்தமானல் அந்த ஆட்சி நாகரிகத்துக்கே சாபக்கேடாகும், ஜனசமூகத்துக்கே இழுக்காகும். எனது லட்சியங்களை விட்டு நான் ஓட மாட்டேன். வாய்ப் பேச்சு வீரராயிருந்து செயலுக்குப் பின் வாங்குவதை வெறுக்கிறேன். எந்தப் பெரிய பிரச்னையையும் துணிவுடன் சமாளிக்க வேண்டும்." இந்தக் காங்கிரஸ் மகா சபை ஆரம்பிக்கு முன் முதல் மகாயுத்தம் தொடங்கி விட்டது. இந்த யுத்தத்தில் ராஜ விசுவாசத்துடன் உதவி செய்யும் என காங்கிரஸ் பிரகடனப் படுத்தியது. இந்தக் காங்கிரஸுக்கு அச்சமயம் சென்னை கவர்னரா யிருந்த பெண்ட்லண்டு பிரபு விஜயம் செய்தார்.

அச்சமயம் யுத்தத்துக்கு இந்திய சேனையை அழைத்து உபயோகப்படுத்தியதற்கு நன்றி செலுத்தி ஏ. டி. பாத்ரோ (பின்னாள் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர், ஜஸ்டிஸ் மந்திரி சபையின் உறுப்பினர்) பிரேரேபித்துப் பேசிக் கொண்டிருந்தார். அவர் பேச்சை நிறுத்தி, வழக்கமாகத் தலைவரே பிரேரேபித்து நிறைவேற்றி வந்த ராஜ விசுவாசத் தீர்மானத்தை ஸுரேந்திர நாத் பானர்ஜி பிரேரேபித்து மகத்தானதோர் புகழுரைப்

பிரசங்கம் செய்தது அக்காலத்திய காங்கிரஸ் தலைவர்களின் மனப்போக்குக்கு உதாரணம்.

### சரித்திரப் பிரசித்திபெற்ற கூட்டம்

நாற்பத்திரண்டாவது காங்கிரஸ் 1927ம் வருஷம் ஏழாம் முறையாகச் சென்னை எழும்பூர் ஏரியில் போடப்பட்ட பிரம்மாண்டமான பந்தலில் கூடியது. மகாத்மாவின் பிரதம சீடர்களில் ஒருவரும், வகுப்புவாத எண்ணமே இல்லாத முஸ்லிம் தேசபக்தருமான டாக்டர் எம். ஏ. அன்சாரி அதற்குத் தலைமை வகித்தார். மகாத்மாவின் பூரண ஒத்துழையாமைத் திட்டத்தில் நம்பிக்கையுள்ளவரானாலும் சுய ராஜ்யக் கட்சியினர் வலுவடைந்தவுடன் சட்டசபைப் பிரவேசத்துக்கு இடமளிக்க வேண்டும் என விரும்பினார். 1931-ல் காந்தி — இர்வின் ஒப்பந்தம் ஏற்படுவதற்கு முன் டாக்டர் அன்ஸாரியின் இல்லத்திலிருந்துதான் மகாத்மாஜி தினம் இர்வின் பிரபுவைச் சந்திக்கச் சென்றார்.

இந்தக் காங்கிரஸை **ஸ்ரீனிவாஸய்யங்கார் காங்கிரஸ்** என்றால் மிகவும் பொருத்தமாயிருக்கும். அவருடைய செல்வாக்கினால் இந்தக் காங்கிரஸின் செலவுக்கான பணம் சேகரிக்கப்பட்டது. செலவெல்லாம் போக மீதியிருந்த பணத்தைக் கொண்டு சீனிவாச அய்யங்கார் ராயப்பேட்டையில் காங்கிரஸ் மாளிகை கட்டுவித்தார். சிறந்த காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான சி. என். முத்துரங்க முதலியார் இதன் வரவேற்பு சபைத் தலைவராக இருந்து திறமையாகப் பணியாற்றினார்.

இந்தக் காங்கிரஸில்தான் சைமன் கமிஷன் பகிஷ்காரத் தீர்மானம் ஸ்ரீ எஸ். சீனிவாஸய்யங்காரால் பிரேரேபிக்கப்பட்டு நிறைவேறியது. பூர்ண சுயேச்சைத் தீர்மானம் பண்டித ஜவாஹர்லால் நேரு பிரேரேபித்து ஏற்றுக் கொள்ளப் பட்டது. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைத் தீர்மானத்தைப் பற்றிப் பண்டித மாளவியாஜி பேசிமுடித்ததும் மௌலானா முகமது அலி மேடைமீது ஏறி மாளவியாஜியை ஆலிங்கனம் செய்து கொண்டார்.

### ஆவடி காங்கிரஸ்

இருபத்தேழு ஆண்டுகள் கழித்துச் சென்னைக்கு அருகிலுள்ள ஆவடியில் இவ் வருஷம் அறுபதாவது காங்கிரஸ் கூடுகிறது. ராஜஸ்தான் முதன் மந்திரி பதவியை உதறித் தள்ளி விட்டு ராஷ்டிர பதவியை ஏற்றுக் கொண்டுள்ளார், காந்தி பக்தர்களில் ஒருவரான ஸ்ரீ யு. என். தேபார்.

காங்கிரஸ் லட்சியங்களுக்காக எண்ணற்ற தியாகங்கள் செய்த நாட்டுத் தலைவர்கள், ஊர் பெயர் தெரியாத, எவ்வித கைம்மாறுமே எதிர் பாராமல் உழைத்து மறைந்து போன தியாகிகள் இவர்களின் ஆன்மிக பலம் இந்தக் காங்கிரஸை வெற்றிகரமாக நடத்த உதவுமாக!

# ஹாஸ்யக் களஞ்சியம்




"அவர் கச்சேரியைப் போட்டால் நாலு பேர் வருவா, ஸார்!"

"பத்துப் பேர் போவாளே, ஸார்! என்ன செய்யறது?"



"வைக்கல் ஐயா வீடு எதுங்க?"






"நல்ல மல்யுத்தம்! மனுசன் தன் காலையே முறிச்சிண்டு கத்துகிறான்!"






" "அபிநயத்தில் அந்த இடத்தில் சிரிக்கச்
சான்னால் சும்மா இருக்கயே! உம், சிரி, சிரி!"



" அந்த அம்மா ரொம்ப நேரமா காத்துக்
ட்டு இருக்காங்க. அந்த ஆசாமியையே கவ
ிச்சக்கிட்டு இருக்கயே? இருப்புச் சட்டி
கட்டது அந்த அம்மாதான்!"

"உஷ், சத்தம் போடாதிங்கோ. குழந்தை
இப்பதான் தூங்குகிறான்!"














காமா



"படுத்து விட்டதே. மூட்டை ரொம்ப
கனமோ? யாருடையது?"
"ஒரு இரும்புக் கடை கணவாளுது!"

# எங்கள் ஊர்

"ஐயா, ஐயா!"

பரபரப்பான இந்தக் குரல் என் காதிலும் விழத்தான் செய்தது. ஆனால், யாரோ எவரையோ கூப்பிடுகிறார் என்று பேசாமல் நின்று கொண்டிருந்தேன்.

பக்கத்தில் நின்ற நண்பர் என்னைத் தட்டி, "அதோ அந்த ஆள் உங்களைத்தான் கூப்பிடுகிறான் போலிருக்கிறது" என்று கூறி அவனைச் சுட்டிக் காட்டினார்.

அவர் காட்டிய திசையை நோக்கினேன்.

ரயில் வண்டியில் கூட்டம் தாங்கமுடியவில்லை. அந்தக் கூட்டத்திலிருந்த ஓர் ஆள் கஷ்டப்பட்டு வெளியே தலையை நீட்டிக் கொண்டு, என்னைக் கூப்பிட்டான்.

அவனை நான் முன் பின் பார்த்ததில்லை. அவன் எதற்காக நம்மைக் கூப்பிட வேண்டும்! ஒன்றும் புரியவில்லை.

ஸ்டேஷன் பிளாட்பாரத்திலும் கூட்டமாக இருந்தது. கூட்டத்தை விலக்கிக் கொண்டு அவன் இருக்கு மிடத்துக்குச் செல்லுவதா, வேண்டாமா என்பதை நான் முடிவு செய்வதற்குள், அவனே முண்டியடித்துக் கொண்டு ரயில் வண்டியிலிருந்து தொப்பென்று கீழே குதித்தான்.

அவ்வளவுதான்! ரயில் வண்டிக்குக் காவலாக இருந்த ஜப்பானிய சிப்பாய்களில் ஒருவனுடைய துப்பாக்கியின் ஈட்டி அவனது மார்பைத் தொட்டது.

அதற்கு மேல் தாமதிக்கக் கூடாது என்று எண்ணிய நான் வேகமாக ஜப்பானிய சிப்பாயின் அருகில் சென்றேன்.

"அவன் என்னுடன் பேசுவதற்காகக் கீழே இறங்கினான். என்னுடன் பேசிவிட்டு மறுபடியும் வண்டியில் ஏறி விடுவான்" என்று எனக்குத் தெரிந்த காலே அரைக்கால் ஜப்பானிய பாஷையில் அந்தச் சிப்பாயிடம் கூறினேன்.

பிறகுதான் அவனை என்னுடன் பேசுவதற்கு ஜப்பானிய சிப்பாய் வேண்டா வெறுப்புடன் அனுமதித்தான்.

"நான்தான் ரத்தினம்; என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு!"

இவ்வாறு அந்த ஆள் கூறுவதும் நான் அவனை அடையாளம் கண்டு கொள்வதும் ஏக காலத்தில் நிகழ்ந்தன.

ஆம்! சந்தேகமே இல்லை. அவன் எங்கள் ஊர் ரத்தினம்தான்!

* * *

கோலாலம்பூர் ஸ்டேஷனில் ரயில் வண்டி புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண் டிருந்தது. அந்த வண்டியில் ஆயிரக் கணக்கில் ரப்பர் தோட்டத் தொழிலாளர்களான இந்தியர்களைத் தவிர வேறு யாரும் இல்லை.

இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது, ஜப்பானியர்கள் மலாய் நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டார்கள் அல்லவா! அப்போது அவர்கள் சமாளிக்க



# ரத்தினம்

ஜெயமணி




வேண்டிய மகத்தான பிரச்னைகளில், மலேயா ரப்பர் தோட்டத் தொழிலாளர் பிரச்னையும் ஒன்ருகியது.

யுத்தம் ஏற்பட்டதால் ரப்பர் உற்பத்தி நின்றுவிட்டது. ரப்பர் உற்பத்தி செய்தாலும் அதை எங்கு ஏற்றுமதி செய்வது! எனவே, லட்சக்கணக்கான இந்தியத் தொழிலாளர்களின் கதி என்ன என்ற கேள்வி எழுந்தது.

அந்தப் பிரச்னையைச் சமாளிக்க ஜப்பானியர் ஒரு யுக்தி செய்தனர். சயாமுக்கும் பர்மாவுக்கும் ரயில் போக்குவரத்துக்காக இருப்புப் பாதை போடுவதாகக் கூறி, அதன் சம்பந்தமான வேலைகளுக்காக ஒன்றரை அல்லது இரண்டு லட்சம் இந்தியத் தொழிலாளர்களைச் சயாமுக்குக் கொண்டு போய் விட்டார்கள்.

அது பெரிய சோகக் கதையாக முடிந்தது. அவ்வாறு கொண்டு போகப்பட்ட தொழிலாளர்களில் பெரும்பாலோர் திரும்பி வரவேயில்லை. அவர்கள் வெய்யில், மழை, அட்டைப் பூச்சிகள், விஷ ஜுரம் இவற்றிற்கு இரையாகி மடிந்தனர். ஒரு சில ஆயிரம் தொழிலாளர்களாவது அங்கிருந்து உயிருடன் திரும்பி வந்திருப்பார்களா என்பது சந்தேகம்தான்.

அவ்வாறு சயாமுக்குச் சென்ற ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் அடங்கிய ஒரு கோஷ்டியை வழி அனுப்புவதற்காகவே நாங்கள் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தோம்.

*　　*　　*

ரத்தினத்துக்கு என்னுடன் என்ன பேசுவ



தென்றே தெரியவில்லை. அவனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

அதற்குள் வண்டி புறப்படப் போகிறது என்று சிப்பாய் அவசரப்படுத்தினான்.

"நான் இங்கு வந்து பதினெட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. கெப்போங் ரப்பர்த் தோட்டத்தில் வேலை செய்கிறேன். என் தலைவிதி பெண்டாட்டி, பிள்ளைகளை விட்டு விட்டு இப்படிச் செல்ல வேண்டியிருக்கிறது. திரும்பி உயிருடன் வருகிறேனோ, இல்லையோ !......நீங்கள் எப்போதாவது கெப்போங் எஸ்டேட் பக்கம் சென்றால் என் மனைவி, மக்களுக்கு ஆறுதல் சொல்லுகிறீர்களா ! நீங்கள், மாரிக் கோனார் வீடு எது என்று கேட்டால் போதும், அந்தப் பக்கத்தில் உள்ள எவரும் சொல்லுவார்கள்......"

ரத்தினம் இவ்விதம் சொல்லி முடிப்பதற்குள் ரயில் வண்டி ஊதியதால், அவன் என்னைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே வண்டியில் ஏறிக் கொண்டான்.

வண்டியும் நகர்ந்தது. அதற்கு மேல் ரத்தினம் ஏறிய வண்டியைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கவில்லை. அவன் மீது இரக்கம் ஏற்படுவதற்குப் பதிலாக எனக்கு மிகுந்த வெறுப்பும் ஆத்திரமுமே உண்டாயின.

*　　*　　*

சிந்தனைப் புரவி தெறிகெட்டுக் கொண்டு பின்னோக்கிச் சென்றது என்று கதைகளில் அடிக்கடி வர்ணிக்கிறார்கள் அல்லவா ! அது போலவே, பதினெட்டு வருஷங்களுக்கு முன் எங்கள் ஊரில் நிகழ்ந்த பயங்கரமான சம்பவம் அச்சமயத்தில் என் ஞாபகத்துக்கு வந்தது.

ரத்தினத்துக்கு அப்போது இருபத்திநாலு இருபத்தைந்து வயது இருக்கலாம். அவன் மூலைத் தெருவில் உள்ள கோடி வீட்டில் குடியிருந்தான். ஒரு நாள் இரவு எட்டு மணிக்கு வயலில் வேலை செய்து விட்டு அவன் தன் வீட்டுக்கு அருகில் வருவதும், அடுத்த வீட்டு மூத்தையன், ரத்தினம் வீட்டு ஜன்னல் வழியாக ஒரு கடிதத்தை வீசி எறிந்து விட்டு ஓடுவதும் சரியாக இருந்தது. இந்த நாடகத்தைத் தன் கண்களால் நேரில் பார்த்த ரத்தினம் அப்படியே சிறிது நேரம் பைத்தியம் பிடித்தவன் போல் நின்று விட்டான்.

பிறகு அவன் உள்ளே சென்றபோது, "இந்தப் பாவி மகன் எப்போது தொலைந்து சாம்பலாகப் போகிறானோ !" என்று சொல்லிக் கொண்டே அவன் மனைவி தையலை கடிதத்தைத் தீயில் கொளுத்திக் கொண்டிருந்தாள்.

அவ்வளவுதான் ! அது வரையில் நல்ல பிள்ளையாக இருந்த ரத்தினம் கோப வெறி பிடித்த கொடியவனாக மாறினான்.

"உன்னைத் தொலைத்து விட்டுத்தான் இந்தப் பாவி மகன் தொலைவான்" என்று சொல்லி, கையிலிருந்த தடியால் தையலையின் மண்டையில் இரக்கமின்றி ஓங்கி அடித்து விட்டான்.

அவள் நெற்றியில் கடுமையான காயம் ஏற்பட்டுக் குபு குபு வென்று இரத்தம் பீறிட்டுக் கிளம்பியது. அவள் அந்த இடத்திலேயே கீழே விழுந்து விட்டாள்.

அதே சமயம் வாசலிலிருந்து உள்ளே யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது.

அதைக் கேட்டதும் ரத்தினம் கொல்லைப்புறமாக ஓடி விட்டான்.

வந்தவள் தையலையின் பிராண சிநேகிதியான எதிர் வீட்டு ராமாயிதான்.

இரத்தக் காயத்துடன் தையலை சுருண்டு விழுந்து கிடப்பதைக் கண்ட ராமாயி அலறி விட்டாள். அவள் உடனே சட்டென்று கீழே உட்கார்ந்தாள். தையலையின் தலையை மடிமேல் வைத்துக் கொண்டாள். கிழிந்திருந்த தன் புடவையின் தலைப்பிலிருந்து கொஞ்சம் துணியைக் கிழித்து அவள் தலையில் கட்டினாள். அப்படியும் இரத்தம் நிற்கவில்லை. மேற்கொண்டு இரத்தம் வடியாமல் இருக்கத் தன் கையால் நெற்றிக் காயத்தை அழுத்திக் கொண்டாள்.

"தையலை, இது என்ன கஷ்டம்! தப்பித் தவறிக் கீழே விழுந்ததில் இப்படிக் காயம் ஏற்பட்டு விட்டதா !" என்று கேட்டாள்.

தையலை சிறிது நேரம் வாய் திறக்கவேயில்லை. பிறகு முனகிக் கொண்டே கூறத் தொடங்கினாள் :

"நான் என்ன சொல்லுவேன், ராமாயி ! அடுத்த வீட்டுப் பாவி மூத்தையனால் வந்த வினைதான். அவன் என்மீது கெட்ட எண்ணம் கொண்டு பல நாட்களாக என்னைத் துன்புறுத்தி வந்தான். அவன் இஷ்டத்துக்கு நான் இணங்கவில்லை. இதை என் வீட்டுக்காரரிடம் சொல்ல இரண்டொரு தடவை வாய் எடுத்தேன். ஆனால், என்ன விபரீதம் நேருமோ என்று பேசாமல் இருந்து விட்டேன். சென்ற சனிக்கிழமை என் வீட்டுக்காரர் வயல் வெளிக்குச் சென்றிருந்தபோது, ஆற்றில் நான் தண்ணீர் மொண்டு வந்தேன். அந்தப் பாவி வழியை மறித்துக் கொண்டு, 'இஷ்டமா, இல்லையா இரண்டில் ஒன்று இன்று தெரிந்துவிட வேண்டும்' என்று வக்கணை பேசினான். 'உன் முடிவான பதில் என்ன !' என்று என்னைக் கேட்டான். எத்தனை நாள் இந்த அக்கிரமத்தைச் சகித்துக் கொண்டிருப்பது ! எனக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. 'என் முடிவு இது தான்' என்று சொல்லி, தண்ணீருடன் பானையை, அவன்மீது மோதினேன். பானை உடைந்து அவன்

தேகம் முழுவதும் சொட்டச் சொட்ட நனைந்து விட்டது. 'தையலை, இனிமேல் நான் முத்தையன் அல்ல; உன் வாழ்வுக்கு உலை வைக்க வந்த யமன் என்று எண்ணிக் கொள்' என்று கண்கள் சிவக்க ஆத்திரத்துடன் சொல்லி விட்டுப் போய் விட்டான். இதையும் நான் வீட்டுக்காரரிடம் கூறவில்லை. என் மீது அவருக்கு வீண் சந்தேகம் ஏதாவது ஏற்பட்டு விடுமோ என்று பயந்து பேசாமல் இருந்து விட்டேன். அவன் செய்த சூழ்ச்சிதான் இது. வயலிலிருந்து அவர் வரும்போது அவர் பார்க்க ஒரு கடிதத்தை ஜன்னல் வழியாக விட்டெறிந்தான்போல் இருக்கிறது. அந்தக் கடிதத்தைப் படித்த உடனேயே அதை எழுதியது யார் என்று தெரிந்து விட்டது. அதை நான் முழுவதும் வாசிக்காமலேயே தீயில் கொளுத்தினேன். 'இந்தப் பாவி என்று தொலைவானோ' என்று நான் முத்தையனைக் கடிந்து கொண்டேன். ஆனால் அதைக் கேட்டுக் கொண்டே உள்ளே வந்த இவர் தன்னைத்தான் நான் அப்படிச் சொன்னதாக நினைத்து, அடித்துவிட்டார்.."

தையலை இவ்வாறு கூறி முடிப்பதற்குள் ரத்தினம் கொல்லைப்புறத்திலிருந்து 'தையலை' என்று கத்திக் கொண்டு வரவே, ராமாயி 'ஐயோ, தையலையைக் கொல்லுகிறான்' என்று அலறிய வண்ணம் வெளியே ஓடி வந்தாள்.

உடனே ரத்தினத்தின் வீட்டு வாயிற் கதவு படார் என்று மூடப்பட்டுத் தாளிடப் பட்டது.

• • •

மறு நாள் ரத்தினத்தின் வீட்டுக் கதவு வெகு நேரம் திறக்கப்படாததால், போலீஸாருக்கு விவரம் அறிவிக்கப்பட்டது. போலீசார் வந்து கதவை உடைத்துக் கொண்டு உள்ளே சென்ற போது, அங்கு யாருமே இல்லை.

கொல்லைக் கதவு திறந்து கிடந்தது. கொல்லையில் சிறிது தூரம் ரத்தம் சிந்திக் காய்ந்திருப்பதையும் போலீசார் கண்டு பிடித்தனர். தையலையை ரத்தினம் கொன்று விட்டதாக ராமாயி உறுதியாய்க் கூறினாள். பிரேதத்தை அவன் எங்கேயாவது புதைத்திருக்கலாம் என்ற எண்ணத்துடன் போலீசார் கொல்லையில் பல இடங்களையும் தோண்டிப் பார்த்தனர்.

அப்போது, கொல்லைக் கடைசியில் உள்ள ஆற்றில் நிறையத் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்ததால், பிரேதத்தை ரத்தினம் ஆற்றில் போட்டு விட்டு ஓடிப் போயிருக்கலாம் என்று எல்லோருக்கும் சந்தேகம் ஏற்பட்டது.

ரத்தினத்தைப் பிடிக்கப் போலீசார் நாற்புறமும் வலை வீசினர். ஆனால் அச் சம்பவம் நிகழ்ந்து இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகியும், யாதொரு உளவும் கிடைக்க வில்லை.

தையலையின் கொலையினால் ஏற்பட்ட பரபரப்பு சிறிது சிறிதாக அடங்கி வரும்போது, மற்றொரு பரபரப்பான சம்பவம் நிகழ்ந்தது.

தையலையின் கொலைக்குக் காரணமாக இருந்த அடுத்த வீட்டு முத்தையன் போலீசாரிடம் சரண் அடைந்து உண்மையை ஒத்துக் கொண்டான். ரத்தினம் அடித்ததால் மாண்ட தையலையின் உடலைத் தானும் ரத்தினமும் இரவுக்கிரவே தூக்கிச் சென்று ஆற்று வெள்ளத்தில் எறிந்து விட்டதாகக் கூறினான்.

சம்பவம் நடந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகு பிரேதத்தை எப்படிக் கண்டு பிடிப்பது! அது கடலில் எந்த மீனுக்கு இரையாயிற்றோ!

முத்தையன் ஒப்புக் கொண்டிரா விட்டால் தையலையின் கதி என்னவாயிற்றென்று யாராலும் கண்டு பிடித்திருக்க முடியாது. எனவே, கொலையுண்டவளின் பிரேதத்தை ஒருவருக்கும் தெரியாமல் மறைத்து விட்டதாக, அவன் மீது நடந்த வழக்கில் கோர்ட்டார் அவனுக்கு ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதித்தனர். அவன் தானாக வலுவில் உண்மையை ஒப்புக் கொண்டதே, அவனுக்குக் குறைவான தண்டனை விதிக்கப்பட்டதற்குக் காரணம் என்றனர் கோர்ட்டார்.

* * *

அவ்விதம் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் கொலை செய்து விட்டு எங்கள் ஊரிலிருந்து மறைந்த ரத்தினத்தை மலாய் நாட்டில் நான் பார்த்த போது எனக்கு அவன் மீது ஆத்திரமும் வெறுப்புமே ஏற்பட்டன.

சயாமுக்குச் சென்ற அவன் அங்கு நிச்சயமாக இறந்திருப்பான் என்று எண்ணிக் கொண்டிருந்த என்னை, சில மாதங்களுக்கு முன் சென்னைப் பத்திரிகைகளில் வெளியான ஒரு செய்தி தூக்கி வாரிப் போட்டது

**"மலாய் நாட்டில் உள்ள ரப்பர்த் தோட்டம் ஒன்றில் மேஸ்திரியாக இருந்த மாரிக்கோனார் என்பவன், இந்தியாவில் உள்ள அவன் சொந்த ஊரில் பல வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு கொலை சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டு, சென்னைக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறான். அவன் சொந்தப் பெயர் ரத்தினம்."**

ரத்தினம் தன் மைத்துனனுக்கு மலாய் நாட்டிலிருந்து பணம் அனுப்பியதாயும், அதிலிருந்து போலீசார் அவன் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்ததாயும் சிலர் கூறினர்.

• • •

பின்னர் சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மின்னல் வேகத்தில் நிகழலாயின.

எங்கள் ஜில்லா செஷன்ஸ் கோர்ட்டில் ரத்தினத்தின் மீது வழக்கு விசாரணை நடந்த போது, கொலை சம்பந்தமாக மலாய் நாட்டிலிருந்து ஒரு முக்கிய சாட்சியைத் தருவிக்க வேண்டி யிருப்பதாக எதிரி வக்கீல் கூறியதால் விசாரணை அந்தச் சாட்சி வரும் வரையில் ஒத்தி வைக்கப்பட்டது.

பிறகு விசாரணையின் போது கோர்ட்டில் கூட்டம் தாங்க முடியவில்லை.

எடுத்த எடுப்பில் எதிரி வக்கீல் பிராஸிக்யூஷன் தரப்பின் அஸ்திவாரத்தையே தகர்த்து விட்டார். ரத்தினம் கொலையே செய்யவில்லை என்று ஒரே அடியாகச் சாதித்தார்!

வக்கீலின் இந்தக் கூற்றுக்கு ஆதாரம் என்ன என்று கேட்டபோது, ரத்தினத்தின் மனைவி தையலையே சாட்சி என்று எதிரி வக்கீல் கூறினார். இதைக் கேட்டு கோர்ட்டார் உள்படச் சகலரும் மேலும் ஆச்சரியத்தில் மூழ்கினர்.

கோர்ட்டில் ஆஜரான தையலையை எங்கள் ஊர் சாட்சிகள் உடனே அடையாளம் கண்டு பிடித்து விட்டார்கள்.

ரத்தினம் கோர்ட்டில் கூறிய வாக்குமூலத்திலிருந்து அதுவரையில் யாருக்கும் தெரியாத பல விஷயங்கள் வெளியாயின.

பல ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் இரவு ரத்தினம் தையலையை அடித்தபோது ராமாயியின் காலடிச் சப்தத்தைக் கேட்டு அவன் கொல்லைப் புறத்தை நோக்கி ஓடினான் அல்லவா! அவ்வாறு ஓடியவன் மற்றொரு கதவின் வழியாகத் திரும்பி வந்து சமையல் அறைக்குள் ஒளிந்து கொண்டான்.

ஸ்தாபகர்




தொ. ஆறுமுக முதலியார்

# சுதேசி

(ஸ்தாபிதம்: 1906)

○●○

டெலிபோன்: 8291

தந்தி: "புவனு"

○●○

இத் தேசியத் திருநாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும் எங்களது மனமார்ந்த

## நல் வாழ்த்துக்கள்!

இதர எந்த தயாரிப்புகட்கும் தலைசிறந்ததும், நீடித்து உழைக்கக் கூடியதும், அழகும் கவர்ச்சியும் பொருந்தியன வாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும், "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும், அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்.

○●○

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**தொ. ஆ. சுப்பிரமணிய முதலியார்**

நிர்வாக பாகஸ்தர்

# டைப் பவுண்டரி

51, குருவப்ப செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, மதராஸ்-2

○●○

**தமிழ், இந்தி, மலையாளம், தேவநாகரி, தெலுங்கு, குஜராத்தி. சிங்களம், ஒரியா, கன்னடம், கிரந்தம், உருது, மகாராஷ்டிரம், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய பதினான்கு பாஷைகளிலும் எழுத்துக்கள் தயாரிக்கப்படும் பவுண்டரி இது ஒன்றேதான்!**

○●○

இந்த காங்கிரஸ் மலரில் உபயோகிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள் "**கணபதி**" புதிய தமிழ் எழுத்துக்களே இந்த எழுத்துக்களின் உறுதிக்கும், அழகான அமைப்பிற்கும் இந்த காங்கிரஸ் மலரே தக்க சான்று.

வெளிநாட்டு யந்திரங்களும் நம் நாட்டில் செய்த 'கட்டிங்மிஷின்' 'பெர்ப்பரேடிங்', லெட் ரூல் கட்டர்கள் இவைகள் சப்ளை செய்யப் பெறும். பூரா விவரங்களும் வேண்டுவோருக்கு அனுப்பிவைக்கப் பெறும்.

○●○

இதில் அச்சிடப்பட்டிருக்கும் எழுத்துக்கள் புதிதாக தயாரிக்கப் பட்டவை.



எனவே, தையலை ராமாயியிடம் கூறிய சகல விஷயங்களும் அவனுக்குத் தெரிய வந்தது. உடனே அவன் பதறிவிட்டான். தன்மீது அவ்வளவு அன்பு வைத்துள்ள தையலை நெறி தவறாதவள் என்பது தெரிந்ததும் அவனுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. நிரபராதியான அவளை அடித்துவிட்டோமே என்று அவன் மனம் துடித்தது. அப்போது அவன் 'தையலை' என்று அலறிக்கொண்டு வந்ததைக் கண்ட ராமாயி, மேலும் அவளை அடிக்கத்தான் அவன் வருகிறானோ என்று பயந்து போய் வெளியே ஓடி விட்டாள்.

உடனே ரத்தினம் கதவைத் தாளிட்டுக் கொண்டு வந்து, தையலையைத் தேற்றினான். ஆய்ந்தோய்ந்து பாராமல் அவளை அடித்ததற்காகக் கண்ணீர் விட்டான். எங்கள் ஊரைச் சேர்ந்த முனியப்பன் ஒரு சமயம் குடித்து விட்டுத் தன் மனைவியை அடித்ததற்காக ஆறு மாதம் சிறைத் தண்டனை அடைந்ததைத் தையலை அப்போது அவனுக்கு ஞாபகப் படுத்தியதுடன், ஊரை விட்டே போய்விட வேண்டும் என்று வற்புறுத்தினாள். அவள் அவ்விதம் வற்புறுத்தியதற்கு முக்கிய காரணம் மூத்தையன் தான். தான் அந்த ஊரில் இருந்தால் மூத்தையனால் இன்னும் என்ன ஆபத்து நேருமோ என்று அவளுக்குப் பயம் ஏற்பட்டு விட்டது. எனவே இருவரும் உள்ளே பெட்டியிலிருந்த சொற்பத் தொகையையும், தூக்கிச் செல்லக் கூடிய முக்கியமான சாமான்களையும் மூட்டை கட்டிக் கொண்டு இரவுக்கிரவே வெளியேறி விட்டனர்.

இச் சந்தர்ப்பத்தில் கோர்ட்டாருக்கு ஒரு முக்கிய சந்தேகம் எழுந்தது.

தையலையின் பிரேதத்தை ரத்தினமும் தானும் சேர்ந்து தூக்கிக் கொண்டு போய் ஆற்றில் போட்டதாக மூத்தையன் தானாக வலுவில் போலீசாரிடம் கூறிச் சிறைத் தண்டனையும் அடைந்தான் அல்லவா! அதன் மர்மம் என்ன!

எனவே மூத்தையனை விசாரிப்பதற்காக மறுபடியும் வழக்கு ஒத்தி வைக்கப்பட்டது. மூத்தையன் செஷன்ஸ் கோர்ட்டில் கூறிய வாக்கு மூலத்திலிருந்து நிலைமை மேற்கொண்டு தெளிவாகியது.

"நான் செய்த குற்றங்களையெல்லாம் மன்னிக்கும்படி கோர்ட்டாரை வேண்டிக் கொள்கிறேன். தையலையிடம் நெறி தவறி நடக்கத் துணிந்தது நான் செய்த முதல் குற்றம். அதன் காரணமாகத் தையலை கொலையுண்டு விட்டதாக எல்லோரையும் போல் அச்சமயம் நானும் நம்பினேன். அவளது கொலைக்கு நான் காரணமாகியது, இரவு பகலாக என் மனத்தை அரித்துத் தின்னத் தொடங்கியது. என்னை நானே பெரும் பாவி என்று நொந்து கொண்டேன். அதற்குத் தகுந்த தண்டனையை நான் அனுபவிக்க வேண்டும் என்று என் மனச் சாட்சி என்னைச் சவுக்கால் அடிப்பது போல் இருந்தது. தையலையின் உடலை நானும் ரத்தினமும் சேர்ந்து தூக்கி ஆற்றில் கொண்டு போய் எறிந்ததாகப் பொய் சொன்னேன். அதற்காக நான் அடைந்த சிறைத் தண்டனை எனக்கு மன நிம்மதியைக்கொடுத்தது."

மனிதன் தவறிழைப்பது சகஜம். தன் தவறை உணர்ந்து அதற்கு யாரும் எதிர்பாராத விதத்தில் தானே பிராயச்சித்தம் செய்து கொள்ள முற்பட்ட மூத்தையனின் நேர்மையைக் கோர்ட்டார் உள்படச் சகலரும் பாராட்டினர்.

எல்லோருடைய அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமான ரத்தினம் தம்பதிகளின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை என்பதைச் சொல்ல வேண்டுமா!


லோகமான்ய திலகர்


தாதாபாய் நௌரோஜி


ஸேலம் விஜயராகவாச்சாரியார்



சுபாஷ் சந்திர போஸ்



விந்தல்பாய் படேல்



லாலா லஜபதிராய்


பட்டாபி சீதாராமய்யா


அபுல்கலாம் ஆஸாத்


மோதிலால் நேரு

# அஞ்சலி

## காங்கிரஸ் மகாசபை

### வைர விழா



டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிமிடெட்.

மோட்டார், பஸ், லாரி உற்பத்தியாளர்.
தலைமை ஆபீஸ்: மதுரை.

திருச்சி, திருநெல்வேலி, புதுக்கோட்டை,
சேலம் & கோயம்புத்தூர்.



மதுரை மோட்டார்ஸ் லிமிடெட்.

தேசத்தின் தனிப்பெரும் சரக்கு
போக்குவரத்து ஸ்தாபனம்,
மதுரை.



சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்

பியட் & ப்ளிமத் கார், பார்கோ ட்ரக் &
பெர்குஸன் ட்ராக்டர் விநியோகஸ்தர்,
சென்னை-6.



சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்.

நூதன முறையில் டயர் புதுப்பிப்பவர்,
புதுக்கோட்டை.




மதராஸ் ஆட்டோ ஸர்வீஸ் லிமிடெட்.

மதராஸ் & பெங்களூர்
மோட்டார் உருப்பு—உபகரண
விநியோகஸ்தர்.



தி மதராஸ் மோட்டார்
இன்ஷ்யூரன்ஸ் கோ. லிட்.,

மதுரை.





யு.என். தேபர்



ஆச்சார்ய கிருபளானி



ஜெயப்பிரகாஷ் நாராயண்


GOKUL MALA BATHIS
DASANGAM
T.S.R.&Co
KUMBAKONAM
BRUHMANANDA
Tooth Po
GOKUL
HAIR OIL
T.S.R.&Co
KUMBAKONAM
T.S.R.&Co
Sandana
Thai
★
○ அரைக்கீரை விதை தைலம்
○ ஊறுகாய் ரகங்கள்
○ ரோஜாப்பூ குல்கந்து
○ வாசனைப் பாக்கு & சுண்ணாம்பு
○ பன்னீர் வகையறாக்கள்
○ சர்பத்து ரகங்கள்
○ உயர்தர ஊதுபத்திகள்
○ மனோகர கஸ்தூரி மாத்திரை
○ சந்தனப் பவுடர் & வில்லைகள்
○ பிளவர் டஸ்ட் & அரகஜா
○ ஸ்நானப் பவுடர்
★
டி.எஸ்.ஆர். & கோ
கும்பகோணம்

நீங்கள் இப்பொழுது
மனசில் நினைத்துக்
கொண்டிருப்பதைச்
சொல்லட்டுமா?





சொன்னால்
போறாது
கொடுங்கள்

# நரசுஸ்
# காப்பி

நரசுஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்:
மதராஸ் • சேலம்.



# சக்கரவர்த்தித்



# திருமகன்

## 49. மாரீச மான்

ராஜாஜி

மாரீசன் ராவணனைப் பார்த்துச் சொன்னான்:

"ராக்ஷச மன்னனே! நீ சொன்னதையெல்லாம் கேட்டேன். உன் பேச்சைக் கேட்டு எனக்கு எல்லையற்ற துக்கம் உண்டாகிறது. யோசனை சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படும்போது கேட்பதற்கு இனிமையான வார்த்தைகளைப் பேசுவது சுலபம். ஆனால் பிரியப்படாத ஹிதத்தைக் கண்டிப்பாகச் சொல்லுவதற்கு யாரும் முன்வர மாட்டார்கள்; சொன்னாலும் யாரும் கேட்பார் இல்லை. எப்படியாயினும் உனக்கு நன்மையைச் சொல்ல விரும்புகிறேன். தித்திப்பாகப் பேசிவிட்டு உன்னைத் திருப்தி செய்துவிட்டு, உன்னை அபாயத்தில் தள்ளிக் கெடுத்து விடுவது எனக்கு இஷ்டமில்லை.

"ராமனைப் பற்றி உனக்குச் சொல்லியிருக்கிறவர்கள் உண்மையைச் சொல்லவில்லை. அறியாதவர்களுடைய பேச்சைக் கேட்டு ஏமாந்து போகாதே! ராமன் மகா வீரன். உத்தம குணங்கள் வாய்ந்தவன். அவனுடைய கோபத்தைச் சம்பாதித்துக் கொண்டு குலமும் லங்காபுரியும் அழிந்து போவதற்கு வழி தேடாதே. சீதை உன்னை நாசம் செய்வதற்காகவே அவதரித்தாளோ என்னமோ! உன்னை அரசனாகக் கொண்ட அரக்கர் குலமும் லங்காபுரியும் சீக்கிரத்தில் ராமனால் நாசம் செய்யப்படும். உலகத்திலுள்ள ராக்ஷச குலமே நிர்மூலமாவதற்கு வழி தேடுகிறாய்! யார் உனக்கு இந்த எண்ணத்தைத் தூண்டியது? பெரும் விபத்துக்கு உன்னையும் உன் ராஜ்யத்தையும் உன் குலத்தாரையும் ஆளாக்கவே இந்தக் கெட்ட உபதேசம் யாரோ செய்திருக்கிறார்கள்.

"ராமனுடைய தந்தை அவனிடம் குற்றம் கண்டு அவனைக் காட்டுக்குத் துரத்தவில்லை. அவனைப் பற்றி நீ சொன்னதெல்லாம் தவறு. அரசன் தன் மனைவி கைகேயிக்குக் கொடுத்திருந்த வாக்கை நிறைவேற்றித் தருவதற்காக ராமன் தானாக வனம் சென்றான். தந்தையின் சத்தியத்தைக் காப்பதற்காக ராஜ்யம், போகம் எல்லாவற்றையும் தானாகவே விட்டு விட்டு தண்டகாரண்யம் சென்றான். சிற்றின்பக்காரன், மோசக்காரன் என்றெல்லாம் உனக்கு யார் சொன்னது? சுத்தப் பொய். ராமன் தருமமே உருவெடுத்த புருஷன். அறவழியில் பராக்கிரமம் செலுத்துகிறவன். தேவர்களுடைய உலகத்தில் இந்திரனைப் போல் இந்த உலகத்து மக்களில் ராமன் முதன்மையிடம் பெற்ற வீரன். அவன் மனைவியை நீ ஆசைப்படலாமா? இது நடக்கும் காரியமா? அவள் உன் வசப்படுவாளா? சூரியனை ஏமாற்றிச் சூரியனுடைய ஒளியைத் திருட முடியுமா? ஜனக புத்திரி சீதையின் தேஜஸை நீ தீண்ட முடியுமா? எரிந்து போவாய்! ராமனுடைய பாணங்களுக்கு இரையாகாதே. அவனை உனக்கு

ஒரு யமனைக் செய்து கொள்ளாதே! அவனால் காக்கப்படும் இந்த நெருப்பைத் தீண்டப் போகாதே. உன் சர்வ நாசத்துக்கு வழி தேடிக் கொள்ளாதே.

"பூரணமாக யோசிக்காமல் ஒரு காரியத்தில் பிரவேசிக்கலாகாது. ராமனுடன் யுத்தம் செய்து நீ வெற்றி பெற மாட்டாய். அரக்கர்களின் அரசனே! நான் சொன்னதைப் புறக்கணிக்காதே. முன்னாள் நான் தேக பலங் கொண்ட செருக்கினால் ரிஷிகளைக் கொன்று தின்று அவர்களுடைய விரதங்களையும் வேள்விகளையும் அழித்து வந்தேன் அல்லவா? அந்தக் காலத்தில் விசுவாமித்திர முனிவர் செய்த வேள்வியைக் கெடுக்கப் போனேன். இந்த ராமன் அந்த நாளில் சிறுவனாக இருந்தவனை விசுவாமித்திர முனிவர் தசரதனைக் கேட்டுத் தன்



வேள்வியைக் காக்க அழைத்து வந்திருந்தார். அந்த முனிவருக்கு இவனுடைய சௌரியம் அப்போதே தெரிந்திருந்தது. நான் வேள்வித் தீயை அழிக்கச் சென்றேன். இந்த பாலன் தன் வில்லை வளைத்துச் செலுத்திய பாணமானது என்னைச் சமுத்திரக் கரையில் கொண்டு போய்த் தள்ளி, வெகு நேரம் பிரக்ஞை இழந்து கிடந்தேன்.

"இவனுடைய கோபத்தைச் சம்பாதித்துக் கொள்ளாதே. செல்வமும் சிறப்பின் பங்களும் அடைந்து சுகமாக இருக்கும் உன் அரக்கர் குலத்தின் நாசத்தைத் தருவித்துக் கொள்ளாதே. சீதையை அடையப் போய் அழகும் செல்வமும் நிறைந்திருக்கும் உன் நகரத்தைவீணாகப் பாழாக்கி மரணம் அடையாதே. நீ அடையப் போகும் நாசம் இப்போதே என் மனக் கண் முன் நிற்கிறது. எரியும் லங்கையைப் பார்க்கிறேன். பெரும் பாவத்தில் இறங்கப் பார்க்கிறாய், வேண்டாம். உன்னுடைய கோபத்தைப் பொறுத்துக் கொள்ள முடியாதாயின் ராமனுடன் நேராக யுத்தம் செய். அக்கிரம மோசத்தில் என்னை இழுக்காதே. உன் மனைவிகளுடன் சுகமாக இரு. நூற்றுக் கணக்காக வைத்திருக்கிறாயே, அது போதாதா? உன் பந்து மித்திரர்கள் அனைவருக்கும் விநாசம் தருவித்துக் கொடுத்து நீயும் அழிந்து போவதற்கு வழி தேடாதே! யமனை அழைக்காதே!"

இவ்வாறு ராவணனுடைய நன்மையைக் கருதி மாரீசன் வெகு நேரம் பேசினான். அது ராவணனுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. காமத்தால் தூண்டப் பட்டவனுக்கு நல்ல யோசனை சொல்லி என்ன பயன்? நோயாளி மருந்தை வேண்டாம் என்பதுபோல் ஒரே பிடிவாதமாக ராவணன், "நீ சொல்லுவது சரியல்ல, நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்" என்று மாரீசனுடைய புத்திமதியைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

"அரசன் ஒருவனிடத்தில் போய் இன்னது செய்யலாமா, வேண்டாமா என்று யோசனை கேட்டால் அதைப் பற்றி அவன், லாபா லாபம் ஆராய்ந்து சொல்லலாம். ஆனால் உன்னிடம் நான் யோசனை கேட்க வரவில்லை. 'இதைச் செய்யத் தீர்மானித்தேன். இதற்கு நீ இந்த உதவி செய்ய வேண்டும்' என்று அரசன் கேட்கும்போது அரசனிடம் நடந்துகொள்ள வேண்டிய மரியாதையை மறந்து, 'நீ செய்யப் போவது தவறு' என்று சொல்லுகிறாய். நான் இந்த விஷயத்தில் முற்றிலும் ஆலோசித்து முடிவுக்கு வந்து விட்டேன். இந்த மானிடப் பதருடன் நான் யுத்தம் செய்யலாகாது. ஊரிலிருந்து துரத்தப்பட்டவன், அதமன். ஒரு ஸ்திரீயின் சூழ்ச்சியால் ஏமாற்றப்பட்டு ராஜ்ய பதவியை இழந்த முட்டாள், இவனோடு நான் சமான எதிரியாக நின்று போர் செய்வேனா? அது முடியாது. இத்தகைய ஆளுக்குச் சரியான தண்டனை அவன் மனைவியைத் தூக்கிப் போய் அவனை அவமானப்படுத்துவதே. இது நான் தீர்மானித்து விட்ட சங்கதி.

அதைப்பற்றி உன்னைக் கேட்க வில்லை. நான் சொல்லுவதை நீ செய்ய வேண்டும். நீ ஒரு விசித்திர மாய மான் வடிவம் எடுத்துக் கொண்டு சீதையின் கண்ணைக் கவர்ந்து இழுக்க வேண்டும். இதைத்தான் நான் கேட்கிறேன். மானைப் பிடிக்க சீதை ராமனை அனுப்புவாள். நீ ராமனைத் தூரமாக இழுத்துச் சென்று 'ஹா சீதா! ஹா, லக்ஷ்மணா!' என்று ராமன் குரலில் கூப்பிட வேண்டியது. அதைக் கேட்டு ராமனுக்கு ஏதோ ஆயிற்று என்று சீதை லக்ஷ்மணனை ராமனுக்குச் சகாயமாக அனுப்பி விடுவாள். நான் அந்தச் சமயத்தைப் பயன் படுத்திக் கொண்டு சீதையைத் தூக்கிக்கொண்டு லங்கைக்குப் போவேன். இந்தக் காரியத்தில் நீ உதவி செய்து விட்டுப் பிறகு உன் இஷ்டப்படி போகலாம். இல்லையென்றாயாகில் இங்கேயே என்னால் வதம் செய்யப்படுவாய்" என்றான்.

எவ்வளவு சொல்லியும் ராவணன் கேளாமலிருப்பதைக் கண்டு, 'இவன் யமன் வீட்டுக்குப் போவதற்கு அவசரப் படுகிறான். காமத்தால் தூண்டப்பட்டு மாள்வது இவன் விதியாக இருக்கிறது. இவனால் கொல்லப் பட்டு என் உயிர்போவதை விட ராமனாலேயே கொல்லப் படுவது நலம். பகைவனால் கொல்லப்பட்டால் தோஷமில்லை' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு மாரீசன் ராவணன்சொன்னதைச்செய்ய ஒப்புக் கொண்டான்.



"ராவணா! நான் உனக்கு இதத்தைச் சொல்லிப் பார்த்தேன். நீ கேட்க வில்லை. நீ சொன்னது போல் நான் செய்தால் என் உயிர் போவது நிச்சயம். உன் உயிரும் அதற்குப் பின் சீக்கிரத்தில் போவதும் நிச்சயம். லங்கை அழிவதும் நிச்சயம். உன் குலம் நிர்மூலமாவதும் நிச்சயம். உன்னுடைய க்ஷேமத்தை விரும்பாத எவனோ ஒரு சத்துரு உன்னை இந்தக் காரியத்தில் பிரவேசிக்கத் தூண்டிவிட்டிருக்கிறான். உன் பேரில் யாருக்கோ பொறாமை. அவன் உனக்குத் துராலோசனை சொல்லியிருக்கிறான். நீ பிடிவாதம் செய்கிறாய். உன்னால் மாள்வதை விட பகையாளிக்கு என் உயிரைக் கொடுத்து விடுவதே மேல். தண்டகாரண்யம் போகலாம், எழு" என்றான் மாரீசன்.

ராவணன் மகிழ்ச்சியடைந்து மாரீசனைத் தழுவிக் கொண்டு, "பழைய மாரீசனைக் கண்டேன்" என்றான்.

* * *

இருவரும் ரதம் ஏறி தண்டகாரண்யம் நோக்கிச் சென்றார்கள். பல பட்டணங்களையும் காடுகளையும் மலைகளையும் ஆறுகளையும் அநேக ராஜ்யங்களையும் பார்த்துக் கொண்டே ஆகாய மார்க்கமாகச் சென்றார்கள். சீக்கிரமாகவே தண்டகாரண்யத்தில், ஒரு வாழைத் தோட்டத்தின் மத்தியில் ராமனுடைய ஆசிரமத்தைக் கண்டார்கள்.

பூமியில் இறங்கி ராவணன் மாரீசனுடைய கையைப் பிடித்துக் கொண்டு, "அதோ ராமனுடைய ஆசிரமம் இருக்குமிடம் காணப்படுகிறது. நாம் யோசித்தபடி எல்லாம் செய்வாயாக" என்றான்.

உடனே மாரீசன் தன் சரீரத்தை மாற்றிக் கொண்டு மான் உருவம் தரித்து விட்டான்.

மானின் அழகே அழகு. அதன் உடலில் ஒவ்வொரு பாகமும் ஒரு தனி நிறம். ஒவ்வொரு அங்கமும் விசித்திர அழகு. ஆகாயத்தில் மழைநின்றபோது காணப்படும் வான வில்லின் பல வர்ணங்களோடும் கண்ணைக் கவரும் விதத்தில் அந்த மான் விளங்கிற்று. தங்கமும் வெள்ளியும் வைடூரியமும் பலவித மணி ரத்தினங்களும் புஷ்பங்களும் போல் அதன் உடலில் மாறி மாறிக் காணப்பட்டது. தங்கப் பிரதிமையில் ரத்தின மணிகள் இழைத்து உயிருடன் ஓடினதுபோல் விளங்கிற்று. அது வரையில் உலகத்தில் காணாத மானாக அந்த மாய மான் ஆசிரமத்துக்கு முன் இங்கும் அங்கும் நடந்தது, படுத்தது, எழுந்து துள்ளிக் குதித்தது. கொஞ்ச நேரம்

புல் மேயும், சில சமயம் தல்லைத் தூக்கிச் செடிகளிலுள்ள இளந் தளிரைத் தின்னும், சில சமயம் ஆசிரமத்தை நெருங்கிப் போய் மெள்ள நடக்கும், பிறகு திடீர் என்று துள்ளித் தூர ஓடும். மற்ற மான் கூட்டங்களோடு சில சமயம் சேர்ந்து நடக்கும். சில சமயம் அவற்றை விட்டு விலகும். மற்ற மான்கள் அதை மோந்து மோந்து பார்த்துச் சந்தேகப் பட்டு விலகும்.

சீதை அச் சமயம் வனத்தில் புஷ்பம் பறித்துக் கொண்டிருந்தவள், இந்த மானைப் பார்த்து, 'ஓ என்ன அழகு!' என்று கண் கொட்டாமல் பார்த்து நின்றாள். அப்போது மானும் அவளைப் பார்த்து அவளுக்கு எதிரில் இங்குமங்கும் ஓடியதானது வனத்துக்கே புது அழகு தந்ததைப் போலிருந்தது.

* * *

"ஓடி வாருங்கள், ஓடிவாருங்கள்!" என்றாள் சீதை, தான் பார்த்துக் கொண்டிருந்த மானை ராமனும் லக்ஷ்மணனும் பார்க்க வேண்டு மென்று.

"சீக்கிரம் வாருங்கள், வாருங்கள்" என்றாள் மறுபடியும்.

அவர்களும் வந்து அந்த விசித்திர மானைப் பார்த்து வியந்தார்கள்.

லக்ஷ்மணனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. 'இது மானல்ல, மாரீசன்' என்று உடனே அவனுக்குத் தோன்றிற்று. அதற்கு முன் மாரீசன் மானாக உருவம் தரித்துக் கொண்டு காட்டில் வேட்டையாட வந்த பலரை ஏமாற்றிக் கொன்று தின்று கொண்டிருந்தது ராம லக்ஷ்மணர்களுக்குத் தெரியும்.

லக்ஷ்மணன் "இத்தகைய மிருகம் இயற்கையில் கிடையாது. இது ராக்ஷசனுடைய மோசம்" என்றான்.

"இந்த மானைப் பிடித்து வாருங்கள். இதை ஆசிரமத்தில் கட்டி வளர்க்கலாம். நான் காட்டில் பார்த்த அத்தனை மிருகங்களிலும் இது மிக அழகாக இருக்கிறது. ஐயோ! அதைப் பாருங்கள். என்ன நிறம், என்ன விளையாட்டு, இதற்குச் சமானம் ஏதுமில்லை" என்று சீதை மானைப் பார்த்துத் தாங்க முடியாத ஆசை மேலிட்டு அதைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தாள். "இதை எப்படியாவது பிடித்துத் தாருங்கள்" என்று மிக வேண்டினாள்.

"நாம் ஊருக்குத் திரும்பும் காலம் கிட்டி வந்துவிட்டது. இதை அயோத்திக்குக் கொண்டு போவோம். காட்டிலிருந்து ஏதாவது விசித்திரப் பொருள் நம்முடைய அந்தப்புரத்துக்குக் கொண்டு போக வேண்டுமல்லவா? பரதன் இதை மிகவும் அனுபவிப்பான். இதை நான் அவனுக்குத் தரவேண்டும். எப்படியாவது, நாதா, இதைப் பிடித்து வாருங்கள்" என்று ராமனை வருந்திக் கேட்டாள்.

லக்ஷ்மணனுக்கு விஷயம் பிடிக்கவில்லை என்று கண்டு ராமனை இன்னும் அதிகமாக வருந்திக் கேட்டுக் கொள்ள ஆரம்பித்தாள். ஒரு ஆசை மனத்தைப் பலமாகப் பற்றிக் கொண்டு விட்டால் அதைத் தடுக்கும் நம்முடைய பந்து மித்திரர்கள் மேல் எவ்வளவு பிரியமான வர்களானாலும் கோபம் உண்டாகி விடுகிறது. இதை பகவான் கீதையில் எவ்வளவு பரிஷ்காரமாகச் சொல்லியிருக்கிறார், அது அன்று சீதையின் உள்ளத்தில் நிகழ்ந்துவிட்டது.

* * *

"அதோ தங்கமாகவே இருக்கிறது, பார்! அதோ வெள்ளி மயமாகவே இருக்கிறது, பார்! இதைப் பிடிக்க முடியாமல் போனால் அம்பு எறிந்து, தோலையாவது ஊருக்குக் கொண்டு போவோம். இதைப் போன்ற விசித்திரமான தோல் நாம் பார்க்கப் போவதில்லை. கீழே விரித்து உட்காருவதற்கு எவ்வளவு விநோதமாக இருக்கும்! போய் விடும்! போய்ப் பிடித்து வாருங்கள், அல்லது தோலையாவது எனக்குத் தர வேண்டும்" என்றாள்.

"ஐயோ, அதன் கொம்பைப் பாருங்கள்! இப்படிக் கேட்கிறேனே என்று என் மேல் ஆயாசப் படவேண்டாம்! எனக்கு இதன் பேரில் அவ்வளவு ஆசை. தருவீர்களா, இல்லையா?" என்று விடாமல் ராமனைக் கேட்டுக் கொண்டாள். "நக்ஷத்திரங்கள் போல் பிரகாசிக்கிறது, பாருங்கள்!" என்றாள்.

இவ்வாறு சீதை ஆசைப்படுவதைப் பார்த்து ராமன் நிச்சயம் செய்து கொண்டான். 'லக்ஷ்மணன் சொன்னதில் உண்மை இருந்த போதிலும் ராக்ஷசனாயிருந்தாலென்ன, கொன்று விடுவது நலம்தானே. இதில் பயம் என்ன? பிடிக்க முடியாமல் போனால் அம்பு செலுத்தி மானை அடித்து, சீதைக்குத் தோலைத் தரலாம். அவள் இவ்வளவு பிரியப்படும் பொருளை நான் அவளுக்குச் சம்பாதித்துத் தரவேண்டாமா?' என்று தீர்மானித்துக் கொண்டு லக்ஷ்மணனுக்

குச் சமாதானம் சொல்லி, "வில்லும் அம்பும் கொண்டு வா" என்றான்.

லக்ஷ்மணனுக்குச் சம்மதமில்லை. ஆயினும் ராமன் வில்லும் கையுமாக மானைத் தொடர்ந்து சென்றான்.

"லக்ஷ்மணா, ஜாக்கிரதை! சீதையைப் பார்த்துக் கொள். மானைக் கொன்று விட்டுச் சீக்கிரம் கொண்டு வந்து விடுகிறேன். கவலைப்படாதே. ராக்ஷசனாயிருந்தாலுமென்ன? வாதாபியின் கதி இந்த ராக்ஷசனுக்கும் ஆகும். மோசம் செய்ய வந்திருந்தால் அகஸ்தியரைப் போல் நானும் மோசக்கார ராக்ஷசனை அவன் மோசத்துக்கே அவனை இரையாக்கி விட்டு ஒழிப்பேன். என்னை இந்த மான் என்ன செய்யும்? மானாயிருந்தாலும் சரி, அரக்கனாயிருந்தாலும் சரி" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

"ஜாக்கிரதை! சீதையைப் பார்த்துக் கொள். எந்தச் சமயத்தில் ஏது நேருமோ என்று வெகு ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். அலட்சியமாக இருக்காதே!" என்று போகும்போது சொல்லி விட்டுப் போனான்.

தெய்வம் எல்லா விதத்திலும் விபத்துக்கு ஏற்பாடு செய்து விட்டது. சாதாரணமாக லக்ஷ்மணன் பரபரப்பாக இருப்பான். இந்தச் சமயம் அவனுக்குச் சந்தேகம் உண்டாகி எச்சரிக்கை செய்தான். அதற்கு எதிரிடையாக, எப்போதும் மிக ஜாக்கிரதையாக இருந்த ராமசந்திரன் இந்தச் சமயம் சீதையின் இஷ்டத்தை, சிறிய விஷயத்திலும் பூர்த்தி செய்ய வேண்டும் என்று லக்ஷ்மணன் சொன்னதைத் தட்டி மாய மானைத் தொடர்ந்து போய் விட்டான்.

• • •

ராவணனுக்குப் போதிய அவகாசமும் சந்தர்ப்பமும் தருவதற்காகக் கைக்குச் சிக்குவது போலவே காட்டிக் கொண்டு மானானது ராமனை வெகு தூரம், விதி மனிதனை இழுத்துப் போவது போல், இழுத்துக் கொண்டு போய் விட்டது.

மெல்ல மெல்ல கால் எடுத்து வைக்கும், ஓடாமல் அங்கே நின்று வெறித்துப்



பார்க்கும். திடீர் என்று பயந்தாற்போல் மேலே குதிக்கும். காதை நீட்டும். உடனே நாலு குளம்புகளையும் மார் போடு சேர்த்து மேலே துள்ளும். ஒரே பாய்ச்சலாகக் காட்டிற்குள் காற்று வேகமாக ஓடி மறையும்.

மித்தது மெல்ல மெல்ல
வெறித்தது. வெருவிமீதில்க்
குதித்தது. செவியை நீட்டிக்
குரபதம் உரத்தில்க் கூட்டி
உத்தெழும், ஊதை உள்ளம்
என்றிவை உருவச் செல்லும்
கதிக்கொரு கதியும்வேறே
காட்டிய(து) ஒத்த தன்றே.

மறைந்த மாதிரி கொஞ்ச நேரம் இருந்து திடீர் என்று ஒரு உயர்ந்த இடத்தில் நின்று தன் அழகைத் தனி யாகக் காட்டும். மேகங்கள் ஆகாயத்தில் உலாவ அவற் றோடு கலந்து காட்சி தரும். பிடித்து விடலாம் போல் கிட்ட நிற்கும் — கிட்டப் போனால் தூரமாகப் போய் விடும். நின்றது போல் இருக் கும், அப்படியே மறைந்து விடும்.

குன்றிடை இவரும் மேகக்
குழுவிடைக் குதிக்கும், கூடச்
சென்றிடின் அகலும், தாழின்த்
தீண்டலாம் தகைமைத் தாகும்
நின்றதே போல நீங்கும்
நெறிவழி நேயம் நீட்டும்
மன்றலங் கோதை மாதர்
மனம் எனப்போயிற் றம்மா!

மாரீசனுக்கும் மரணம் கிட்டியது என்று பட்டு விட்டது. அதே கணத்தில் ராமனும் 'இனி போதும் தொடர்ந்தது' என்று வில்லை வளைத்து அம்பைச் செலுத்தினான். மாரீசன் "ஐயோ, சீதையே! ஐயோ, லக்ஷ்மணா!" என்று ராமன் குரலில் உரக்கக் கத்தி விட்டு மாண்டான். மானும் சமயம் நிஜ வடிவம் வந்து விட்டது. மலை போன்ற சரீரத் துடன் மாரீசன் ரத்தம் பெருகப் பூமியில் விழுந்து புரண்டு இறந்தான்.

"லக்ஷ்மணன் சொன்னது மெய்யா யிற்று" என்றான் ராமன். மோசத்தைக் கண்டான்.

"இந்தக் கூக்குரலைக் கேட்டு சீதை என்ன வென்னவோ எண்ணிப் பயப் படுவாளே!" என்று யோசித்தான்.

பிறகு 'ஆனால் பயம் என்ன? லக்ஷ்ம ணன் பக்கத்திலிருக்கிறானல்லவா?' என்று சமாதானப்படுத்திக் கொண்டான்.

வெய்ய வன்தன்
உருவொடு வீழ்தலும்
செய்ய(து) அன்றெனச்
செப்பிய தம்பியை
'ஐயன் வல்லன்! என்
ஆருயிர் வல்லன்! நான்
உய்ய வந்தவன்
வல்லன்!' என்றுன்னினான்.




"எத்தகைய தம்பியை நான் பெற் றேன்! வனத்தில் எனக்கு எத்தகைய துணைவனைப் பெற்றேன்!" என்று ராமன் தன் அன்புக்குரிய இளைய பெரு மானை நினைத்து நினைத்து மனத்தில் பாராட்டுகிறான். அடுத்த கணம் தம் பிக்கு என்ன நேரிடுகிறது, அவன் காதில் எத்தகைய நாராச மொழிகளைக் கேட்க வேண்டியதாகிறது என்பதை அறியான் ராமன். விதியோ விதி!



# தங்க மாம்பழம்

பாப்பா மலர் தொடர்கதை

ராஜு

## 17. யார் இந்த நொண்டி ?

அந்த இருட்டில் தட்டுத் தடுமாறிக் கொண்டு, பிரபாகரனும் உமாவும் குடிசையின் அருகில் சென்று பார்த்தார்கள். அந்தக் குடிசை அந்த ஏரியின் மத்தியில் அன்று காலையிலோ அல்லது அதற்கு முன் நாளோ தான் போடப்பட்டிருக்க வேண்டும் என்று யாவரும் எளிதில் தெரிந்து கொள்ளலாம். பிரபாகரனும், உமாவும் குடிசையின் அருகில் போகும் பொழுது மினுக் மினுக் கென்று விடி விளக்கு எரிவது போல ஒரு சிறிய விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பார்ப்பதற்கு அது குடிசையைப் போலத் தோன்றினாலும் உள்ளே சற்று விசாலமாகவே இருந்தது. வாசல் பக்கம் காவி வஸ்திரம் தரித்த சந்நியாசி ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவர் சற்று வாலிபப் பருவம் உள்ளவராகவே காணப்பட்டார்.

பிரபாகரனையும், உமாவையும் பார்த்து, "நீங்கள் யார்? இங்கே நீங்கள் வரக் காரணம் என்ன? ஏதாவது இருட்டில் வழி தவறி வந்து விட்டீர்களா?" என்று கேட்டார் அந்தச் சந்நியாசி.

"இல்லை, இல்லை. நாங்கள் இந்த இடத்தைத்தான் தேடிக் கொண்டு வந்தோம். நாங்கள் இந்த ஊருக்குப் புதிது. என் பெயர் பிரபாகர். இவள் என் தங்கை. இவள் பெயர் உமா. நாங்கள் ஒரு துறவியினால் இங்கு அனுப்பப் பட்டோம்" என்றான் பிரபாகரன்.

"துறவியா? எந்தத் துறவி? நானும் ஒரு துறவிதான். நீங்கள் யாரைச் சொல்லுகிறீர்கள்?" என்று பெரு வியப்புடன் கேட்டார் அவர்.

"அந்தத் துறவி சற்று வயதானவர். உங்களைப் போல அவருக்கும் நீண்ட மீசையும் தாடியும் உண்டு. ஆனால் அவர் தாடி சற்று நரைத்திருந்தது. இந்தக் குடிசையில் ஒரு பெரியவர் இருப்பார் என்றும் அவரிடமிருந்து வில்லையும் அம்பையும் பெற்றுக் கொள்ளலாம் என்றும் சொல்லி விட்டுப் போனார். அதற்காகவே இங்கு வந்தோம்."

"அப்படியா! அவர் உங்களை எங்கு சந்தித்தார்?" என்று கேட்டார்.

"பெரிய கோவில் சன்னதியில்."

"அப்படியானால் உள்ளே வாருங்கள்" என்று சொல்லியபடி துறவி பிரபாகரனையும் உமாவையும் அழைத்துச் சென்றார்.

உள்ளே ஒரு பெரிய மான் தோலின் மீது விபூதி உருத்திராக்ஷங்களை அணிந்து கொண்டு ஒரு வயோதிகர் உட்கார்ந்திருந்தார். அவருக்கு எதிரே ஒரு குத்து விளக்கு எரிந்து கொண்டிருந்தது. தெய்வங்களின் படங்களும் மாட்டி யிருந்தன.

அன்றிரவு உமாவும் பிரபாகரனும் அங்கேயே தங்கினார்கள்.

மறு நாள் விடியற்காலையில் கோழி கூவியது. பிரபாகரனும் உமாவும் திடீரென்று படுக்கையை விட்டு எழுந்தார்கள். பெரியவரின் எதிரில் போய் நின்றார்கள்.

"நாங்கள் இரவு நன்றாகத் தூங்கினோம். நீங்கள் எங்களுக்குக் கொடுத்த பாலும், பழங்களுக்கும் எங்களது நன்றி" என்றான் பிரபாகரன்.

அந்தப் பெரியவர் மௌன விரதம் அனுஷ்டிப்பவர். ஆதலினால் தமது இரண்டு கைகளினாலும் சுவாமியின் படங்களை நோக்கிக் காண்பித்தார்.

அதற்கு, 'எல்லாம் எங்கும் நிறைந்த ஈசன் செயல்' என்று சொல்கிறார் என்று

சந்நியாசி அவருடைய சைகைகளுக்குப் பொருள் படுத்தினார். அப்பொழுது பெரியவர் முன்னிலையில் ஒரு பெரிய வில் காணப்பட்டது. ஒரு அம்பறாத் தூணியும் அதில் பல அம்புகளும் இருந்தன. அதைப் பார்த்த பிரபாகரனும், உமாவும் ஆச்சரியமடைந்தார்கள். அவர்களுக்கே அந்த வில்லும் அம்புகளும் முன்பாகவே அங்கிருந்தனவா அல்லது அப்பொழுதுதான் தோன்றினவா என்று தெரியவில்லை. பெரியவர் அந்த வில்லை எடுத்தார். அதன் மீது அங்கு வைக்கப்பட்ட ஒரு குங்கும டப்பியிலிருந்து குங்குமத்தை எடுத்து அந்த வில்லின் இரு பக்கங்களிலும் தடவினார். ஒவ்வொரு அம்பையும் எடுத்துக் குங்குமத்தைத் தடவினார். தம் கைகளினாலேயே பிரபாகரனிடம் கொடுத்தார்.

"நாங்கள் சென்று வருகிறோம். நாங்கள் எடுத்துக்கொண்டிருக்கும் காரியம் வெற்றி பெற வேண்டுமே என்ற கவலைதான் எங்களுக்கு நாளுக்கு நாள் அதிகரிக்கிறது!'' என்று பிரபாகரனும் உமாவும் சேர்ந்தே சொன்னார்கள்.

அவர்களை ஆசீர்வதிப்பது போலப் பெரியவர் ஏதோ சைகை காட்டினார்.

"ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம். நடப்பது நடந்தே தீரும். எல்லாம் ஈசன் விட்ட வழி என்று உங்களை ஆசீர்வதிக்கிறார். நீங்கள் கவலை இல்லாமல் சென்று வாருங்கள்'' என்று சொல்லி அவர்களை வழியனுப்பினார் சந்நியாசி.

* * *

பிரபாகரனும் உமாவும் துறவி சொல்லியபடி மாயா மகேந்திரபுரத்தின் எல்லையைத் தாண்டிக் கிழக்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள்.

"அண்ணா, உனது முதுகுப்புறம் கட்டியிருக்கும் அம்பறாத் தூணியையும் நீ கையில் மாட்டிக் கொண்டிருக்கும் வில்லையும் பார்த்தால் காட்டுக்கு வேட்டையாடச் செல்லும் ஒரு வேடனைப் போலவே தோற்றமளிக்கிறாய்!'' என்றாள் உமா.

"ஆமாம்; நான் இப்பொழுது வேடனைப் போலத் தானிருப்பேன். காரியத்திலும் வேடனைப் போல இருந்தால்தான் கைகூடும். உமா, துறவி சொல்லியதை நினைத்துப் பார். நாம் கட்டாயம் ஒரு காட்டைக் கடந்தே ஆக வேண்டும். அங்கிருக்கும் துஷ்ட மிருகங்களிடமிருந்து எப்படித் தப்பிக் காட்டைத் தாண்டப் போகிறோமோ, தெரிய வில்லை. அதை நினைத்தாலே எனக்குப் பயமாக இருக்கிறது'' என்றான் பிரபாகரன்.

"அண்ணா, எனக்கும் மிகவும் பயமாக இருக்கிறது. அந்தக் காட்டில் என்னை மாத்திரம் தனியாக விட்டு விட்டு எங்கும் போய் விடாதே!'' என்று நடுங்கிக் கொண்டே சொன்னாள் உமா.

"உமா, நீ பயப்படாதே! நான் அந்தக் காட்டுக்குப் போவதற்குள் நன்றாக வில்லை விடக் கற்றுக் கொண்டு விடுகிறேன். நான் விடுகிற அம்பை நீ ஒவ்வொன்றாகப் பொறுக்கிக் கொண்டு வர வேண்டும், தெரியுமா?'' என்றான் பிரபாகரன்.

"காட்டை நாம் அடைவதற்குள் நீ வில்லை விட நன்றாகப் பயிற்சி செய்து கொள்ளலாம். எங்கே அதோ தெரிகிறதே, அந்தத் தென்னை மரத்தின் அடி பாகத்தைப் பார்த்து அம்பை விடு பார்க்கலாம். எனக்கும் நீ விடுகிற அம்பை எடுத்துக் கொண்டு வரச் சௌகரியமாக இருக்கும்'' என்றாள் உமா.

பிரபாகரன் அம்பை எடுத்து, குறி பார்த்து விடுவதும் கீழே விழுந்த அம்பை உமா பொறுக்கிக் கொண்டு வருவதுமாக வேடிக்கையாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் அப்படிப் போனதினால் அவர்களுக்கு வெகு தூரம் நடந்தும் நடந்த களைப்புத் தெரியவே இல்லை.

"உமா, அதோ பார்த்தாயா, துறவி அடையாளம் சொல்லிய இடிந்த பாலம்! அதன் பக்கத்திலே வழிகாட்டி! வா, சீக்கிரம் போகலாம்'' என்று அவளை அழைத்தான் பிரபாகரன்.

வழிகாட்டி மரத்தில் துறவி சொல்லிய படியே வடக்கு நோக்கிச் செல்லும் பாதையைத் தவிர மற்றைய மூன்று திக்கிலுள்ள இடத்துக்கும் பெயர் எழுதி இருந்தது.

"உமா, வா! நாம் இதோ வடக்கு நோக்கிச் செல்லும் பாதை வழியாகப் போகலாம்'' என்றான் பிரபாகரன்.

அதற்கு உமா, "அண்ணா, மற்றைய மூன்று பாதைகளும் விசாலமாக இருக்கும் பொழுது இந்தப் பாதை மாத்திரம் மிகவும் குறுகியதாகக் காணப்படுகிறதே! இதைப் பார்த்தாலே எனக்கு மிகவும் பயமாக இருக்கிறதே!'' என்றாள்.

"சரிதான்! இந்தப் பாதையைப் பார்த்தே நீ பயப்படுகிறாயே! துறவி சொல்லிய அந்தக் காட்டை அடைந்தால் நீ என்ன பண்ணுவாயோ? அதை நினைத்தால் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது. உனக்குப் பயமாக இருந்தால் உன்னை எங்கேயாவது ஓர் இடத்தில் தங்கச் செய்து விட்டு நான் சென்று வருகிறேன்'' என்றான் பிரபாகரன்.

"அண்ணா, வேண்டாம்! வேண்டாம்! எனக்குப் பயமில்லை. உன்னுடன் நான் இருப்பேன்'' என்று சொல்லி விட்டுப் பயமடையாதவள் போலப் பிரபாகரனுக்கும் சற்று முன்னதாகவே அந்தக் குறுகிய பாதையில் நடந்து செல்ல ஆரம்பித்தாள்.

துறவி சொல்லிய பொழுது அடர்ந்த காடு திசைகாட்டி மரத்துக்கு அருகாமையிலேயே இருப்பது போல் தோன்றியது. ஆனால் இவர்கள் பல நாட்கள் சென்றும்

அந்தக் காட்டை அடைய முடியவில்லை. இரவிலும் பகலிலும் சரியான தூக்கமும் கிடையாது. கிடைத்த ஆகாரத்தை உட்கொண்டு ஆங்காங்கே இளைப்பாறித் தங்கள் வழியே சென்று கொண்டிருந்தார்கள், பிரபாகரனும் உமாவும். ஆனால் பிரபாகரன் என்ன களைப்படைந்தாலும் வில் விட்டுப் பழகிக் கொள்வதை மாத்திரம் நிறுத்தவேயில்லை. உமாவும் அவனுக்கு உதவிபுரிந்து வந்தாள். அம்புகளைப் பொறுக்கி எடுத்து வந்து ஒத்தாசையாக இருந்தாள். வெகு தூரம் குறுகிய பாதையிலேயே நடந்த அவர்கள் தங்களுக்கு எதிரே ஒரு விசாலமான இடத்தைப் பார்க்கவே அளவு கடந்த சந்தோஷம் கொண்டார்கள். அந்த விசாலமான இடத்தில் ஜனங்களின் நடமாட்டம் அதிகமாக இருந்தது. அந்த விசாலமான இடத்திலிருந்து பல பாதைகள் பிரிந்து சென்றன.

பிரபாகரன் எந்தப் பக்கம் சென்றால் காட்டுக்குச் செல்லலாம் என்று தெரியாமல் விழித்தான்.

அந்த விசாலமான இடத்தில் ஒரு ஓரமாக நொண்டி ஒருவன் ஒரு கழியை ஊன்றியவாறு நின்று கொண்டிருந்தான். பிரபாகரன் அவனிடம் நெருங்கி "ஐயா, இந்தப் பட்டணத்துக்குப் பெயர் என்ன?" என்றான்.

"இந்தப் பட்டணத்துக்கா, ஐயா! இந்தப் பட்டணத்துக்குப் பெயர் பீமபுரம். இந்தப் பட்டணத்தை ஆளும் அரசனுக்கும் 'பீமவர்மன்' என்று பெயர். இந்த அரசன் மிகவும் பொல்லாதவன்" என்று கூறிவிட்டுப் பின் ஏதோ சொல்ல யத்தனித்தான்.

உடனே பிரபாகரன், "அந்த அரசனைப் பற்றி நான் ஒன்றும் உம்மைக் கேட்கவில்லை. நான் கேட்ட கேள்விகளுக்கு மாத்திரம் பதில் சொல்லும்" என்றான்.

"ஐயா, எனக்குத் தெரிந்ததை உமக்குச் சொல்லலாம் என்று நினைத்தேன். 'வேண்டாம்' என்றால் விட்டு விடுங்களேன். ஏன் இப்படிக் கோபிக்கிறீர்கள்?" என்று தன் தடியை எடுத்துக் கொண்டு புறப்படத் தயாராக இருந்தான்.

"ஐயா, கோபித்துக் கொள்ளாதீர்! அடர்ந்த காடு ஒன்று இருக்கிறதாமே, அதற்குப் போகும் வழியை மாத்திரம் எங்களுக்குக் காண்பித்து விடுங்கள், அது போதும்!" என்றான் பிரபாகரன்.

"எதற்காக நீங்கள் அங்கு போக வேண்டும்? வேண்டாம், அந்தப் பக்கமே போகாதீர்கள். அங்கே துஷ்ட மிருகங்கள் நிறைய இருக்கின்றன. அரசனால் அனுப்பப்பட்ட கைதிகளாவது அல்லது அரசனுக்கு வேண்டாதவர்களாவது தான் அங்கு கொண்டு போகப் படுவார்கள். வேறு ஒருவரும் அங்கே போகக் கூடாது. போனால் நீங்கள் அந்தக் காட்டை விட்டுத் திரும்பி வரலாம் என்ற எண்ணத்தை விட்டுவிட வேண்டியதுதான். கட்டாயம் துஷ்ட மிருகங்களுக்கு இரையாவீர்கள். இல்லாவிட்டால் என்னைப் போல ஒரு நொண்டியாகத் திரும்பி வரவேண்டியதுதான்!"

"அப்படியென்றால் உங்களுக்கு இந்தக் காலுக்கு ஏற்பட்ட அபாயம் அந்தக் காட்டிலுள்ள துஷ்ட மிருகங்களால் ஏற்பட்டதா?" என்று நொண்டியிடம் ஆவலுடன் விசாரித்தான் பிரபாகர்.



"இல்லை, இல்லை. காட்டு மிருகங்களால் ஏற்பட்டதல்ல. காட்டுக்குள்ளே அரசாங்க உத்தரவு இல்லாமல் போகவே முடியாது. ஒருவரும் அதற்குள் போகவே விரும்ப மாட்டார்கள். நீங்கள் எதற்காக அங்கு போக விரும்புகிறீர்கள்?" என்று கேட்டான் நொண்டி.

"கல்லறைத் தீவுக்கு அதன் வழியாகத் தான் போக வேண்டுமாமே" என்றான்.

"சரிதான்! காட்டுக்குள் போவது ஒரு அபாயம். அதைவிட அபாயமான இடத்துக்குப் போகவேண்டுமென்கிறீர்கள். உங்களைப் பார்த்தால் இவ்வூருக்குப் புதிது போலவும் தெரிகிறது. உயிருக்கு அபாயமான விஷயத்தில் தலையிட வேண்டாம். பேசாமல் திரும்பிச் செல்லுங்கள். காட்டுப் பக்கம் போவதாக அரசனுக்குத் தெரிந்தால் உங்களைக் கட்டாயம் கைது செய்துவிடுவான்" என்றான் நொண்டி. (தொடரும்)

# குப்பண்ணுவும் காங்கிரசும்

"மீனாகு"

"என்ன, குப்பண்ணு! பண்டிகைகள் விழாக்கள் எல்லாம் ஒரு நிலுசாக முடிந்ததா!" என்று அலுப்புத் தட்டிய முகத்துடன் வந்த குப்பண்ணுவைக் கேட்டேன்.

"அப்பப்பா! போதும், போதும்! டிசம்பர் மாதம் வந்தாலும் வந்தது! மூச்சுவிட அவகாசமில்லை! இந்த வருஷம் உள்ளூர் காட்டியமும் சங்கீதமும் போதாததற்கு, சினகோஷ்டி வேறு வந்து நாலு நாள் கூத்து ஆடினார்கள். எதைப் பார்ப்பது! எதை விடுவது!" என்று குப்பண்ணு அங்கலாய்த்தான்.

"நீதான் ஒன்று விடாமல் 'கவர்' பண்ணியிருப்பாயே!" என்றேன்.

குப்பண்ணு ஒரு பெரிய அஷ்டாவதானி. ஊரில் கல்யாணம் என்றால் மார்பில் சந்தனம் தான்! எந்த இடத்தில் எந்த விசேஷம் நடந்தாலும் அங்கு அவன் உருவம் இங்கு மங்கும் ஓடியலைந்து கொண்டிருக்கும்; அவன் குரல் கேட்காமல் இருக்காது. மிகவும் தேர்ந்த பத்திரிகை நிருபர்கள் கூடக் குப்பண்ணுவிடம் 'கவரேஜ்' விஷயத்தில் புறங்காட்டி ஓடவேண்டும்.

"சரி! டிசம்பர் கலை விழாக்கள் போதாததற்கு மகாநாடுகள் வேறு! இந்த வருஷம் அதிலும் ஒரு விசேஷம்! நம் ஊரில் ஒரு பெரிய சமாதான மகாநாடுகூடக் கூடிப் பிரமாதப்பட்டது" என்றான் குப்பண்ணு.

"சரி, டிசம்பர் முடிந்ததே! சற்று ஓய்வெடுக்கலாம் என்று பார்த்தால், எங்கே முடிகிறது! தியாகப் பிரம்ம மகோத்ஸவம் வந்து விட்டது!" என்றான் குப்பண்ணு.

"அப்படியானால் திருவையாற்றிலும் தாங்கள் பிரசன்னமாகியிருந்தீர்களோ! வாஸ்தவம்! இல்லாவிட்டால் யார் விடுகிறார்கள்! — ஆனால் திருவையாறு உற்சவத்தை மைசூர் முதலமைச்சர் அல்லவா திறந்து வைத்ததாகக் கேள்விப்பட்டேன்!"

"தியாகராஜ உத்ஸவம் திருவையாற்றில்தான் நடக்கிறது என்று நினைக்கிறாயா! நாடெங்கும், கர்நாடக சங்கீத ரஸிகர்கள் உள்ள இடங்களில் எல்லாம் நடக்கிறது!" என்றான் குப்பண்ணு.

"ஆமாம். நாடெங்கும் வருஷம் பூராவும் கூட நடக்கிறாப் போலிருக்கிறது. பொங்கல் போன்ற பண்டிகைகள் இரண்டு மூன்று குறிப்பிட்ட நாட்களில் முடிந்து விடுகின்றன. தியாகராஜ உற்சவம் போன்ற விழாக்களுக்கு நாள் கிழமை நக்ஷத்திரம் பார்ப்பானேன்! வருஷம் பூராவும் அவரவர்கள் சௌகரியப்படியும் பெரிய வித்வான்கள் பங்கெடுத்துக் கொள்ள வசதியுள்ள தேதிகளிலும் வைத்துக் கொள்ளலாமல்லவா!" என்றேன்.

"அது சரிதான். இப்போது பாரு! ஆந்திராவில் ஸ்ரீ தியாகப் பிரம்ம உற்சவம் நடத்தப் போகிறார்களாம். அதற்கு நம்முடைய வித்வான்களுக்கெல்லாம் அழைப்பு வந்திருக்கிறது!" என்றான்.

"அப்படியானால் உன் 'கவரேஜ்' ஆந்திராவுக்கும் பரவும்! ஆந்திர சகோதரர்களுக்கு எச்சரிக்கை விட வேண்டும்! அது கிடக்கட்டும். தியாகய்யர்தான் சௌகரியமாகத் தெலுங்கில் சாஹித்யங்கள் செய்து வைத்துப் போயிருக்கிறாரே! ஆந்திரகலா கேசரிலு மணவாளனுவை எதற்காக அழைக்க வேண்டும்! ஆந்திர வித்வான்களே தியாகய்யர் பாட்டுகளைப் பாடினால் அரவவாள்ளுவை விட சாஹித்ய சுத்தமாவது இருக்குமே!" என்றேன்.

"அதென்னமோ வாஸ்தவம்! ஆனால் நம் தமிழன் திறமை வேறு யாருக்கு வரும்! இங்லீஷோ, ஹிந்தியோ, தெலுங்கோ, கன்னடமோ, ஜெர்மனோ, ரஷ்ய பாஷையோ, சீன பாஷையோ எதுவாயிருந்தாலும் நம் தமிழர்களுக்கு அதில் கரைகண்டு விடும் திறமை இருக்கிறது! இன்னும் சொல்லப்போனால் அந்தப் பிற பாஷைகளைப் பேசுபவர்களையே மண் கவ்வச் செய்வார்கள்! அதனால் தான் ஆந்திராவிலும் நமது வித்வான்கள் தியாகய்யர் கீர்த்தனங்கள் பாடத் தேவையாக இருக்கிறது" என்று தொண்டையைக் கனைத்துக் கொண்டான் குப்பண்ணு!

"ஏதப்பா! தொண்டை கட்டி இருக்கிறது...... நீ ஒன்றும் கச்சேரி கிச்சேரி செய்து விடவில்லையே!" என்று திகைப்புடன் கேட்டேன்.

"இல்லை......இந்த மார்கழி மாதம் மற்ற விழாக்களுடன், பஜனைகளும் அறநெறி கடவுள் வழிபாடு, திருப்பாவை திருவெம்பாவை இவையெல்லாம் அதிகம். நாஸ்திகப் பிரசாரம் மும்முரமாக ஆக, நம் ஜனங்கள் கடவுள் வழிபாட்டில் தீவிரமாக முனைந்து விட்டார்கள். இதில் எல்லாம் என்னையும் கட்டி இழுத்தார்கள்; என்ன செய்வது!"

"அது உண்மை! நீ இல்லாவிட்டால் கடவுள் கதி என்ன ஆவது!...மார்கழி பஜனை என்றாயே! அதன் உள்ளர்த்தங்கள், ஆதி சரித்திரம் தெரியுமா உனக்கு!" என்றேன்.

"தெரியாமல் என்ன! அந்தக் காலத்திலேயே பக்தி மார்க்கத்தில் பொது மக்களைப் பெருவாரியாக ஈடுபடச் செய்யும் முறையாக நம் ஆழ்வார்களும் நாயன்மார்களும் காட்டிய ஒரு வழி!"

"அதுமட்டுமில்லை. இப்போது திருப்பாவை, திருவெம்பாவையை எடுத்துக் கொள். அது முழுவதும் பெண்கள் பாடுவதாக ஐதீகம். திருப்பாவை ஆண்டாள் அருளிய பாக்கள். இந்த பக்திமார்க்கத்தில் பெண்களை முக்கியமாக ஈடுபடுத்திவிட்டால், ஆண்கள் தாங்களே வழிக்கு வந்து விடுவார்கள் என்ற எண்ணத்தில்தான் அவ்வாறு அமைத்திருக்க வேண்டும்" என்று குப்பண்ணு விளக்கினான். இது குப்பண்ணுவின் சொந்தச் சரக்கல்ல என்பது மட்டும் விளங்கிற்று. யாரோ பெரியவர்கள் செய்த விளக்கத்தையே அவன் கிரகித்திருக்கிறான் எனத் தெரிந்தது.

"ஆமாம்! இப்போது காங்கிரஸ் நம் ஊரில் நடக்கப் போகிறதே! நீ சும்மா இருக்கிறாயே!" என்றேன். "சும்மாவா இருக்கிறேன்! இதோ பார்!" என்று கதர் குல்லா, ஒரு துணி 'பாட்ஜ்' (அடையாள பில்லை) எல்லாவற்றையும் பையிலிருந்து எடுத்துக் காட்டினான்.

"இதோ ஆவடிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்றான்.

"ஆவடியில் எல்லாம் மழையினால் ஒரே சேறாக இருக்கிறது என்கிறார்களே! எப்படி அங்கு காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நடைபெறும்!" என்று கேட்டேன்.

"மழை கிழை பெல்லாம் நின்றுவிடும். இனி பயமில்லை" என்று அபயமளித்தான். குப்பண்ணு மழையையே நிறுத்தும் மகான் என்று அறிந்தேன்.

"ஆவடிக்கு நீ வந்து பார்! தெரியும். அடாடா! அங்கு ஒரு புது உலகமே சிருஷ்டியாகி விட்டது. அந்தக் கோபுரம் ஒன்றே போதும். நம் தமிழ் நாட்டுப் பெருமையின் சின்னமாக விளங்கு

கிறது. இரண்டு லக்ஷம் ஜனங்களுக்கு நமது தலைவர் களைக் காணும் பாக்கியமும் வசதியும் கிடைக்கப் போகிறது. இந்த வருஷத்து காங்கிரஸ் மிகவும் விசேஷம் பொருந்தியது இல்லையா!''

"ஆமாம்! முதலில் நம் தமிழ் நாட்டில் நடக் கிறது!— இருபத்தேழு வருஷங்கள் கழித்து,— காங்கிரஸ் அறுபதாம் ஆண்டும் இந்த வருஷம் நமது சென்னையில் — அதாவது — ஆவடியில் நிறைவு பெறுகிறது!'' என்று எனக்குத் தெரிந் ததைச் சொன்னேன்.

"உண்மையில் இது ஷஷ்டியப்த பூர்த்திக்கு மேல் ஒரு படி. இது காங்கிரஸ் மகாசபையின் அறுபதாம் கூட்டம். காங்கிரஸ் வயது எழுபது ஆண்டுகள் இப்பொழுது'' என்று குப்பண்ணு திருத்தினன்.

"இதில் விசேஷம் பார்த்தாயா! காங்கிரஸுக்கு வயதாக ஆக, அதை நடத்தும் பொறுப்பு இப் போது இளம் தோள்களில் ஏறி இருக்கிறது. மகாத்மா காந்திக்குப் பிறகு என்றும் இளமை மாருத வாலிபர் ஜவாஹர்லால்ஜிதான் அந்தப் பொறுப்பைத் தாங்கி வந்தார். இந்த வருஷத்தி லிருந்து வயதில் இளமை பெற்றிருக்கும் தோள் களுக்கு அந்தப் பொறுப்பு மாறுகிறது. சென்னை யில்தான் இருபத்தேழு வருஷங்களுக்கு முன் காங்கிரஸ் சுதந்திரத் தீர்மானத்தை முதலில் ஜவாஹர்லால்ஜியின் கைக்கத்தினுல் நிறைவேற்றி யது. இப்பொழுது மீண்டும் அவருடைய உப தேசப்படியே சமதர்ம (ஸோஷலிஸ்டு) இலட்சியக் கொள்கையை நிறைவேற்றப் போகிறது......'' என்று குப்பண்ணு உற்சாகத்தில் மூழ்கினன்.

"அதிருக்கட்டும்! நீ உன்னுடைய இட்லிக்கொள் கையை மாற்றப் போவதில்லையே!'' என்றேன்.

"அதையும் ஒரு விதமாக இந்தக் காங்கிரஸில் மாற்றிவிடப் போகிறேன். காலையில் சுடச்சுட இட்லி, காப்பி நம்ம ராமநாதையர்வாள் சம்பந் தம் அவர்கள் உபயத்தில், எலெக்ட்ரிக் இட்லியே எப்பொழுதும் சுடச்சுட, ஆவடியில் கிடைக்கப் போகிறது. மாலைப் பொழுதினிலே......'' என்று குப்பண்ணு ஆரம்பித்ததும் பாடி அபிநயம் பிடிப் பானே என்று பயந்து கண்ணையும் காதையும் பொத்திக் கொண்டேன். நல்ல வேளையாக அப்படி அபாயம் ஒன்றும் ஏற்படவில்லை.

"......கோதுமை சப்பாத்தி, பூரி, பாசந்தி...டீ ...இப்படி அல்ப ஆகாரம்'' என்று முடித்தான்.

"ஆவடியில் அப்படியானுல் ஒன்றும் குறை வில்லாமல் ஜோராக நடக்கும். ஆனல் என் போன்ற சாதாரண ஜனங்கள் எப்படி ஆவடிக்கு வருவது!'' என்றேன்.

"காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் 21, 22, 23-ந் தேதிகளில் மாலை 4-மணிக்கு நடைபெறுகிறது. அதற்குத் தினசரி 1 ரூபாய் டிக்கட்டு வாங்கிக் கொண்டால் யாரும் வரலாம். ரயில் பஸ் எல்லாம் 5, 10, 15 நிமிஷத்துக்கு ஒன்ருக ஓடிக் கொண் டிருக்கும். கட்டாயம் வருகிருயா!'' என்று கேட்டான் குப்பண்ணு.

"நம் ஊரில் நடக்கும் காங்கிரசுக்கு நாமே போகாமலிருப்பதா! அப்புறம் ஜவாஹர்லால்ஜி ஏதாவது நினைத்துக் கொள்வார்! கண்டிப்பாக வருகிறேன். உன்னை எங்கே பார்க்கலாம்! மேடைமேலா......இட்லி இலாகாவிலா!'' என்று கேட்பதற்குள், குப்பண்ணு கைக் கடியாரத்தைப் பார்த்து விட்டு, "அடாடா! 'டைம்' ஆகிவிட் டதே'' என்று மாயமாக மறைந்தான்.

# படித்துப் பாருங்கள்!

## Madras Information ஆண்டு மலர் 1955

நமது சென்னை ராஜ்ய சர்க்காரின் செய்தி இலாக்காவினுல் வெளியிடப்பட்டு, சென்னை அரசாங்க அச்சகத்தில் பிரசுரமாகியிருக்கும் Madras Information பத்திரிகையின் புத்தாண்டு மலர், கையில் எடுத்ததுமே ரதோத்ஸவக் காட்சி யுடன் கண்ணைக் கவர்கிறது. ரதம் புறப்பட்டு வருவதும், கோவில் சின்னங்களுடனும், நாகஸ்வர கோஷ்டியுடனும் திரளான மக்கள் மொய்த்து நிற்பதும், வர்ணலங்காரமாக அட்டை யிலே கோலம் தருகின்றன. உள்ளே திறந்ததும் தேசப் பிதா மகாத்மா காந்தியின் திருவுருவப் படம், மோகனப் புன்முறுவலுடன்! இதைத் தொடர்ந்து ஜனதிபதி டாக்டர் ராஜேந்திர பிர ஸாத், உப ஜனதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன், பிரதம மந்திரி பண்டித நேரு, சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா, சென்னைப் பிரதமர் ஸ்ரீ காமராஜர், சென்னை ராஜ்ய மந்திரிகள்—இப்படியாகப் புகைப் படங்களாக நிரம்பியிருக்கிறது மலர். சென்னை கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா, சென்னைப் பிரதமர் ஸ்ரீ காமராஜர், விந்தியப் பிரதேச கவர்னர் ஸ்ரீ கே. சந்தானம், சென்னை ராஜ்ய மந்திரிகள் ஸ்ரீ பக்த வத்ஸலம், ஸ்ரீ ராமசாமிப் படையாச்சி முதலி யோரின் அதிகார பூர்வமான விஷய தானங்களும், இலாகா அதிபர்களின் கட்டுரைகளுமாக மலர் படிப்பதற்கு ரஸமாக இருக்கிறது. வழவழப்பான ஆர்ட் காகிதத்தில் நூறு பக்கங்கள் வரை உள்ள இந்த மலரின் விலை எட்டு அணுதான். இவ்வளவு மலிவான விலையில் இவ்வளவு சிறப்பான மலரை வெளியிட்ட சென்னை அரசாங்கத்தையும், அதன் செய்தி இலாகாவையும் பாராட்டுகிறோம்.

கிடைக்கும் இடம்: Director of Information and Publicity, Govt. of Madras. விலை அணு 8.

## Agfa Photo Gallery

புகைப்படக் கலை என்பது "ஆய கலைகள் அறுபத்து நான்கோ''டு, அறுபத்தைந்தாவதாக வைத்து எண்ண வேண்டிய ஒரு அருமையான கலையாகும். இதன் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை யாக இருப்பவை, போட்டோ ஸ்தாபனங்களாகும்.

பம்பாய் ஆக்பா ஸ்தாபனத்தார் இப்பொழுது இவ்வகையில் இன்னெரு புதிய முயற்சியைத் தொடங்கியிருக்கிறார்கள். "ஆக்பா போட்டோ காலரி'' என்ற பெயர் கொண்ட ஒரு புகைப்படப் பத்திரிகையை இரண்டு மாதத்துக்கு ஒரு முறை வெளியிட்டு வருகிறார்கள். இந்தப் பத்திரிகை ஆக்பா சாதனங்களை உபயோகித்து வருபவருக்கு என்று இலவசமாக வழங்கப்படுகிறது.

பத்திரிகை பார்ப்பதற்கு அழகான முறையில் வழ வழப்பான ஆர்ட் காகிதத்தில் எட்டுப் பக்கங்களில் கைக்கு எளிதாய், சிறிய புத்தக அள வில் இருக்கிறது. வெறும் வியாபாரமாக இராமல் போட்டோக்கலையை வளர்க்கும் முறையில் அமைந் துள்ள ஆக்பா ஸ்தாபனத்தின் இந்த முயற்சியைப் புகைப்படப் பிரியர்கள் நிச்சயம் வரவேற்பார்கள்.

பத்திரிகை கிடைக்கும் இடம்: Agfa Photo Gallery, Bombay—1.

—"புதன்"

# ரஸமான க்ஷணங்கள் ஒவ்வொன்றையும் என்றும் நிலைத்திருக்கச் செய்யுங்கள்

இவ்வளவு குறைந்த செலவில் இத்தனை இன்பந்தரும் 'ஹாபி' வேறு எதுவுமில்லை! சொற்ப ரூபாய்களுக்கே ஒரு சிறந்த 'கோடக்' காமிரா வாங்கிவிடலாம். பிறகு ஸ்படிகம்போன்ற வியூபைண்டரில் காட்சியைக் குறிபார்த்துக்கொண்டு, பொத்தானை அழுத்தவேண்டியது மட்டுமே... முதல்முறை முயற்சியிலேயே அற்புதமான படங்கள் எடுத்துவிடுகிறீர்கள்.

உங்கள் கோடக் வியாபாரியிடமுள்ள ஏராள நிறுவ நேர்த்தியான காமிராக்களை போய்ப்பாருங்கள்... சௌகரியமான விலையில் ஒரு நல்ல 'கோடக்' மாடல் உங்களுக்கு அவசியம் கிடைக்கும்.

'கோடக்' பிளாஷ்ஹோல்டர்களையும் பாருங்கள். அவைகளின் உதவியால் வெளிக்காட்சிகளைப் போலவே சுலபமாக வீட்டினுள்ளும் படம் பிடிக்கலாம்.

இதுபோன்ற சந்தோஷ க்ஷணங்களை ஏன் மறந்துபோக விடவேண்டும்? பொத்தானை அழுத்தவேண்டியதே... உங்கள் 'கோடக' ஸ்னாப்புகள் அவைகளை என்றென்றும் உங்களுக்கு ஞாபகமூட்டிக்கொண்டேயிருக்கும்.

'பிரௌனி' 127 காமிரா: பலவற்றிலும் மிக எளிதான அழகிய சிறு காமிரா இது. சிக்கனமான 'கோடக்' 127 பிலிம் சுருள் ஒவ்வொன்றிலும் எட்டு ஸ்னாப்புகள். விலை ரூ. 17/6

'பிரௌனி' ரிப்லெக்ஸ் காமிரா: கையாள அதிகப்படி நலமானது. அநேகமாக பூர்ண அளவு வியூபைண்டர். 'கோடக்' 127 பிலிம் சுருளில் 12 ஸ்னாப்புகள். விலை ரூ. 45/-
'கோடக்' பிளாஷ்ஹோல்டர் ரூ. 22/12

கோடக் 'டுவாப்லெக்ஸ்' காமிரா: 'கோடக்' 620 பிலிம் சுருளில் 2¼" சதுரத்தில் 12 பெரிய ஸ்னாப்புகள். பெரிய அளவு வியூபைண்டர் இருப்பதால் பிழை ஏற்படுவது துர்லபம். ரூ. 59/-
'கோடக்' பிளாஷ்ஹோல்டர் ரூ. 22/12
அசல் தோல் கேஸ் ரூ. 11/-
இவ்விலைகளில் விற்பனை வரி சேராது



கோடக் லிட். (இங்லேண்டில் இணைக்கப்பட்டது) பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்.

# மானிலத்தில் ஒரு மாமுனிவர்

**இந்திரஜித்**

இன்று உலகத்திலேயே மகா புத்திசாலிகள், மிகத் திறமைசாலிகள், மேதாவிகள் உள்ள நாடு அமெரிக்கா என்று சொல்லலாம். அங்கே எத்தனையோ விஞ்ஞான ஆராய்ச்சிகள் செய்கிறார்கள். புதிய நவீன இயந்திரங்களைக் கண்டு பிடிக்கிறார்கள். உயர்ந்த மருந்துகளை, வாழ்க்கை வசதிகளை உலகத்துக்கு அளித்து வருகிறார்கள். இவர்களுக்குச் சரிநிகர் சமானமாக ருஷிய தேசமும் தலை நிமிர்ந்து பார்க்கிறது. ஒருவரை யொருவர் முறைத்துப் பார்ப்பதிலே பீதியடைந்து, இருவரில் ஒருவர் கையிலிருக்கும் அணுகுண்டைப் பதட்டத்தில் எங்கேயாவது போட்டு விடுவார்களோ என்று அறிஞர்கள் அஞ்சுகிறார்கள்.

நூற்றைம்பது வருஷத்து உலக சரித்திரத்தை ஆராய்ந்து பார்ப்போம். அந்த ஆராய்ச்சியின் முடிவில் நிச்சயமாக நாம் ஒன்று தெரிந்து கொள்ளலாம். அரசியல் சுதந்திரத்துக்கு ஐரோப்பாக் கண்டம்லாயக்கற்றது என்பதுதான்.

இந்தியாவைப் பற்றி முன்பு ஐரோப்பியர்கள் சொன்னதை நாம் மறந்து விடவில்லை. இந்தியாவிலே சமூக ஒற்றுமை கிடையாது. அடிக்கடி ஹிந்து முஸ்லிம் கலகங்கள் ஏற்படுகின்றன. இதனால் இந்தியர்கள் சுதந்திரத்துக்கு லாயக்கற்றவர்கள் என்று ஐரோப்பியர்கள் சொல்லி வந்தார்கள். இதை யோக்கியதாம்சமாக வைத்துக் கொண்டு பார்த்தால், அரசியல் சுதந்திரம் அனுபவிப்பதற்கு இந்தியாவுக்குள்ள யோக்கியதையில் ஆயிரத்தில் ஒரு பங்கு யோக்கியதைகூட ஐரோப்பாவுக்கு இல்லை. எத்தனை யுத்தங்கள், எத்தனை லட்சோப லட்சம் மக்கள் மடிந்திருக்கிறார்கள்! கர்னல் டொனாவன் என்பவர் பிரிட்டனுக்குச் சொன்னார், பிரிட்டன் பெரிய தவறு செய்துவிட்டது, ஜெர்மனி பணிந்தவுடனே சண்டையை நிறுத்தியது தவறு என்று. அமெரிக்க ராஜதந்திரி அன்றொரு நாள் பிரிட்டனுக்குச் சொன்னார், பிரிட்டிஷ் படைகள் பெர்லினுக்கே போயிருக்க வேண்டும், ஜெர்மனியை ஸ்மசானமாக்கி, 'காடுடைய சுடலைப் பொடி பூசி' என்று பாட்டுப்பாடி அதைக் காவல் காத்திருக்க வேண்டும் என்று!

சென்ற யுத்தத்தில் ஜெர்மானியர்தான் முதல் குற்றவாளி என்பதை எல்லோரும் அறிவார்கள். அதிர்ஷ்ட வசத்தால் அது பூகோளப் படத்தில் ஐரோப்பாவில் இருந்தது.

சென்ற யுத்தத்துக்கு மங்களம் பாடும் நேரம். ஜப்பானுடன் அமெரிக்கர் ராஜி பேசிக் கொண்டிருந்தார்கள். பகல் பன்னிரண்டு மணிக்கு ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட வேண்டும். 11–45 க்கு அணுகுண்டை ஹிரோஷிமாவில் போட்டார்கள் அமெரிக்கர்கள். ஐரோப்பாவுக்கு எத்தனையோ கொடுமைகளை விளைவித்த ஜெர்மனி மீது அணுகுண்டைப் போட இரக்கப்பட்ட அமெரிக்கர்கள், ஜப்பானில் போடுவதற்கு எப்படித் துணிந்தார்கள்! அதுவும் சமாதானப் பேச்சு நடந்து கொண்டிருக்கும்போது அப்படிப் போட்டது அக்கிரமம், அநீதி என்று சொல்லக் கோடானகோடி மக்கள் நிறைந்த உலகில் ஒரே ஒருத்தருக்குத்தான் தைரியம் வந்தது. அவர்தான் தமிழ் மாமுனிவர் நம் ராஜாஜி. அமெரிக்கர்களுக்குக் கோபம் பிய்த்துக் கொண்டு வந்தது. தம் காட்டுத் தார் சட்டிக்கும், தடிக் கம்புக்கும் தலை கொடுக்கத் தயங்காதவர் அமெரிக்கர்களுக்கா அஞ்சுவார்!

ரத, கஜ, துரக, பதாதிகளோடு சண்டை செய்தவர்களை வீரர்கள் என்று சரித்திரம் கூறுகிறது. நவநாகரிக ஆயுதங்களுடன் நம் காலத்தில் சண்டை செய்த ஹிட்லரையும், முஸோலினியையும் வீரர்கள் என்று சொல்கிறார்கள். இப்பொழுது, அணுகுண்டுகளை வைத்திருக்கும் ஐசன்ஹோவரையும் தீரர் சூரர் என்று புகழ்கிறார்கள்.

கல்லும், கரிச்சட்டியும், கம்பும் கையில் வைத்துக் கொண்டிருக்கும் பல்லாயிரக் கணக்கான மக்கள் மத்தியில் அறுபது வயது நிரம்பிய நிராயுதபாணியான ஒரு கிழவர் நிற்கிறார்.

"மக்கள் யுத்தம் என்று சொன்னதை வாபஸ் வாங்கும். பாகிஸ்தான் கொடுக்க வேண்டும் என்று சொன்னதை வாபஸ் வாங்கும்!" என்று கூட்டத்தினர் கூடி நின்று கோஷித்தனர்.

"நான் சொல்வதுதான் சரியானது. வாபஸ் வாங்க மாட்டேன். சுதந்திர வெறியில் இருக்கும் உங்களுக்கு இப்பொழுது புரியாது. கொஞ்ச நாள் சென்ற பின் நான் சொன்னதுதான் சரியென்று நீங்களே சொல்வீர்கள்!" என்று சிரித்துக் கொண்டே அந்தக் கூட்டத்துக்குப் பதில் சொன்னார்.

தாங்க முடியாத கஷ்டம் ஏற்பட்டால் தங்களுடைய குலதெய்வக் கோயிலில் போய் மண்ணை வாரிப் போட்டு 'நாசமாய்ப் போன தெய்வமே' என்று தெய்வத்தின் மீது கோபப் படுவது இன்னமும் வழக்கத்திலிருந்து வருகிறது. இப்படிப்பட்ட நமது மக்கள் விடுவார்களா ராஜாஜியை! சட்டையைக் கிழித்தார்கள். தார் அபிஷேகம் செய்தார்கள். "வாபஸ் வாங்கு" என்று கத்தினார்கள். 'தான் செய்வது இன்னதென்று அறியாத இவர்களை ஆண்டவனே மன்னியும்!' என்று சிரித்தார் அந்த வீர மாமுனிவர்.

1941–1942 ம் ஆண்டுகள்தான் இந்தியாவின் அரசியலில் நெருக்கடியான வருடங்கள். ருஷியாவும் சீனாவும், பிரிட்டனும் ஒரு புறம்; ஜெர்மனியும், இத்தாலியும், ஜப்பானும் மற்றொரு புறமாக உலகில் சண்டை செய்கிற காலம். நமது மாபெரும் தலைவர்கள் இந்திய சுதந்திரத்துக்காகத் தங்கள் உயிரைப் பணயம் வைத்த நேரம். பிரிட்டனும் ருஷியாவும் சேர்ந்து ஜெர்மனியை எதிர்க்கும் என்று எதிர்பாராமல், ஆரம்ப முதல் காங்கிரஸ் தனது தீர்மானத்தை நிறைவேற்றி வந்தது. ஏகாதிபத்திய யுத்தம் என்று சொல்லி யுத்த எதிர்ப்புச் சத்தியாக்கிரகம் மகாத்மா காந்தி தலைமையில் நடந்தது.

அப்போது நமது தலைவர் ராஜாஜி இந்தியர்களுடைய கோரிக்கைகளைக் கொடுத்தால் இந்தியா யுத்தத்தில் கலந்து கொள்ளத் தயாராக இருக்கிறது என்று தீர்மானம் நிறைவேற்றப் பாடுபட்டார். ஆந்திர கேசரியைத் தவிர நேருஜி முதல் அனைவரும் அதற்கு ஆதரவு தந்தார்கள். காங்கிரஸின் குஜராத் மாகாணக் கமிட்டியில் காந்திஜி நேருக்கு நேர் கேட்ட பொழுது ராஜாஜிக்கு முப்பத்தாறு வோட்டுக்களும், காந்திஜிக்கு இருபத்தேழு வோட்டுக்களும் கிடைத்



யுத்த பீதியும், சந்தேக மனப்பான்மையும் நிரம்பியுள்ள உலகுக்குச் சமாதான வழியை வகுப்பது பற்றிய யோசனையாக இருக்கலாமோ?

தன. ராஜாஜி தீர்மானம் அ. இ. கா. கமிட்டியில் இடம் பெற்று வெற்றி பெற்றது. காந்திஜி ராஜிநாமாச் செய்தார்கள். பிரிட்டனின் செவிட்டுக் காதில் அ. இ. கா. கமிட்டியின் தீர்மானம் ஏறாது போய் விட்ட போதிலும், ராஜாஜி தொடர்ந்து, மக்கள் யுத்தம் என்று பிரசாரம் செய்ததுடன், பாகிஸ்தான் கொடுத்தால்தான் சுதந்திரம் நமக்குக் கிடைக்குமென்று திரும்பவும் ஒரு உண்மையைச் சொன்னார். பொய்யான உலகில் உண்மையைச் சொல்லி வசைச் சண்டையை இழுப்பது ராஜாஜியின் பிறவிக் குணமாகி விட்டது. நாட்டேடுகளும், தார் சட்டிக்காரர்களும் ராஜாஜியை எதிர்த்துத் தாண்டவமாடினார்கள்.

"வெண்ணெய்க்கும் சுண்ணாம்புக்கும் வித்தியாசம் தெரியாது, யுத்த பீதியால் ராஜாஜி பேசுகிறார். ஆனால் அவர் என்னிலும் பெரியவர்" என்றார்கள் காந்தியடிகள். நான்கு வருடங்கள் சென்றன.

"நான்தான் சுண்ணாம்பை வெண்ணெய் என எண்ணி விட்டேன்" என்றார் காந்தி மகான். கடைசியாக, "வேவல் ஒப்பந்தத்தை" ஒப்புக் கொண்டு வெளியில் வந்ததும், நிருபர்கள் கேட்டதற்கு, "புதிதாக ஒன்றுமில்லை. நான்கு வருடங்களுக்கு முன்பு, எங்கள் சகா ராஜாஜி சொன்னதைத்தான் இப்பொழுது கையெழுத்திட்டு ஒப்புக் கொண்டிருக்கிறோம்!" என்றார் நேருஜி.

இப்படி உண்மையையே சொல்லி, தம்முடைய நாட்டு மக்களையும், தமது மதிப்புக்குரிய சகாக்களையும் எதிர்த்து நின்று வெற்றி பெற்ற ராஜாஜி அமெரிக்க அணுகுண்டுக்கு ஒரு நாளும் அஞ்சமாட்டார்.

**ம**காத்மா காந்தியடிகளிடம் ஒரு ஆங்கிலேயர் சிஷ்யராக இருந்தார். அவர் பெயர் போலக். நாளடைவில் பாரட் லா பரீட்சையில் தேர்ச்சி பெற்று இந்தியராகவே வாழ்ந்தார்.

அவர் அமெரிக்காவிலிருந்து ராஜாஜிக்கு ஒரு கடிதம் எழுதினார். "அமெரிக்க ராஜ தந்திரிகளும் பொதுமக்களும் உங்கள்மீது கோபமாக இருக்கிறார்கள். ஜெர்மனிமீது போடாது ஜப்பான் (ஹிரோஷிமா) மீது அணுகுண்டுகளை அமெரிக்கர்கள் போட்டது அநியாயமானது என்று சொன்னீர்களாமே! இங்குள்ள அமெரிக்கப் பத்திரிகைகளிலெல்லாம் அச் செய்தி வெளியாகியிருக்கிறது. 'ராஜாஜி மிக நல்லவர். அமெரிக்கர் மீது ஒரு போதும் குற்றத்தைச் சுமத்த மாட்டார். பத்திரிகைகளின் சரடு' என்று சொல்லி அமெரிக்கர்களைச் சமாதானப் படுத்தி வருகிறேன்" என்று அந்தக் கடிதத்தில் ஸ்ரீ போலக் குறிப்பிட்டிருந்தார்.

அரசியலில் வெற்றியும், லாபமும் பெறக் கூடிய தலைவராக இருந்தால், "நண்பர் போலக் அவர்களே, உங்கள் பிரசாரத்துக்கு நன்றி! கொஞ்சம் உங்கள் ஜனாதிபதியின் காதிலும் அதைப் போட்டு வையுங்கள்!" என்று பதில் எழுதியிருக்க வேண்டும். எப்பொழுதும் உண்மையைச் சொல்லிக் கெட்ட பெயர் வாங்குபவர் அப்படி எழுதிவிட முடியுமா!

"போலக் அவர்களே, நீங்கள் கேள்விப்பட்டதைப் போல் நான் சொன்னது உண்மைதான். இப்பவும் அதை ஆயிரந் தடவை சொல்கிறேன். ஹிரோஷிமா மீது அணு குண்டு போட்டது அக்கிரமம், அநீதி என்று உங்கள் அமெரிக்க நண்பர்களுக்குச் சொல்லுங்கள். அமெரிக்கப் பத்திரிகைகளுக்கு எனது நன்றியைச் சொல்லுங்கள்!" என்று பதில் எழுதினார்.

**ப**தினைந்து ஆண்டுகளுக்குப் பின் இப்பொழுது அணுகுண்டு யுத்த பீதியால் பிடிக்கப்பட்டிருக்கும் உலகில் மாமுனிவர் ராஜாஜி மானிலம் வாழ மார்க்கம் சொல்கிறார். ருஷியாவும், அமெரிக்காவும் போட்டி போட்டுக் கொண்டு அணுகுண்டையார் தலையில், எப்பொழுது, எங்கு போடுவார்களோ என்று உலக மக்கள் நிராசை யடைந்த சமயத்தில் "அணுகுண்டை அட்லாண்டிக் சமுத்திரத்தில் போடுங்கள்" என்று அமெரிக்காவுக்கு யோசனை விடுத்திருக்கிறார். பத்தாண்டுகளுக்கு முன்பு ஹிரோஷிமா மீது அணுகுண்டு போட்டதைக் கண்டித்த ராஜாஜி மீது கோபங் கொண்ட அமெரிக்கர்கள், இன்றைய தினம் அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகளின் அபாயத்துக்கு இடையில், அன்பு வழியையும் உலகம் அழியாதிருக்கும் உன்னத வழியையும் காட்டும் ராஜாஜியை வாழ்த்துகின்றனர். ராஜாஜியின் யோசனையை வரவேற்று "மானிலத்தில் ஒரு மாமுனிவர்" என்று உலக அறிஞர்கள் அவரைப் புகழ்கிறார்கள்.

கடினமான
வேலைக்குப்
பிறகு....

மற்றவைகளை விட
புத்துணர்ச்சியளிப்பதும்
ஆனாலும் மிகக் குறைந்த
விலையுமான பானம்





நமது தேசிய பானம்




PST 137

# தேசீய மகாசபையும் தென்னாட்டுத் தலைவர்களும்

"கிருத்திகை"

சென்னையில் ஏழு தடவை காங்கிரஸ் கூடியிருக்கிறது. அதேபோல் காங்கிரஸ் மகாசபைக்கு ஏழு தென்னிந்தியர்கள் தலைமை வகித்திருக்கின்றனர். இந்த பாக்கியம் பெற்ற முதல்வர் ஸ்ரீ பி. ஆனந்தாச்சார்லு அவர்கள்தான்.

ஸ்ரீ பி. ஆனந்தாச்சார்லு: முதல் காங்கிரஸில் தம் அரசியல் வாழ்வைத் தொடங்கிச் சுமார் இருபது வருஷம் இவர் இடைவிடாத பொதுஜன சேவை செய்திருக்கிறார். மேடைப் பிரசங்கம் செய்வதில் கைதேர்ந்தவர் எனப் புகழ் பெற்றவர்.

1891-ம் வருஷம் நாகபுரியில் நடந்த ஏழாவது காங்கிரஸுக்கு இவர் தலைமை வகித்தார். அக்காலத்திலிருந்த இந்தியா மந்திரியின் ஆலோசகர்களைப் பற்றி இவர் குறிப்பிடுகையில் "இந்தியாவில் பதவி வகித்து ஓய்வு பெற்ற பாசிபடிந்த பழங் கிழவர்கள்" என வர்ணித்தார். ராணுவ சேவைக்கு இந்தியர் லாயக்கில்லை என்கிற சர்க்கார் கொள்கையை அக்கு அக்காக அலசிக் கண்டித்தார். அது நீதிக்கே முற்றிலும் முரணானது என்று முழங்கினார்.

சங்கரன் நாயர்: 1897-ம் ஆண்டில் மத்தியப் பிரதேசத்திலுள்ள அமராவதியில் பதின்மூன்றாவது காங்கிரஸ் கூடியது. அதற்கு சர் சங்கரன் நாயர் தலைமை வகித்தார். இவர் சென்னையில் பிரபல வக்கீலாயிருந்தார். பிரிட்டிஷாரின் பிரித்தாளும் தந்திரத்தின் பயனாக இவர் சென்னை உயர் நீதி மன்றத்தில் நீதிபதியாக நியமிக்கப்பட்டார். பிறகு 1915-ல் வைஸ்ராய் நிர்வாக சபையில் அவருக்கு ஸ்தானம் கிடைத்தது. 1919ல் பாஞ்சாலப் படுகொலைக்குப் பிறகு அங்கு இராணுவச் சட்டப் பிரகடனத்தை ஆட்சேபித்துத் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார்.

அமராவதி காங்கிரஸ் கூடுமுன்பு புனாவில் பிளேக் நோய் பரவியிருந்தது. நோய் கண்ட இடங்களைச் சோதனை செய்து ஆவன செய்வதற்காக ராண்ட் எனும் வெள்ளை அதிகாரி தலைமையில் ஒரு குழு நியமிக்கப்பட்டது. இவர்கள் வீடு வீடாக நுழைந்து பெண்களை அவமதித்தனர் என்றும், பூஜைக் கிருஹங்களை இழிவு படுத்தினர் என்றும் கருதி இந்த ராண்ட் என்பவரையும் மற்றொரு வெள்ளையரையும் ஓர் இந்திய இளைஞன் கொன்றுவிட்டான். திலகர்தான் அதற்குக் காரணமென்று அவர் அதிகாரிகளால் கைது செய்யப்பட்டார். ஒன்றரை வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டார். திலகர் விடுதலை செய்யப்பட வேண்டுமென்று ஒரு தீர்மானம் கொண்டு வரச் சில தேசியவாதிகள் அமராவதி காங்கிரஸில் முயற்சி செய்தனர். ஆனால் மிதவாதப் பிரமுகர்கள் அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஆனால் தலைவர் சங்கரன் நாயரும், சுரேந்திர நாதரும் திலகர் நிரபராதி என்று கூறி, பகிரங்கமாகத் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தனர்.

***

நவாப் ஸையத் முகமது: 1913 கராச்சியில் கூடிய இருபத்தெட்டாவது காங்கிரஸுக்கு முஸ்லிம் விற்பன்னரான நவாப் ஸையத் முகமது தலைமை தாங்கினார்.

சென்னை வாசியாகிய ஸையத் முகமது ராஜ குடும்பத்தைச் சேர்ந்தவர். மத பக்தியை விடத் தேச பக்தியையே பிரதானமாகக் கருதினார். 1908-ம் வருஷம் மீண்டும் சென்னையில் காங்கிரஸ் கூடுகையில் அதன் தலைவர் டாக்டர் ராஷ்பிகாரி கோஷை அக்ராசனர் பதவி ஏற்கும்படி தீர்மானத்தைப் பிரேரேபிக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது.

அக்ராசனர் தலைமைப் பிரசங்கத்தில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையின் அவசியத்தை முஸ்லிம் லீக்கினர் உணர்ந்திருப்பதை வரவேற்றார்.

"தேசீய ஒற்றுமை வெள்ளம் நம் தாய் நாட்டில் பெருக்கெடுத்தோடுகிறது. இந்த வெள்ளம் ஜாதி, மத, நிற வேற்றுமைகளை அடித்துக் கொண்டு போய்விடும் என நம்புகிறேன்" என்று தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டார்.

1914 ல் நவாப் ஸையத் முகமதுவும், என். சுப்பராவ் பந்துலுவும் காங்கிரஸ் பொதுக் காரியதரிசிகளாக நியமிக்கப்பட்டனர்.

***

பெசண்ட் அம்மையார்: பெசண்ட் அம்மையார் அன்னிய நாட்டில் பிறந்தவராயினும், இந்தியாவையே தமது தாய்நாடாக மதித்து, இந்தப் புண்ணிய பூமியிலேயே, அதிலும் நம் சென்னைமாநகரத்திலேயே வாழ்ந்து, இங்கேயே மறைந்ததால் அவரையும் தென்னாட்டுத் தலைவர்களின் வரிசையில் சேர்ப்பது மிகவும் பொருத்தமாகும்.

1917-ம் வருஷம் கல்கத்தாவில் நடந்த காங்கிரசுக்கு அம்மையார் தலைமை தாங்கினார். இவருடைய வாழ்க்கைச் சரித்திரம் அற்புதமானது. பக்தி நிறைந்த கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறந்த அம்மையார், ஒரு பாதிரியாருக்கு வாழ்க்கைப்பட்டு ஒரு ஆண், ஒரு பெண் குழந்தைகளுக்குத் தாயானார். பின்னர், அறிவும் ஆற்றலும் நிறைந்த இவருக்கு மதக் கோட்பாடுகளில் சந்தேகம் ஏற்படத் தொடங்கியது. இதன் விளைவாக இவருக்கு நாஸ்திகத்தில் நாட்டம் சென்றது. சார்லஸ் பிராட்லா எனும் ஆங்கில நாஸ்திகருடன் சேர்ந்தார். அரசியலிலும், தொழிலாளர் நலனிலும் பற்று ஏற்பட்டது. ஏழைகளுக்கு இடைவிடாது உழைத்தார். பல கூட்டங்களில் பேசினார். அதன் விளைவாக அவர்மீது அதிகாரிகளால் வழக்குகள் தொடரப் பட்டன. அவ் வழக்குகளில் அம்மையார் தாமே வாதாடி வெற்றிபெற்றார். பிரம்மஞான சங்கத் தலைவரான பிளவட்ஸ்கியின் நூல்கள் சிலவற்றைப் படித்ததனால் அவ்வம்மையாருடன் உறவு பூண்டு பிரம்மஞான சங்கத்தில் சேர்ந்து, அச்சங்கத்தின் தலைவரானார்.

பிறகு அவர் இந்தியாவுக்கு வந்து சேர்ந்து, முதலில் காசியில் வசித்தார். மத்திய ஹிந்து கல்லூரியை ஸ்தாபித்தார். இக்



ஆனந்தாச்சார்லு

கல்லூரிதான் பின்னர் பண்டித மாளவியாவின் முயற்சியால் ஹிந்து சர்வ கலாசாலையாயிற்று.

இதன்பின் பெஸண்டம்மை காசியிலிருந்து சென்னை வந்து அடையாற்றில் வசித்தார். நாட்டில் மக்களுக்கு மதத்தின் மறுமலர்ச்சி ஏற்பட வேண்டுமானால் நாடு சுதந்திரம் பெறவேண்டு மென்பதை உணர்ந்தார். 'ஹோம்ரூல் இயக்கம்' ஆரம்பித்து நாட்டு மக்களின் தேசாபிமானத்தைத் தமது "நியூ இந்தியா" எனும் தினப் பத்திரிகை மூலம் தூண்டி வளர்த்தார்.

அச் சமயம் கவர்னரா யிருந்த பெண்ட்லண்டு பிரபு 1916-ல் ஹோம்ரூல் இயக்கத்தை அடக்க எண்ணினார். அதன் விளைவாக அம்மையாரும் அவர் சகாக்களான வாடியா, அருண்டேல் ஆகிய இருவரும் உதகமண்டலத்தில் காவலில் வைக்க உத்தரவிடப் பட்டனர்.



சங்கரன் நாயர்

மூன்று மாதம் சிறையிலிருந்த பிறகு மூவரும் விடுதலை பெற்றனர். அன்னியராகப் பிறந்தும் இந்த நாட்டுக்குத் தொண்டு புரிந்து காவல் தண்டனையும் அடைந்த அவரைப் பாரத நாடு கௌரவிக்க விரும்பியது. அதன் பலனாக 1917-ல் கல்கத்தாவில் நடந்த முப்பத்திரண்டாவது காங்கிரசுக்கு பெஸண்ட் அம்மையாரைத் தலைவராகக் காங்கிரஸ் வாதிகள் தேர்ந்தெடுத்தனர்.

***

ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் :—1920ல் நாகபுரியில் நடந்த காங்கிரஸுக்குச் சேலம் முதுபெரும் கிழவர் ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் தலைமை வகித்தார்.

ஸ்ரீ ஆச்சாரியாரின் சரித்திரம் வீர தீரம் நிறைந்தது. அப் பெரியார் செங்கல்பட்டு ஜில்லா பொன் விளைந்த களத்தூரில் ஜனித்து, சென்னையில் கல்லூரிப் படிப்பை முடித்து, சர்வ கலாசாலைப் பட்டம் பெற்றார். பிறகு சேலத்தில் வக்கீலாய் அமர்ந்தார். வக்கீல் தொழிலில் ஈடுபட்ட ஒரு சில வருஷங்களுக்குள் விஜயராகவாச்சாரியாரின் கீர்த்தி நாடெங்கும் பரவியது.

சேலத்தில் நிகழ்ந்த வகுப்புக் கலவரம்தான் ஸ்ரீ ஆச்சாரியாரை அரசியலில் பிரவேசிக்கும்படி செய்தது. அதிகாரிகள் அக் காலத்தில் இவரையும் இன்னும் சிலரையும் சம்பந்தப் படுத்திச் சிறைத் தண்டனை விதித்தனர். அதன் பேரில் ஸ்ரீ ஆச்சாரியார் அப்பீல் செய்து விடுதலை யடைந்தார். விடுதலை பெற்ற பின் சர்க்கார் இவரை முனிசிபல் சபை அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்கினர். ஸ்ரீ ஆச்சாரியார் அந்த அநீதியைச் சகித்துக்கொண்டிருக்கவில்லை. அவ்வாறு நீக்கியது சட்ட விரோதமான செய்கை என சர்க்கார்மீது மான நஷ்ட தாவா தொடர்ந்து அதில் நஷ்ட ஈடும் பெற்றார். தாம் விடுதலையடைந்ததும், தம்முடன் கைது செய்யப் பட்டவர்களைச் சிறையில் வைத்திருப்பது தவறு எனக் கிளர்ச்சி செய்து அவர்களும் சிறையிலிருந்து விடுதலை பெறச் செய்தார். இத்தகைய தீரச் செய்கைகளினால் ஸ்ரீ ஆச்சாரியாரின் பெயர் நாடெங்கும் பரவிப் புகழ் பெற்றது.



ஸையத் முகம்மது

1922 கயா காங்கிரஸில் மகாத்மாஜியின் முழு ஒத்துழையாமைத் திட்டத்தையும் ஆதரித்த ராஜாஜிக்கு ஸ்ரீ ஆச்சாரியார் பக்கபலமாயிருந்தார்.

ஸ்ரீ சீனிவாச அய்யங்கார்:-1926ல் அஸ்ஸாம் தலைநகரான கௌஹாத்தியில் நடந்த நாற்பத்தொன்றாவது காங்கிரஸுக்கு ஸ்ரீ சீனிவாஸய்யங்கார் தலைமை வகித்தார்.

செல்வந்தர்களின் குடும்பத்தில் பிறந்த ஸ்ரீ அய்யங்கார் வக்கீல் தொழிலில் உச்ச ஸ்தானத்தை அடைந்தது தமது சொந்த மேதையினால்தான்.

அட்வகேட் ஜெனரலாக இருந்த ஸ்ரீ ஐயங்கார், பெஸண்டம்மையைக் காவலில் வைத்ததைக் கண்டித்துக் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார். ஒத்துழையாமை உருவாகும் சமயத்தில் நடந்த திருநெல்வேலி மாகாண அரசியல் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த அவர், இந்தியா குடியரசாக வேண்டும் என்பதைக் காங்கிரஸ் ஒப்புக் கொள்ளு முன்பே பூரணமாக ஆதரித்து வற்புறுத்தினார்.

முதன் முதலாக மத்திய சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் கலந்து கொண்ட பொழுது சென்னையில் காங்கிரஸ் வாதிகள் நூற்றுக்கு நூறு வெற்றி பெற்றதற்கு அய்யங்காரின் பெரு முயற்சியே காரணம். ஜஸ்டிஸ் கட்சியை அரசியல் துறையில் முறியடித்ததற்கும் ஸ்ரீ அய்யங்காரின் பெரு முயற்சியே காரணம்.

1927-ல் சென்னையில் டாக்டர் அன்சாரியின் தலைமையில் நடந்த காங்கிரஸ் வெற்றிகரமாக முடிந்ததற்கும் ஸ்ரீ அய்யங்கார்தான் காரணம்.

தமிழ் நாட்டுக்கு அவர் செய்த தொண்டும் காங்கிரஸ் ஊழியர்களுக்கு அவர் காட்டிய ஆதரவும் என்றுமே மறக்க முடியாதவை.

டாக்டர் பட்டாபி சீதாராமய்யா: 1948-ல் இந்தியா சுதந்திரம் பெற்ற பின், ஜெய்ப்பூரில் கூடிய காங்கிரசுக்கு டாக்டர் பட்டாபி சீதாராமய்யா தலைமை வகித்தார்.

மசூலிப் பட்டணத்தில் தேசியக் கல்வி வளர்ச்சிக்கு அடிப்படையாயிருந்த ஆந்திர ஜாதீய கலாசாலையின் போஷகர்களில் பட்டாபி முக்கியமான ஒருவர். காந்தி யடிகளின் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமானதிலிருந்து காந்திஜியின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி நாட்டுக்குச் சேவை செய்தவர் பட்டாபி.

இன்று மத்தியப் பிரதேசத்தில் கவர்னராக இருக்கும் ஸ்ரீ பட்டாபி சீதாராமய்யா நாட்டின் மேதாவிகளில் ஒருவர்.

இவ்வாறாக, காங்கிரஸ் ஸ்தாபனம் மகோன்னத நிலையை அடைய ஒப்பற்ற சேவை செய்த இந்த ஏழு தென்னாட்டுத் திலகங்களைக் குறித்தும் தென்னிந்தியா பெருமை அடைகிறது.



1931ம் ஆண்டு உப்பு சத்தியாக்கிரகத்தில் காங்கிரஸ் வெற்றி பெற்ற சமயம் ஸ்ரீ மோதிலால் நேரு அவர்களின் மரணம் சம்பவித்தது. அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட தேசத் தலைவர்கள் யாவரும் அலஹாபாத்தில் கூடினர். அப்போது எடுத்த படம்தான் மேலே யுள்ளது. இதில் மகாதேவ் தேசாய், நமது ஜனாதிபதி ராஜன் பாபு, வல்லபாய் படேல், அன்ஸாரி, ஜவாஹர்லால் நேரு, பண்டித மாளவியா, மௌலானா ஆஸாத், சென்குப்தா, லீலாவதி முன்ஷி, ஸையத் முகம்மத், பட்டாபி சீதாராமய்யா, கித்வாய், ராஜாஜி, மதுராதாஸ் திரிகம்ஜி, ஷங்கர்லால் பாங்கர், கோவிந்த மாளவியா, ஆஸப் அலி முதலியவர்களைக் காணலாம். மேற்கண்ட தலைவர்களில் சிலர் இப்பொழுது மறைந்து விட்டனர். நமக்கு நன்கு அறிமுகமான தலைவர்கள் இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்பு பார்ப்பதற்கு எப்படித் தோற்றம் அளித்தார்கள் என்று காண்பதில் ஒரு தனியான சுவை இருக்கவே இருக்கிறது!



# மருது பாண்டியன் கோட்டை

நடுநிசி நேரத்தில், சிறுவயல் கிராமத்தின் அந்தச் சின்னஞ் சிறு குடிசைக்கு வெளியே நின்று கொண்டு, வீரம் மிகுந்த ஓர் இளைஞன் கதவைத் தட்டினான். சாதாரணமாக அந்த நேரத்தில் அயர்ந்து உறங்கும் மனிதர்களைக் கதவைத் தட்டி எழுப்புவதாயிருந்தால், படார் படார் என்றுதான் யாரும் இடிப்பார்கள். ஆனால் அந்த இளைஞன் அப்படி இடிக்கவில்லை. உள்ளங் கை விரல்களை மடித்துக் கொண்டு, புறங்கையினால் அந்தக் கதவை 'டொக் டொக்' என்று மெதுவாகத் தட்டினான். குடிசைக்குள்ளே படுத்திருந்த வள்ளியம்மைக்கு அது யாரென்று தெரிந்து விட்டது. வழக்கமாகத் தட்டுகிற கைதான் அது. ஆனாலும் இன்று அந்தக் கையில் ஏன் இத்தனை பதற்றம்? ஒரு வேளை விரல்களுங்கூட ஆடுகின்றனவா?

வள்ளியம்மை திகைத்தாள். அவளுக்கு அந்தப் பதற்றத்தின் காரணம் என்ன என்று சற்றும் புரியவில்லை.

அது 'பயங்கரமான' காலம்! குடிசையினுள் களிமண் விடி—விளக்கு மினுக்கு மினுக்கு என்று இமைகளைக் கொட்டிக் கொட்டி, தூக்கக் கலக்கத்தோடு விழித்துக் கொண்டிருந்தது. அந்த மங்கிய ஒளியில் வள்ளியம்மை பாயைச் சுருட்டிக்கொண்டு மெதுவாக எழுந்து பார்த்தாள். அடுத்த "அறை" என்று சொல்லப்பட்ட மிகச் சிறிய அடுக்களையில், அவளுடைய தாயார்

சோமு

கண்ணயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தாள். வள்ளியம்மை எழுந்து நடந்து வந்து, ஓசைப் படாமல் கதவின் கொண்டியை அசைத்தாள். குடிசைக் கதவு திறந்து கொண்டது.

"வள்ளி! ரொம்ப அவசரம்! இந்த விநாடியே நீ புறப்படணும்!" என்றான் முருகையாத் தேவன். அவனுடைய குரலில் வழக்கமான கம்பீரம் இருந்தாலும், ஏதோ ஒரு விவரிக்க முடியாத கவலையும் ஆத்திரமும் அதோடு சேர்ந்து தொனித்தன.

"என்ன இப்படி? ஏன் உன்னுடைய குரலெல்லாம் இப்படிப் பதறுகிறது?" என்று கேட்டாள் வள்ளியம்மை.

"அதெல்லாம் விவரமாகப் பேசிக் கொள்ளுவோம். இப்பொழுது உன்னுடைய அம்மையை உடனே எழுப்பு. நீங்கள் இருவரும் துணிமணிகளை மூட்டை கட்டிக் கொண்டு, இந்தக் குடிசையை விட்டு இன்னும் கால் மணி நேரத்தில் கிளம்பிவிட வேண்டும். ஆமாம். இன்னும் அரை மணியில் இந்தக் குடிசை நெருப்புக்கு இரையாகப் போகிறது!—இந்தக் குடிசை மட்டும் என்ன! இந்தச்சிறுவயல் ஊரிலுள்ள அத்தனைகுடிசைகளும், அத்தனை வீடுகளும் தீக்கு இரையாக வேண்டியதுதான்!!" என்றான் முருகையா.

"இந்த மாதிரி உயிருக்குப் பயப்படுகிற பழக்கம் உனக்கு எப்பொழுது வந்தது, என் சிங்கமே!" என்று ஏகத்தாளமாகக் கேட்டாள் வள்ளி.

"இந்தா, இப்படி யெல்லாம் இடக்குப் பேசாதே. என்னுடைய உயிருக்கு நான் பயப்படவில்லை. மருது பாண்டியன் மண்ணிலே மிதித்த அணில் பிள்ளைக்குக் கூட சாவைப் பற்றிய பயம் வராது!"

"அப்படியென்றால்?..."

"நான் பயப்படுவதெல்லாம், உன்னுடைய உயிரைப் பற்றி; உன்னுடைய வயசான அம்மையின் உயிரைப் பற்றி! இப்பொழுது என்னுடைய கவலையெல்லாம் விடிவதற்குள் உன்னையும் தாயாரையும் பத்திரமாக வேள்விக்குடிக்குக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டுமே என்றுதான்!"

இவ்வாறு முருகையா சொன்னபோது, அவனுடைய கவலையான பேச்சில் அன்பும் ஆர்வமும் இழைந்தன.

"வேள்விக் குடிக்கா?" என்று திகைப்போடு கேட்டாள் வள்ளியம்மை.

"ஆமாம். வேள்விக் குடியில் உன்னுடைய மாமன் வீட்டில் உங்கள் இருவரையும் சேர்த்து விட்ட பிறகுதான், இந்த உடம்பும் இதற்குள்ளே இருக்கிற என்னுடைய உயிரும் எனக்குச் சொந்தமாகும்!"

"அப்படியானால் அதுவரை உன்னுடைய உயிர் எனக்குக் கூடச் சொந்தமில்லையா?" என்று நிதானமாகக் கேட்டாள் வள்ளி.

"வள்ளி, விபரீதம் என்ன நடந்திருக்கிறது என்பதைப் புரியாமல் வேடிக்கை பேசுகிறாயே! காலை விடிந்து விட்டால் அதற்குப் பிறகு எந்த நிமிஷத்திலும் வெள்ளைக்காரன் பட்டாளம் இங்கே முற்றுகை இடலாம். அதனாலேதான் இப்பொழுதே......"

"வெள்ளைக்காரன் பட்டாளமா? முற்றுகையா? இடட்டுமே! தீயை வைக்கட்டுமே! அதனால் என்ன? மருது பாண்டிய ராஜா காளையார் கோவிலுக்குப் போயிருக்கிற சமயமாய்ப் பார்த்து, இங்கே அவருடைய ஊரைச் சாம்பலாக்கி விடலாம் என்று வெள்ளைக்காரன் நினைத்தானா? பார்க்கலாம். அந்தத் திமிரையுந்தான் பார்த்து விடலாம்!" என்றாள் வள்ளி. உணர்ச்சி வேகத்தால் அவளுடைய உடம்பு விம்மிற்று.

"வள்ளி, நீ சொல்வது உண்மைதான். ஆனால் இப்பொழுது வெள்ளம் தலைக்கு மேலே போய் விட்டது. நம்முடைய பட்டாளம் எல்லாம், ஏற்கெனவே மடிந்தது போக மற்றது, காளையார் கோவிலிலே இருக்கிறது. இந்தச் சரியான தருணத்தைப்பார்த்து இங்கே முற்றுகை போடுகிறான் வெள்ளைக்காரன்: எப்படியும் பீரங்கியினால் புகைத்துத் தள்ளி விடலாம் என்று நினைக்கிறான். ஆனால் அவனுடைய கையில் நம்முடைய பொருள் என்று ஒரு துரும்புகூட அகப்படக் கூடாது. தெரிந்ததா?" என்றான் முருகையா.

"அதற்காக?"

"பட்டாளம் எல்லாம் இங்கே இல்லாமல், நாம் எப்படி எதிரியை எதிர்ப்பது? ஆனாலும் நாமோ அல்லது நம்முடைய பொருள்களோ அவன் கையில் அகப்பட முடியாதபடி செய்ய, நம்மால் முடியும்! அதைத்தான் செய்வதாக நாங்கள் எல்லாரும் திட்டம் போட்டிருக்கிறோம்!" என்று முருகையா சொன்னான்.

நிலா வெளிச்சம் குடிசைக்கு வெளியே திண்ணையில் விழுந்து கொண்டிருந்தது. வள்ளி அந்தத் திண்ணைக்கு வந்தாள். முருகையாவும் அவளுக்கு அருகிலே வந்து நின்று கொண்டான்.

"என்ன யோசனை, வள்ளி. இந்த ஊர்க் குடி மக்கள் எல்லாரும் தங்கள் தங்கள் வீட்டில் தாங்களே தீயை வைத்துவிட்டு இந்த ராத்திரியே இங்கிருந்து எதிரிக்குத் தெரியாமல் ஓடிவிடுவது என ஏற்பாடு!"

வள்ளி இந்த வார்த்தைகளுக்குப் பதில் சொல்லவில்லை. அவளுடைய மனம் ஏதோ கடுமையான சிந்தனையில் ஆழ்ந்திருந்தது.

"வள்ளி! எப்படியும் இந்த ஆவணியில் நம்முடைய திருமணம் நடைபெற்றுவிடும். எனக்காக இன்னும் இரண்டு மாசம் காத்திரு, போதும். நான் உன்னையும் உன் அம்மையையும் வேள்விக்குடியில் விட்டு விட்டு நேரே காளையார் கோவில் புறப்படுகிறேன். ராஜா அங்கேதான் இருக்கிறார். பெரிய ராஜாவும் ஊமைத்துரையுங் கூட அவரோடு அங்கு இருக்கிறார்கள். எப்படியும் இந்தக் கும்பெனிப் பட்டாளத்தை ஒரு வகையாகத் தீர்த்துக் கட்டி விட்டுத்தான் மறு வேலை பார்ப்பது என்று தீர்மானம். நீ கவலைப் படாதே. இரண்டு மாசத்தில் வேள்விக்



குடிக்கு வந்து உன்னைக் குன்றக்குடி முருகன் சந்நிதியில் மாலையிடுகிறேன். இது சத்தியம்.''

இப்படிச் சொல்லும்போது முருகையாத் தேவனுக்குத் தொண்டையை அடைத்தது. வள்ளிக்கும் வார்த்தை வரவில்லை. அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். அடுத்த நிமிஷம் முருகையாவுக்குத் தன் நினைவு வந்தது.

''என்ன வள்ளி! பேசாமல் நிற்கிறாய்! போ. உள்ளே போய் அம்மையை எழுப்பு. மூட்டை முடிச்சுக்களைக் கட்டு!'' என்று அவசரப்படுத்தினான் முருகையா.

## 2

கி. பி. 1800ம் ஆண்டில் சிவகங்கைச் சீமையிலே அரசாண்டு வந்த வேலு நாச்சி என்ற பெண்மணி இறந்ததும், அவருடைய அமைச்சராகப் பணி புரிந்து அரசாங்கத்தை நிர்வகித்து வந்த மருது பாண்டிய சகோதரர்கள், குடி மக்களின் விருப்பப்படி வேலு நாச்சி அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்த விதத்தில், தாங்களே நிருவாகத்தை ஏற்று நடத்தி வரலானார்கள்.

அந்தக் காலந்தான் தமிழ் நாட்டின் விடுதலைச் சரித்திரத்தில் முக்கியமான காலம். கம்பெனிக்காரர்களை எதிர்த்துப் போராடித் தமிழகத்தின் வீரத்தை நிரூபித்த கட்டபொம்மு 1799ம் ஆண்டில் தூக்கிலிடப்பட்டு வீர மரணம் எய்தி யிருந்தார். இதன்பின் சிறை பிடிக்கப்பட்ட ஊமைத் துரையும் சிறையிலிருந்து தப்பி, இரகசியமாக வெள்ளைக்காரர்களை எதிர்த்து வீழ்த்த வழி வகைகள் செய்துகொண்டிருந்தார். கடந்த ஒன்றரை ஆண்டுகளாக இவர்களுக்குப் பல வகையிலும் உதவி புரிந்து வந்த மருது பாண்டிய சகோதரர்கள் இருவரும், இப்பொழுது தாங்களே சிவகங்கைச் சீமைக்கு மன்னர்களாக முடி சூடியதும் ஊமைத்துரை சிவகங்கைக்கு இரகசியமாக வந்து சேர்ந்தார்!

வெள்ளையரை வீழ்த்தும் தீவிர முயற்சியில் இப்பொழுது சின்ன மருது பெரிய மருது ஆகிய இரு சகோதரர்களும், பாஞ்சாலங் குறிச்சி வீர சிங்கமான ஊமைத்துரையும் சேர்ந்து முக்கூட்டு ஆலோசனைகள் நடத்தலானார்கள். இதன் விளைவு தமிழ் நாட்டில் ஒரு மாபெரும் போராக மூண்டது.

சிவகங்கைப் பாளையத்தாரிடம் இருபதினாயிரம் வீரர்கள் கொண்ட மறவர் படை இருந்தது. ஈட்டி, வாள், வேல், வளரித் தடி, கதை போன்ற போர்க்கலங்களோடு, துப்பாக்கிகளும் வெடிமருந்துகளும் கூட ஏராளமாக இருந்தன. ஆனால் இவர்களை எதிர்த்த கம்பெனிப் பட்டாளத்திடமோ வண்டி வண்டியாகப் பீரங்கிகள் இருந்தன. இந்த இரண்டு படைகளுக்குமே போர் நிகழ்ந்தது, இந்தப் புண்ணியத் தமிழ் நாட்டிலே! ''அன்னியன் வந்து எங்கள் நிலத்திலே கப்பம் வசூலிப்பதா? நான் பிறந்த இந்த பூமிக்கு, எங்கேயோ கிடந்து வந்த வெள்ளைக்காரன் அதிகாரியா? வியாபாரம் செய்ய வந்தவன் அரசாட்சி நடத்துவதா?'' என்றெல்லாம்



பாரதத்தின் வைர மணிகள்

குமுறி யெழுந்த பாஞ்சாலங் குறிச்சி வீரபாண்டியனின் போர் முழக்கம், அவருடைய மரணத்தோடு முடிந்து விடவில்லை. அந்த மரணத்தினால் அது பன்மடங்கு வேகத்துடன் பீறிட்டு எழுந்தது. அதன் எதிரொலி சிவகங்கைச் சீமையிலே கூடிய மூவருடைய குரலிலும் வீராவேசமாகக் கேட்டது. இருபதினாயிரம் மறவர்களுடைய நெஞ்சிலும் சென்று எதிரொலித்தது. மருது பாண்டியருடைய நாட்டு மக்களின் உள்ளங்களில் எல்லாம் போய்த் தாக்கியது.

ஆமாம்; 1801-ம் ஆண்டு மே மாதம் 28-ம் தேதி கமுதிக் கோட்டையைச் சுற்றி வளைத்த கம்பெனிப் பட்டாளத்தைத் தமிழகத்தின் வீரச் சேனை கதிகலங்க அடித்தது. அந்த அடியின் வேகம் தணியக் கம்பெனிப் பட்டாளத்துக்குச் சுமார் ஒரு மாதம் பிடித்தது! ஒரு மாதத்துக்குப்பின், மீண்டும் போர். எப்படியாவது இந்த மருது பாண்டியரையும், தப்பி ஓடிவந்து அவர்களோடு சதி செய்கிற ஊமைத் துரையையும் பிடித்துத் தீர்ப்பதோடு, எதிர்ப்பு என்ற புரட்சி மனப்பான்மையையே இந்தப் பூமியிலிருந்து அழித்து ஒழித்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டி நின்றது, கம்பெனிச் சேனை!

பழமனேரி ஆற்றங்கரையில் அமைந்த கமுதிக் கோட்டையிலே ஆரம்பித்த கம்பெனிப் படைகளின் முகாம், பலத்த எதிர்ப்பைச் சமாளித்துக் கொண்டு மருது பாண்டியரின் தலை நகரான சிறுவயல்வரை செல்ல எட்டு நாட்கள் ஆயிற்று. எத்தனை வீரமாக, எவ்வளவு தீரமாகப் போர் புரிந்தாலும் இயந்திரங்களோடு மனிதக் கைகள் எப்படிப் போரிட்டு வென்றுவிட முடியும்? கம்பெனிப் பட்டாளத்தின் ஆவேசமான பீரங்கிகள் கக்கிய நெருப்பில், எண்ணற்ற தமிழ் மறவரின் வீர உடல்கள் புகைந்து கருகின. தமிழர் சேனை குறைந்து படத் தொடங்கிற்று. இனி, அடுத்த சில மணி நேரங்களில் சிறுவயல் நகரத்துக்குள்ளேயே கம்பெனிப் பட்டாளம் புகுந்து விடும் என்ற நிலைமையே' ஏற்பட்டு விட்டது'!

'எதிரியை முறியடித்து வீழ்த்த முடியாது; மீதியுள்ள நம்முடைய பட்டாளம் எல்லாம் காளையார் கோவிலிலே நிற்கிறது!' என்று கண்டு கொண்ட தமிழ் வீரர்கள் சிறுவயலை எதிரிக்கு இரையாக்குவதை விட, எதிரி கையில் தாங்கள் பிடிபட்டு மானம் இழப்பதைவிட, தங்கள் ஊரைத் தாங்களே தீக்கு இரையாக்கி விட்டுக் காளையார் கோவிலைச் சுற்றியுள்ள அடர்த்தியான காட்டுக்குள்ளே ஓடிவிடலாம் என்று தீர்மானித்தார்கள். ஓடிவிடலாம் என்றால் உயிருக்குப் பயந்து அல்ல! இரண்டு மடங்கு வேகத்துடன் ஓங்கிப் பாய்வதற்காகப் புலி பம்மும் அல்லவா? அப்படிப் பம்மி மீண்டும் சேனை திரட்டி வந்து போரிடலாம் என்ற நினைப்பே அவர்களுக்கு. அந்த நினைப்பிலேதான் அன்றிரவு வள்ளியம்மையின் குடிசைக் கதவைத் தட்டினான் முருகையாத் தேவன்.

3

முருகையாத் தேவன் நல்ல பராக்கிரமம் வாய்ந்த இளங்காளை. உடலும் உள்ளமும் ஒன்று சேர்ந்து திடம் பெற்று முறுகிய வீரன் அவன்! மருது பாண்டியருக்கு மிகவும் அந்தரங்கமாக இருந்த வீரர் வட்டத்துள் முக்கியமானவன். தன்னுடைய கை வலிமையினாலும், வீரத்தினாலும், சீக்கிரமாக ஒரு முடிவுக்கு வரக் கூடிய புத்தி திடத்தினாலும், இளைய மருது பாண்டியனின் வியப்புக்கும் பாராட்டுக்கும் பாத்திரனான இளைஞன் அவன். திருமணம் செய்வதற்குரிய ஏற்பாடுகளை முடித்துக் கொள்வதற்காகவே அவன் காளையார் கோவிலுக்குச் செல்லாமல், சிறுவயலில் தங்கும்



*Ref.* 3263. சரியான மணி காட்டுவதில் பிரசித்தி பெற்ற கெடியாரம். சென்டர் செகண்டு முள்ளுடன் அதிர்ச்சி, காந்த சக்தியால் பாதிக்கப்படாத 10½''' வாட்டர் புரூப் ஸ்டீல் கேஸ் ரூ. 160/-

*Ref.* 3268. மேலே குறிப்பிட்டபடி ஆனால் 14 காரட் ஊதா நிற தங்க முலாம் பூசிய கேஸ். இதற்கு இணையான நவீன டயலுடன் கூடியது. ரூ. 246/-

*Ref.* 3253. இது *Ref.* 3263க் உள்ளபடி. ஆனால் சிறிய செகண்டு முள்ளுடன் ரூ. 150/-

*Ref.* 3252. இது *Ref.* 3253க் உள்ளபடி. ஆனால் கேஸ் மேல்புறம் ரோல்டு கோல்டு. பின்புறம் ஸ்டீல் ரூ. 165/-

# SANDOW ALRESIST

## ஸாண்டோ ஆல்ரெஸிஸ்ட்

*Ref.* 3043. நாகரீக ஆடவர்களுக்கேற்ற கெடியாரம். 8¾''' சைஸ். சென்டர் செகண்டு முள்ளுடன் கூடியது. அதிர்ச்சி, காந்த சக்தியால் பாதிக்கப்படாதது. பூராவும் வாடர்ப்ரூப் ஸ்டீல் கேஸ். ரூ.163/-

*Ref.* 3042. மேலே குறிப்பிட்டபடி ஆனால் கேஸ் முன்புறம் ரோல்டு கோல்டு பின்புறம் ஸ்டீல் ரூ. 175/-



டயல்கள் கீழ்க்கண்டவாறு கிடைக்கும்

*A.* மேலே படத்தில் காட்டியபடி 12 சாதாரண அராபிக் இலக்கங்கள்.

*B.* 12 பிரகாசமான அராபிக் இலக்கங்கள் ரூ. 3/- தனி.

*C.* 12 சிவப் அராபிக் இலக்கங்கள் ரூ. 5/- தனி.

*D.* வலப்புறத்தில் உள்ளபடி 13 சிவப் கோடுகள் கொண்டது—ரூ. 5/- தனி.

**FAVRE-LEUBA & CO. LTD.**




பேவர் - லூபா & கோ., லிட்.

பம்பாய் - கல்கத்தா

A. 28


DIAPEPSIN
டயபெப்ஸின்
அவளது நீண்ட நாள் அஜீரணக் கோளாறுகளை நீக்கியது.
யூனியன் டிரக் கம்பெனி லிமிடெட்
மதராஸ் டிப்போ : 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1


பூத்த புதுமலர் வாடைக்கு
புஷ்பராணி
ஊதுபத்திகள்
பூஜைக்கு ஏற்றது.
புஷ்பராணி ப்ராடக்ட்ஸ்
வாசனை திரவியங்கள் தயாரிப்பவர்கள், வேலூர், S.I.
இலங்கை ஏகவினியோகஸ்தர்கள் :
த. தம்பித்துரை, 226, ஆஸ்பிடல் ரோடு, யாழ்ப்பாணம்




ஜாம்ஷெட்பூர் டெல்கோ ஒர்க்ஸில் நிர்மாணிக்கப்படும் "டாடா மெர்ஸிடெஸ் - பென்ஸ்" டிரக்குகளில் மூன்று, அகில உலக மோட்டார் பந்தயத்தில் பங்கெடுத்துக் கொண்டு ஜெனிவாவிலிருந்து புறப்பட்டு சுமார் 8000 மைல் பிரயாணத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு பம்பாய்க்குச் சென்ற மாதம் வந்து சேர்ந்தன. தினம் சுமார் 320 மைல்கள் விதம் ஓடிய இந்த டிரக்குகளுக்கு யாதொரு பழுதும் ஏற்பட வில்லை என்பது குறிப்பிடத் தக்கது. இப்போட்டியில் டாடா இண்டஸ்டிரீஸ் டைரக்டர் ஸ்ரீ டி. ஆர். டி. டாடா அவர்களும் கலந்துகொண்டு பம்பாய் வந்து சேர்ந்தார். போட்டியில் வெற்றியுடன் திரும்பிய இந்த டிரக்குகள் பம்பாயில் கேட்வே ஆப் இந்தியாவில் பார்வைக்கு வைக்கப்பட்டன. அந்த சந்தர்ப்பத்தில் நடந்த தேநீர் விருந்தில் மோட்டார் தொழிலில் பிரபலமான சுமார் நாற்பது விருந்தினர்களுக்கு மேல் கலந்து கொண்டனர். மேற்கண்ட படத்தில் முக்கிய பிரமுகர்களான ஸ்ரீமான் எஸ். மூல்ஜோகர், ஸ்ரீமதி மூல்ஜோகர், ஸ்ரீமான் டி. ஆர். டி. டாடா, ஸ்ரீமதி ஜே. ஆர். டி. டாடா, ஸ்ரீமான் ஜே. ஆர். டி. டாடா முதலியவர்களையும், அவர்களுக்குப் பின்புறத்தில் டாடா மெர்ஸிடெஸ் டிரக் ஒன்றையும் காணலாம்.

---

படி பாண்டியன் கட்டளை இட்டிருந்தான். ஆனால் இப்பொழுதோ! எதிர்பாராதபடி, கம்பெனிப் படை இவ்வளவு தூரம் முன்னேறி இப்பொழுது தலைநகரமான சிறுவயலுக்கே வந்து விட்டதே!

முருகையன் வேறு எதைப் பற்றியும் கவலைப்படவில்லை. வீரத்தினாலும் தேசபக்தியினாலும் உரம் ஏறிப் போயிருந்த அவனுடைய இரும்பு நெஞ்சத்தில் மென்மையான பாகம் ஒன்று இருந்தது. அதில் வள்ளியம்மை என்ற பூங்கொடி நின்று புன்னகை பூத்துக் கொண்டிருந்தாள். அந்தப் பூங்கொடியை எண்ணும்போது மட்டும் அந்த இரும்பு நெஞ்சம், பூப்போன்று ஆகிவிடும். எதற்கும் கலங்காத உள்ளம், எதிலும் அசையாத உறுதி, அந்த நினைப்பிலே கலங்கும், நெகிழும்! முருகையாவின் இந்த மன நிலை மருது பாண்டியனுக்குத் தெரியும். எனவே தான் இவர்களுடைய திருமணத்தில் அத்தனை அக்கறை அவனுக்கு இருந்தது!

முருகையா தன்னுடைய மன்னன் மருது சொன்ன யோசனைப்படி, குன்றக்குடி முருகன் சந்நிதியில் தன் திருமணத்தை முடித்துக் கொள்ள நினைத்தது உண்மை. ஆனால் இப்பொழுது, இரண்டு மாதம் கழித்துக் காளையார் கோவிலிலிருந்து வெற்றிகரமாக மீண்டு வந்து அந்தப் புனித வேள்வியைச் செய்து கொள்ளலாம் என்று நினைத்தான். வள்ளியம்மைக்கும் அது புரிந்தது. மனத்தில் இரண்டு மாதம் என்பது இரண்டு யுகம் போன்றது என்ற கவலை இருந்தாலும், வள்ளியம்மை வெறும் பசலைப் பெண் இல்லை. வீர மறக்குலத்துப் பெண்ணின் ஒப்புயர்வற்ற திடமும், தேச பக்தியும் அவளிடம் நிரம்பி யிருந்தன. எனவே, அன்றிரவு முருகையா வந்து சொன்ன மறு விநாடி விஷயங்களைச் சரியாகப் புரிந்து கொண்டு உடனே புறப்பட்டாள் வள்ளி.

வள்ளியும் அவளுடைய தாயாரும் மூட்டை முடிச்சுக்களோடு குடிசையை விட்டுப் புறப்பட்ட போது, பெரிய மூட்டைகள் இரண்டையும் தன் தோளிலே தூக்கி வைத்துக் கொண்டான் முருகையா. இந்தப் பாரத நாட்டையே தோளின் மேல் தூக்கி வைத்துக் கொள்வது போல அப்பொழுது ஒரு மகிழ்ச்சி ஏற்பட்டது அவனுக்கு!

"ஊம், நாம்ப மூணு பேரும் இங்கே பிடிக்கிற கடை, நேரே வெள்ளிக்குடியிலே போய்த்தான் நிற்க வேணும்! பார்க்கலாம் சூரத்தனத்தை!" என்று முருகையா சொன்ன போது, வள்ளியம்மை "களுக்" கென்று சிரித்தாள். இதைப் பார்த்து உள்ளம் பூரித்தாள் அவனுடைய தாயார்!

4

சிறுவயல் என்ற அழகான தலை நகரம் நெருப்புக்கு இரையாயிற்று. எந்த பக்தியானது, அன்னியரை எதிர்த்து ஒழிக்க வேண்டும் என்று முனைந்ததோ அந்த பக்தியே, சிறுவயலை நெருப்புக்கு இரையிட்டது. உண்மையில், சிறு வயலைப் பகைவர்களின் ஆளுகைக்கு விடுவதைவிட அக்னி தேவனுக்குத் தேசபக்தர்களின் ஆகுதியாக அளிப்பதே உயர்ந்தது என்று கருதிய தமிழ் நாட்டு வீர மக்களின் தேச பக்திக் கனல், அன்றிரவு அத்தனை குடிசைகளையும், அத்தனை வீடுகளையும் எரித்துச் சாம்பலாக்கிற்று. கம்பெனிப் பட்டாளம் ஊருக்குள் நுழைந்த போது, அது ஒரே ருத்ர பூமியாகக் காட்சி தந்தது. கரியும், சாம்பலும், புகையும் அவர்களை வரவேற்றன! பீரங்கி தான் ஊரைச் சுடுமா, தேச பக்தி என்ற கனல் கூட ஒரே இரவில் அவ்வளவு பெரிய ஊரைச் சாம்பலாக்கிவிட முடியும் என்பதை நேருக்கு நேர் கண்டது கம்பெனிப் பட்டாளம். ஆனாலும் அதன் ஆதிக்க வெறி அடங்கவில்லை. இன்னும் அதிகரித்தது.

சிறு வயலுக்கும் காளையார் கோவிலுக்கும் இடையே உள்ள பெருங் காட்டில் பாதை அமைத்து, அதன் வழியாகச் சென்று, எப்படியும் கோட்டையைப் பிடித்துவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்தனர் வெள்ளையர். அந்த எண்ணத்தை உடனேயே செயலில் நிறைவேற்ற முனைந்தனர். ஆனால் அத்தனை பெரிய கோட்டையைச் சூழ்ந்து நின்ற அடர்த்தியான அந்தப் பெருங் கானகத்தைக் கடந்து செல்ல எளிதில் முடியவில்லை! ஓடிச் சென்று காட்டிலே பதுங்கியிருந்த மறவர் படை பலவிதத்திலும் இடையூறு செய்தது. மாயமாய் மறைந்து திடீர் திடீர் என்று தோன்றிக் "குரங்குப் போர்" நிகழ்த்தியது! கற்களின் மழை, குண்டுகளின் வீச்சு, ஈட்டிகள், எங்கிருந்தோ வேலாயுதங்கள்—இப்படியாகக் கம்பெனிப் படையைச் சின்னாபின்னமாக்கிச் சீர்குலைத்தது தமிழர் படை. காட்டைக் கடக்கும் முயற்சியைக் கைவிட்டனர் வெள்ளையர். ஆனாலும் ஆசையும் வேகமும் அடங்கவில்லை! பிரித்தாளும் தந்திரத்தில் நன்கு தேறிய அந்த அன்னியரின் மூளை பலமாக வேலை செய்தது. அதன் வலை விரிப்பிலே பட்டனர் சில கோழைத் தமிழர்கள். அவர்களில் ஒருவனே உடையத் தேவன்!

காட்டை வளைக்க வேண்டும் என்றால் முதலில் மனிதர்களை வளைக்க வேண்டும் என்ற தந்திரம் ஆங்கிலேயர்களுக்கு இப்பொழுது நன்றாகப் புரிந்து விட்டது. உடையத் தேவனை அந்தப் பகுதிக்கு மன்னன் என்று பொம்மைக் கொலு வைத்து, அதன் மூலம் பல வஞ்சகச் சூழ்ச்சிகள் செய்ய முனைந்தனர் ஆங்கிலேயத் தலைவர்கள்.

இதன் பயனாக மகா வீரர்களான மருது பாண்டியர்களுக்கும் ஊமைத் துரைக்கும் என்ன நேரிட்டது என்பதைச் சரித்திரம் கூறுகிறது. ஆனால் முருகையாத் தேவன்? அவனுடைய வாழ்வில் என்ன நேர்ந்தது?

சிறு வயல் தீக்கிரையான பிறகும், காளையார் கோவிலைப் பிடிக்கும் முயற்சியில் கம்பெனிப் படையினர் தளர்ந்து பின் வாங்க முனைந்த பிறகுங்கூட, மருது பாண்டியனின் அந்தரங்க வீரனான முருகையா காட்டை விட்டு வெளியே வரமுடியவில்லை. நாளும், வாரங்களும், மாதங்களுமாக ஓடிக் கொண்டிருந்தன. மருது பாண்டியர், கோட்டை விட்டுக் கோட்டை, ஊர் விட்டு ஊர் என்று மாறி மாறிச் சென்று, எதிரிகளைத் திகைக்க வைத்து வந்தனர். இதெல்லாம் குறித்து முருகையாத் தேவனுக்கு மகிழ்ச்சிதான். ஆனால் வள்ளியம்மை? முருகையாவின் வலிமையான உள்ளத்தில் ஒரு மென்மை இருந்தது என்று பார்த்தோம் அல்லவா? அந்த மென்மை நாளாக நாளாக வலிமையாக வேதனை செய்ய ஆரம்பித்தது! சண்டை போட்டுக் கொண்டே யிருந்தால் நினைப்பு அதிலேயே நிற்கும். இப்பொழுது அப்படி நேரடியான சண்டையும் இல்லை. இங்கிருந்து அங்கே, அங்கிருந்து இங்கே, பிறகு இன்னொரு இடம் என்று இடம் மாறிக் கொண்டே பதுங்குவதிலும், வெளியே தலை காட்ட முடியாமல் சிறைவாசம் போன்று காட்டுக்குள்ளே வாழ்வதிலும் முருகையாத் தேவனுக்கு அடிக்கடி—அதிலும் இரவில் ஏகாந்தமாக நிலா வெளிச்சத்தில் மரத்தடியில் படுத்திருக்க நேரும் போதெல்லாம்—வள்ளியம்மையின் நினைவுதான் வரும்! சீக்கிரமே திரும்பிவந்து குன்றக்குடிக் கோவிலிலே கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகக் கூறி விட்டு அல்லவா புறப்பட்டான்! இப்பொழுது எத்தனை நாட்கள் ஆகிவிட்டன!

நல்ல பௌர்ணமி. காட்டிலே நிலவு எரிப்பதைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? வானமும் பூமியும் சேர்ந்து வெள்ளி மூலாம் பூசிக் கொண்டிருந்த அந்த மோகன நிலவில், ஒரு மருத மரத்தின் அடியில் தனியாகப் படுத்திருந்தான் முருகையா. வள்ளியம்மையின் நினைவுகளிலே வட்டம் சுற்றிக்கொண்டிருந்தது, அவனுடைய மனம். அப்பொழுது "முருகு!" என்று அன்பாக யாரோ கூப்பிடும் குரல் கேட்டது. முருகையா திரும்பிப் பார்த்தான்.

(அடுத்த இதழில் முடியும்)

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road. Kilpauk, Madras-10. Editor: M. P. Somasundaram.

## FIRST IN 1904 (WE BUILT IT.)

முதன் முதலாக இந்தியாவில் தபால் மற்றும் பிரயாணிகள் போக்கு வரத்து



சாதனமாக ஏற்பட்ட வண்டியை நிர்மாணித்து ஓட்டியவர்கள் ஸிம்ஸன்ஸ்

# STILL FIRST IN COACH BUILDING



எல்லாவித சேஸிஸ்களுக்கும் ஏற்றபடி பாடிகளை நிர்மாணிக்க ஏற்றுக் கொள்கிறோம். தனிப்பட்டவர்களின் தேவைக்கும் திட்டங்களுக்கும் பொருத்தமாகவும் நிர்மாணிக்கிறோம். நீண்டகாலம் நீடித்து நிற்கக்கூடிய பஸ் பாடி வேலையை விரும்பினால், நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய சிறந்த ஸ்தாபனம் — ஸிம்ஸன்ஸ்.

## Simpson & Co. Ltd

MOUNT ROAD, MADRAS-2.

PIONEER COACH BUILDERS IN INDIA SINCE 1840

கிளைகள்: பெங்களூர்-உதகமண்டலம்-திருச்சிராப்பள்ளி-சிகந்திராபாத் (டெக்கான்)

**REGISTERED No. M. 4392**
*Registered as newspaper in Ceylon*